# வான்மீகரும் தமிழும்

ஆசிரியர்

திரு. நாராயணையங்கார்

அ. இராஜகோபாலன்
22, தமிழ்ச்சங்க வீதி,
மதுரை.

First Edition



| | | |
|---|---|---|
| Title | : | **Vanmeegarum Thamizhum** |
| Author | : | Thirunarayana Iyengar |
| Number of Copies | : | 1000 |
| Number of Pages | : | 211 + 9 |
| Date of Publication | : | May 2000 |
| Size of the book | : | Demi 1x8 |

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA-TIRUPATI DEVASTHANAMS UNDER THEIR SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS.

Price : **Rs.45/-**

| | | |
|---|---|---|
| Laser Typeset at | : | **Novelty Prcss**<br>3, Dhanappa Mudali Street,<br>Madurai - 625 001. |
| Printed at | : | **Lukshmi Screens**<br>81/47, Gopala Kothan Street,<br>Madurai - 625 001. |

# அணிந்துரை

கலையிலங்கு மொழியாளர்
பேராசிரியர் Dr. இரா. அரங்கராஜன், மதுரை.

மதுரை மாநகர்க்கண் நான்காம் தமிழ்ச்சங்கம் 1901 செப்டம்பர் 14ஆம் நாள் பாண்டித்துரைத் தேவரால் நிறுவப்பெற்றது. இச்சங்கத்தின் உறுப்புக்களாகச் செந்தமிழ்க்கல்லூரி, பாண்டியன் புத்தகசாலை, நூல் ஆராய்ச்சித்துறை, அச்சகம் முதலியவை அமைந்து செயலாற்றி வந்தன. 1903 ஆம் ஆண்டு முதல் 'செந்தமிழ்' என்னும் திங்கள் இதழ் ஒன்று வெளியிடப்பட்டு வருகிறது. இதைத் தொடக்கத்தில் முறையே ரா. இராகவையங்கார், திரு. நாராயணையங்கார் முதலான பேரறிவாளர்கள் ஆசிரியர்களாக இருந்து திறம்பட நடத்தினர். அன்னவர்களில் திரு. நாராயணையங்கார் ஸ்வாமி செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவினராய்க் கற்றுத் துறைபோகிய வித்தகராக விளங்கினார். வடமொழியில் தருக்கம், வியாகரணம், நியாயம், மீமாம்ஸை ஆகிய சதுஸ்சாஸ்திரங் களையும் முற்றிலும் கற்றுச் சங்கத்துச் சான்றோர் இயற்றிய தண்டமிழ் நூல்களைத் தாமிட்ட வழக்காய்ப் பெற்றிருந்தார். திரு. நாராயணையங்கார் ஸ்வாமி இருமொழிக் கடல்களின் நிலைகண்டு உணர்ந்ததோடன்றி ஸ்ரீவைஷ்ணவ ஸத்ஸம்ப்ரதாய கிரந்தங்களில் தெளிவுற்ற ஞானாதிகராகவும் பிரகாசித்தார். ஸ்வாமியின் எழுத்தாற்றலையும் நிரூபணஸாமர்த்யங்களையும் ஸம்ப்ரதாயஜ்ஞான வைசத்யத்தையும் கண்டும், கேட்டும் அறிந்து கொண்டவரான பெருமாள் கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர், அவரை மிகவும் பாராட்டி 'ப்ரத்யக்ஷ அகஸ்த்யர்' என்று தாம் நடத்திவந்த ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையில் புகழ்ந்து விருது வழங்கினார். அஃது அவர்க்கு ஏற்கும் பெரும் புகழ்;

பொருள்சேர் பெரும் புகழ். திரு. நாராயணையங்கார் ஸ்வாமி செந்தமிழ் இதழிலும், ஹரிஸமய திவாகரம் இதழிலும் சமயவிசேஷங்களில் எழுதியிருந்த கட்டுரைகள் அறிவுக்கு விருந்து; ஆய்வுக்கு அருமருந்து. அவருடைய

1. வான்மீகரும் தமிழும்
2. அண்டகோள விருத்தி
3. ஸ்ரீதேசிக ப்ரபந்தம்
4. அமிருதரஞ்ஜநி ('செய்யேல் மறம்' பாசுரப்பொருள்)
5. 'பொருத்தம் பொருந்தலும்' பாசுரப்பொருள்
6. நாதமுனிகளும் பாலேய் தமிழும்

என்ற கட்டுரைகள் ஒரு தொகுப்பாக்கி வெளியிடப்படுகின்றன.

வான்மீகரும் தமிழும் என்ற கட்டுரை விரிவான ஆராய்ச்சியாகும். புறநானூற்றில் தலையாய ஓத்துக்கள் என்று போற்றப்படும் பாடல்களில் வான்மீகியார் பாடல் ஒன்று தவத்தைச் சிறப்பித்து அமைந்துள்ளது. அவ்வான்மீகியார் வடமொழியில் இராமாயணம் பாடிய முனிவரர் என்பது திரு. நாராயணையங்காரின் முடிவாகும். அப்பாடல் தலைச்சங்க காலத்தது; திரேதாயுகத்தில் தோன்றிய பண்டைய தண்டமிழ்ச் செய்யுளாகும்.

இந்நூற்கண் ஸ்வாமி வான்மீகி முனிவர் தமிழறிந்த வடமொழிப்புலவர்; இராமாயணகாலத்தில் தமிழ்மொழி முனிவர் களால் போற்றப்பெற்றது; அயோத்தி அரண்மனைக்கண் அரசியல் மொழியாகச் சிறந்து விளங்கியது; இராமனாலும் சீதையாலும் பேசப்பட்ட மொழி; அசோகவனத்தில் அனுமன் பிராட்டியுடன் பேசிய மொழி; பல சொல்லி என்? அரிய மரபுகள் யாவும் வடமொழி இராமாயணத்துள் பொதிந்திருக்குமாறு உபகரித்த மொழி செந்தமிழ் மொழி என்ற உண்மைகளைச் சான்றுகளோடு நிரூபித்துள்ளார்.

அண்டகோள விருத்தி என்ற கட்டுரையில் ஆழ்வார் திருவுள்ளத்தை அடியொற்றி விருத்தியுரை செய்திருக்கிறார். ஸ்வாமி நம்மாழ்வார் சங்கத்தாருக்கு அனுப்பிய அகவற்பா ஒன்று ஆழ்வார்திருநகரியில் கிடைத்தது. அஃது அண்டகோளத்து என்ற முதற்குறிப்புடைய தனிச்செய்யுள். கூடற்புராணத்தில் இச்செய்யுள் பற்றிய குறிப்பு உளது. முதலில் செய்யுள் மட்டும் செந்தமிழில் வெளியிடப்பட்டது. அதற்குப் புலவர் பெருமக்கள் பொருள் காண இடர்ப்பட்டனர். அஞ்ஞான்று நம் ஸ்வாமி அச்செய்யுளுக்கு விரிவுரை எழுதி அரிய செய்திகளை உலகிற்கு அறிவுறுத்தினார். அதில் தண்டமிழ் இயல்பும் ஆரியத்தமிழின் அருமையும் பற்றிக் கூறியுள்ளார். வேதாந்த விழுப்பொருளை உள்ளடக்கிய தமிழ் ஆரியத்தமிழ் என்றும் மற்றது அதனினும் தண்ணியது என்றும் விளக்கியுள்ளார். இருவகைத் தமிழுக்கும் உள்ள வேறுபாடுகளைப் புலவர்களுக்கு உளம் கொள்ளுமாறு காட்டியுள்ளார். ஆரியத் தமிழில் பாட்டுடைத் தலைவனும், கிளவித்தலைவனும் ஒருவரேயாதலையும் அவ்வொருவரும் திருமாலே என்றும் கிளவித்தலைவன் பெயரை இற்றெனக் கிளத்தல் பொருந்தும் என்றும் காட்டியுள்ளார்.

ஸ்ரீதேசிக ப்ரபந்தம் என்ற கட்டுரையில் வேதாந்தவாசிரியரான ஸ்வாமி தேசிகன் இயற்றிய தமிழ்ச்செய்யுட்களின் தொகுப்பான தேசிக ப்ரபந்தத்தின் வைலக்ஷண்யத்தை பல ப்ரகாரங்களில் விளக்கியுள்ளார். தேசிகன் இயற்றிய இருபாடற் பொருள்களைக் காண்டல் அரிதானபோது நம் ஸ்வாமியே முன்னெழுந்து அவற்றின் மேம்பொருள், ஆழ்பொருள், நுண்பொருள் ஆகியவற்றை உலகிற்கு உணர்த்தியருளினார். நவமணிமாலையில் 9ஆவது பாசுரமான 'பொருத்தம் பொருந்தலும்' என்ற செய்யுளுக்கும், அமிர்தரஞ்ஜநி 22ஆவது பாசுரமான 'செய்யேல் மறம்' என்ற செய்யுளுக்கும் திரு. நாராயணையங்கார் எழுதிய சீரிய உரை கட்டுரைகளாக இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

நாதமுனிகளும் பாலேய் தமிழும் என்ற கட்டுரையில் வளவேழுலகு பதிகத்தின் இறுதிப் பாசுரத்தின் ஒரு தொடர் விளக்கப்பட்டிருக்கிறது. திருவாய்மொழியை 'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்' என்று ஆழ்வாரே வெளியிட்டுள்ளார். இத்தொடர் நாதமுனிகளைச் சுட்டுகிறது என்று ஸ்வாமி நிரூபித்துள்ளார். பாலேய் தமிழ் என்பது திருவாய்மொழியைக் குறிப்பது. திருவாய்மொழியை யோக ஸாக்ஷாத்காரத்தில் முந்துறப் பெற்றவர் நாதமுனிகள்; அவர்தாமும் ஆழ்வாரிடம் பத்திமை பூண்டவர்; அவர்தாமே இசையில் வல்லுநர் என்றும், மேலும் இத்தொடர் மதுரகவிகளுக்கும் பொருந்துமாறு அமைந்துள்ள படிகளையெல்லாம் ஸ்வாமி பொருத்திக்காட்டியிருப்பது ஸம்பிரதாய ரசிகர்களுக்குப் பெருவிருந்தாக அமைந்துள்ளது.

இவ்வரிய கட்டுரைகளை ஒரே நூலாக வெளியிட்டிருக்கும் திரு. அ. இராஜகோபாலன் புலனழுக்கற்ற அந்தணரான நம் ஸ்வாமியின் நினைவினைத் தமிழுலகத்துக்கு ஏற்படுத்தியுள்ளார். தொடர்ந்து அவர்தம் முயற்சி பலனளிக்குமாறு திருவேங்கடவன் திருவடிகளில் பணிந்து போற்றுகிறேன்.

மதுரை
24.5.2000

அன்பன்
இரா. அரங்கராஜன்

# நூன்முகம்

மதுரைத் தமிழ்ச்சங்கத்தையும், செந்தமிழ் இதழையும் அதன் பத்திராதிபராக இருந்த திரு. நாராயணையங்காரையும் அறியாத தமிழறஞரிரார். திரு. நாராயணையங்காருடைய பாண்டித்யம் பலரால் பாராட்டப்பட்டது. அவரது அணுகுமுறையும் ஆராய்ச்சித்திறனும் அறிஞர்களால் போற்றப்பட்டவை. தான் சரியென்று கருதிய முடிவை அவர் ஒன்றன்மேலொன்றாக மேற்கோள்களை அடுக்கித் தர்க்க ரீதியாக நிறுவுகிற பாங்கு கற்றோரைக் கவரக்கூடியது. அவருடைய கட்டுரைகளைத் தொகுத்து நூல்களாக வெளியிடவேண்டுமென்ற என் நீண்ட நாளைய அவா தற்போது நிறைவேறத் தொடங்கியிருக்கிறது. அந்த வகையில் இது முதல் நூல்.

இதிலடங்கியுள்ள ஆறு கட்டுரைகளும் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டவை. வான்மீகரும் தமிழும் (1938) அமிர்தரஞ்ஜநி (1939) ஆகியவை செந்தமிழிலும் நாதமுனிகளும் பாலேய் தமிழும் (1945) ஸ்ரீவைஷ்ணவ நண்பனிலும், அண்டகோளவிருத்தி (1931) செந்தமிழிலும், ஹரிசமய திவாகரத்திலும் வெளிவந்தவை. தேசிக ப்ரபந்தம் (1934) என்னும் விஷயம் மதுரை ஸ்ரீ வேதாந்த தேசிக பக்த சபையின் மூன்றாவது ஆண்டுவிழாவில் ஆசிரியர் நிகழ்த்திய உரை. இவற்றோடு ஸ்ரீ நிகமாந்த மகாதேசிகன் அருளிச்செய்த நவமணிமாலையின் ஒன்பதாம் பாசுரத்திற்கு ஆசிரியர் எழுதிய உரையும் இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

கட்டுரைகளில் கிரந்த எழுத்தில் காட்டப்பட்டிருந்த மேற்கோள்களும், சொற்களும் மட்டும் அவசியம் கருதித் தமிழ் எழுத்தில் (உச்சரிப்புக்கு ஏற்றவாறு எண்களோடு) மாற்றப்

பட்டிருக்கின்றன. மணிப்பிரவாள நடையில் இயல்பாகவே தமிழ்ச்சொற்களோடு இடையிடையே கலந்து வருகிற வடமொழிச் சொற்கள் ஆசிரியர் எழுதியிருந்தபடியே அச்சிடப்பட்டிருக்கின்றன. அமிர்தரஞ்ஜநியில், வடமொழியறியாதவரும் புரிந்துகொள்ள உதவும் வகையில், கடினமான வடமொழிச் சொற்களுக்கு ஆசிரியரே அடிக்குறிப்பாகத் தமிழில் பொருள் காட்டியிருப்பது அப்படியே வெளியிடப்பட்டிருக்கிறது. வரிகள் இப்போதுபோலத் தனித்தனிச் சொற்களாக இடைவெளியிட்டு அச்சிடப்படாமல் அக்கால வழக்கப் படியே (பொருளொடு படிப்பதற்கேதுவாகச் சில சொற்களைச் சேர்த்தும் வேண்டிய இடங்களில் இடைவெளியோடும்) மூலத்திலிருந்து மாறுபடாமல் அச்சிடப்பட்டிருக்கின்றன.

கிரந்த எழுத்திலிருந்த மேற்கோள்களைத் தமிழில் மாற்றி உச்சரிப்புக்கேற்றவாறு எண்ணிட்டுக் கொடுத்த பேராசிரியர் திரு. எஸ். ஜெகதீசன் அவர்களுக்கும், எனக்குத் தூண்டுகோலா யிருந்து, இந்த நூல் வெளிவரத் துணைபுரிந்த பேராசிரியர் திரு. இராம. பொன்னப்பன் அவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன்.

இந்த நூல் வெளிவருவதற்கு நிதியுதவி புரிந்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தார்க்கும், அழகாக அச்சிட்டு வழங்கிய லெக்ஷ்மி ஸ்கிரீன்ஸ் உரிமையாளர் எஸ். கோபாலன் அவர்களுக்கும் நன்றி.

மதுரை
24.5.2000

அ. இராஜகோபாலன்

# உள்ளே...

# வான்மீகரும் தமிழும்

## 1. ஒரு தனிச்செய்யுள்

வான்மீகிமுனிவர் வடமொழியில் ஆதிகாவியமான இராமாயண மியற்றியவர் என்பதும் இவருடைய காவியநயங்களைக் கண்டு கொண்டாடாத பண்டிதர்களில்லை என்பதும் இவரது காவிய நடையைப் பின்பற்றியே வடமொழியிற் பற்பல காவியங்கள் உண்டாயின என்பதும் ஐதிகம்.

இவர் இத்தகைய சிறந்த காவியமியற்றுதற்குமுன் வடமொழியில் வேதங்களும் சாஸ்திரங்களும் இருந்தன; ஆனால் அவை இன்பம்பயக்கும் காவியநடையைக் கற்பிக்கத்தக்கனவல்ல; மக்கள் அறியவேண்டும் உண்மைப் பொருள்களையே உணர்த்துவன. ஆதலால் இவர் இத்தகைய காவியமியற்றும் ஆற்றல் படைத்ததற்குக் காரணம் வேறிருக்கவேண்டும். அது, இவரது தவமகிமையும் நாரதபகவானுபதேசமும் பிருஹ்மாவின் அநுக்கிரகமும் என்பர். அவை ஒருபுறமிருந்தாலும், சரித்திரவாராய்ச்சியாளர்கண்கொண்டு நோக்குவார்க்கு இவர் இராமாயணமியற்றுதற்குமுன் சிறந்த காவியங்களமைந்த வேறுபாஷையிற் பயிற்சியுடையராயிருந்து அதிலுள்ள சிறந்த கவிநயங்களையெல்லாம் தெரிந்துகொண்டவரா யிருக்கவேண்டுமென்பது தோன்றாதிராது.

இவர்காலம், அகத்தியர் தொல்காப்பியர் முதலிய சங்கமருவிய சான்றோர்களும் பாடல்சான்ற பல பனுவல்களும் தமிழ்நாட்டிற்

பரவியிருந்த காலம் என்பதும், இவர்க்குத் தமிழ்நாட்டில் மிகப் பயிற்சியுண்டென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபு.

இதனைச் செந்தமிழ்த்தொகுதி 7ல் (பகுதி 3-ல் பக்கம் 119 முதல் 132 வரை) **ஸ்ரீமான் மு. இராகவையங்காரவர்கள்** எழுதி வெளியிட்ட **ஸ்ரீவான்மீகரும் தென்னாடும்** என்னும் ஆராய்ச்சியுரையாலும் அறியலாம்.

இவர் காலத்திலிருந்த சங்கமருவிய சான்றோர்களால் பாடப் பட்ட சில செய்யுட்களையுமுடையது **புறநானூறு**. அதில் ஒரு பாட்டுப் பாடியவர்பெயர் **வான்மீகியார்** என்றும் **வான்மீகையார்** என்றும் எழுதப்பட்டிருந்தது. அவ்விரண்டுபெயரும் வால்மீகி என்னும் வடமொழிப்பெயரின் திரிபாகக் காணப்படுகின்றன.

வால்மீகி என்னும் அப்பெயருடையவர் தவத்தால் பெரியர் என்று ஐதிகம் சொல்லுகிறார்கள். இவர் தாமேயும் தம்தவப்பெருமை தோன்ற "வால்மீகி[1]ர்ப[4]க[3]வான் ருஷி:" என்று கூறியிருக்கிறார். அன்றியும், இவர் தம் ஆசிரியரான நாரதபகவானைக் கூறுமிடத்தும் "த[1]ப[1]ஸ்வாத்[4]யாய நிரத[1]ம்" என்று தவத்தை முதன்மையாகச் சொல்லிச் சிறப்பித்திருக்கிறார். இவற்றால் இவர்க்குத் தவவொழுக் கத்தில் மிக்க அநுபவமும் அபிமானமும் உண்டென்று தோன்றுகிறது.

புறநானூற்றிலுள்ள வான்மீகியார்பாட்டும், தவத்தை வியந்து கூறுகிறது. அது செஞ்சொற்றொடர்களால் செவிக்கின்பம் பயப்பதாய் ஆழமுள்ளதாய் அகன்று விரிந்த பொருளுடையதாய் வேதாந்த முடிவான பொருள்களை வெளியிடுவதாய் வான்மீகிமுனிவரியற்றிய இராமாயணவாக்கோடு ஒத்துவிளங்குகிறது. அது, உரையில்லாத பகுதியிலுள்ளது. ஆயினும், அறிஞர்களது ஆராய்ச்சிக்கு உதவுமென் றெண்ணி அப்பாட்டும், உரையும் இங்கு வரையப்பெறும். அப்பாட்டு,

*பருதி சூழ்ந்தவிப் பயன்கெழு மாநிலம்*
*ஒருபகல் எழுவர் எய்தி யற்றே*
*வையமுந் தவமுந் தூக்கிற் றவத்துக்கு*
*ஐயவி யனைத்து மாற்றா தாகலிற்*
*கைவிட் டனரே காதலர் அதனால்*
*விட்டோரை விடாஅள் திருவே*
*விடாஅ தோரிவள் விடப்பட் டோரே (358)*

என்பது.

இதன் பொருள் : - "இருளைத்துரத்துங் கதிரவனாற் சூழப்பெற்றதாயும், உலகியலான பொருளும், இன்பமுமாகிய பயன்களால் விளங்குவதாயும் உள்ள இப்பெரிய நிலமடந்தையை அரசர் தமக்கு உரிமையாக எய்தி வாழ்ந்துவருகின்ற அவ்வாழ்க்கை எத்தகையதென்றால், ஒருதினப்பொழுதைப் பலகூறுசெய்து இரவி முதலிய எழுவரும் ஒரொருவர் ஒரொருகூறு கொண்டு ஒருவர் பின்னொருவராய் உறவும் பகையும் உச்சமும் நீசமுமான நிலைவேறு பாடுகளையடைந்து ஒருசிலர் பாபரும் ஒருசிலர் சுபரும் ஒருசிலர் சிறியரும் ஒருசிலர் பெரியருமாய் மாறி மாறி ஒரைநாயகராய் உரிமையெய்தியொழிவதுபோலும் நிலையில்லாத பல வேறுபாடு டையசின்னாட் பல்குறைச் சிறுவாழ்க்கையேயாம். மற்று நிலையான குறையற்ற பெருவாழ்க்கை யாதோவென்னில், அது தவப்பயனா யுள்ளது. அத்தவப்பயனின் பெருமையை அறியவேண்டின், இவ்வையத்தின்வாழ்வை ஒருதட்டிலும் தவப்பயனான பரலோகப் பெருவாழ்வை ஒருதட்டிலும் வைத்துச் சீர்தூக்கிப்பார்த்தால் தவப்பயனாகிய வாழ்விற்கு வையத்தின் வாழ்வு ஒரு சிறுவெண் கடுகினளவும் ஆற்றாது நொய்தாகும். ஆதலால் நில மடந்தையைக் காதலித்திருந்த முடிமன்னர் பலர் அவளைக் கைவிட்டுத் துறவு பூண்டனர். இங்ஙனம் இந்நிலமடந்தையைக் கைவிட்டோரைத்

திருமகளாகிய தாய் விடாது பற்றி வாயிலாய் நின்று * இறைவனிடம் வேண்டி, அவர் முன்செய்துபோந்த பிழைகளைப்பொறுப்பித்து, நித்தியநிரதிசயப்பேரின்பத் தாராவமுதூட்டி வாழ்வியாநிற்பள். இவ்வுலகவாழ்க்கையைப் பற்றிக்கொண்டு அதனைக் கைவிடாது நிற்பவர் திருமகளால் கைவிடப்பட்டவராய்ப் பிறவித்துன்பத்துக் குள்ளாயிருப்பர்" என்பதாம்.

இதனுள், பதப்பொருள்களொழிந்தவை சொற்குறிப்புப் பொருட்குறிப்புக்களாலும், இசையெச்சத்தாலும், பொருளாற்றலாலும் வருவித்துரைக்கப்பட்டன. இப்பாட்டின் பொருள்முழுதும், ஈண்டு ஒருங்குரைக்கமுடியாமையால் ஒருவாறு சிறிதளவே தொகுத்துரைக் கப்பட்டது; இதன்பின்வரும் குறிப்புரையுள் சிறிது விரிக்கப்படும்.

இனி, இதன் குறிப்புரை வருமாறு :-

'பருதிசூழ்ந்த................மாநிலம்' என்றது (இந்நிலவுலகை ஆள்வோர் கருத்துப்பற்றி அவரது ஆசைப் பெருக்கத்துக்கிசைய) அகண்ட பூமண்டலத்தையும் என்பதுபடநின்றது.

இதற்குக் கவியின்கருத்து வேறு. அது பேரொளியுடைய கதிரவன் நாள்தோறும் சூழ்ந்துசூழ்ந்து போக்கிப்போக்கிச் செல்லவும் போகாது பின்தொடர்ந்துவந்துமூடும் பேரிருளையுடைய...... உலகம் என்பதாம். இது பொருட்குறிப்பு என்னும் தொனிப்பொருளாகக் கொள்ளத்தக்கது. இத்தொனிப்பொருளினின்றும் பிறிதொரு தொனிப்பொருள் தோன்றுகிறது. அது, அஞ்ஞானவிருளால் மூடப்பட்ட உலகம் என்பதாம்.

இதனாற் போந்தபொருள்: அஞ்ஞானமடியாகத் தோன்றும் யான் எனது என்னும் செருக்கினால் பழிபாவங்களையஞ்சாது

* 'வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை' என்றார் பிறரும்

பொருளையீட்டிக் காமபரவசராய்த் துன்பமிடைந்த சுகாபாசபோகந் துய்த்துப் பிறப்பிறப்பிற் சுழன்றுதிரிதற்கு இடமான உலகம் என்பதாம்.

அஞ்ஞானத்தை இருளாகவும் அதனைப் போக்குதற்கு உதிக்கும் அவதாரபுருஷர்களைக் கதிரவனாகவும் கொள்ளும் படி சொல்லியிருப்பது குறிப்பால்வந்த உருவகவிசேடம்.

இக்கருத்துக்கொண்டே,

*"இருள்தருமா ஞாலத்தே இன்பமுற்று வாழும்,*
*தெருள்தருமா தேசிகனைச் சேர்ந்து"* என்றும்,

*"ஆதித்ய ராமதிவாகர அச்சுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் (போனது) ................ வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே"* என்றும்

*பெரியோர்களும் பணிப்பர்.*

இவற்றுள்ளும் அஞ்ஞானத்தை இருளாகவும், அதனைப் போக்குதற்கு உதிக்கும் அவதாரபுருஷர்களை ஆதித்தியர்களாகவும் கூறியிருப்பது காண்க.

இதனால் போந்தபொருள்: ஞானபாநுக்களான அவதார புருஷர்கள் அப்போதப்போது தோன்றிப் போக்கியும் போகாது தோன்றிக்கொண்டுவரும் அஞ்ஞானவிருளையுடையது இவ்வுலகம் என்பதாயிற்று.

இங்கு, பேரொளியுடைய பருதிசூழ்தலைக்கொண்டு உலகில் பேரிருளுடைமை தோன்றுமாறு காட்டியிருப்பது ஆச்சரியமானதொரு முரணணியாயிற்று. மேலும், அடிதோறும் முரணணிபடத் தொடுத்திருத்தலை ஆராய்ந்தறிந்துகொள்க.

பருதிசூழ்ந்த இம்மாநிலம் என்று சுட்டினமையால் நசூர்யோபா$^{4}$தி,$^{1}$நச$^{1}$ந்த்$^{3}$ரமா: என்றற்றொடக்கத்து வேதவாக்கியங் களாற் சொல்லப்பட்டபடியே இரவி முதலிய சுடரொளிவேண்டாது

ஸ்வயம்ஜோதிமயமாயும் ஞானமயமாயுமுள்ள பரலோகம் ஒன்றுண் டென்பதை மறுதலைக்குறிப்பால் நினைப்பித்ததாயிற்று.

நிலம் என்றது நிலவுலகவாழ்க்கைக்கு ஆகுபெயராயிற்று. மாநிலத்தையென்னும் இரண்டாம்வேற்றுமை தொக்கு மாநிலம் என நின்றது.

மாநிலம் ஆள்வாரைப் பின் **காதலர்** எனக் கூறுதலால் மாநிலத்தை ஒரு மடந்தையாக உருவகஞ்செய்ததாயிற்று. இதனால், **பயன்கெழுமாநிலம்** என்றது அகப்பொருட்பயன் **கெழுவிய** மாநிலம் என்க. இதன் மறுதலைக்குறிப்பு, பேரின்பப் பெருவாழ்வுள்ள நிலம் பரலோகம் என்பதாம். **மாநிலம்** என்றது பெத்தசேதநராகிய **மாக்கள்** வாழும் நிலம் என்றவாறு. இதன் மறுதலைக்குறிப்பு, முக்தசேதனர் வாழ்க்கைக்குரிய நிலைபெற்ற பேருலகம் பரலோகம் என்பதாம். பின் 'ஒருபகல் எழுவர் **எய்தியற்றே**' என்ற **வினையுவமை**யால் மாநிலத்தை முடிமன்னர் **எய்துதல்** எனப் பொருளிடத்தும் அவ்**வினை** போந்து நின்றது. **எழுவர்** என்ற உவமத்தின் வினைமுதற்கேற்பத் தகுதி நோக்கிப் பொருளிடத்து முடி**மன்னர்** என்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.

பருதி சூழ்ந்த இப்பயன்கெழுமாநிலத்தை முடிமன்னர் எய்துதல் ஒரு பகல் எழுவர் எய்தியற்று எனக் கூட்டிமுடிக்க.

'ஒரு பகல்' என்றது ஒரு தினப்பொழுதை என்றவாறு. இது சினையாகுபெயர். '**எழுவர்**' என்றது தொகைக்குறிப்புப்பெயராய் ஈண்டுத் தினந்தோறும் ஹோராநாயகராக மாறிமாறிவரும் இரவி முதலிய கோள்கள் எழுவரையுமுணர்த்துகிறது. அவர் அங்ஙனம் மாறி மாறி வருதலைப் பின்வரும் செய்யுளானும் அறிக. அது,

*அருக்கன் புகர்புந்தி இந்துதுன் மந்தனொ டந்தணன்சேய்*
*இருக்குங் கடிகை இரண்டரை யாமவை யெய்திடிலோ*
*மரிக்கும் மணஞ்செயும் மாலையுஞ் சூட்டும் மகிழ்ந்திருக்கும்*
*சிரிக்குஞ் சிறையிடும் செல்வமுண் டாமெனத் தேர்ந்துகொள்ளே.*

என்பது.

இதுகாறும் கூறியவற்றால் அகப்பொருட்பயனில் உவர்ப்பும் இவ்வுலக வாழ்க்கையின் அல்பா[1]ஸ்தி[2]ரத்[1]வமான சிறுமையும் நிலையாமையும் குறிப்பாற் கூறியவாறாயிற்று.

இனி, இதனினும் பெரியதும் நிலையுடையதும் யாதென வினாவெழுமன்றே. அவ்வினாவிற்கு விடையாகக் குறிப்பாற்காட்டிய பரலோக வாழ்க்கைதனையே கூற்றால் அளந்துகாட்டுகிறார்.

*'வையமும் தவமும் தூக்கில் தவத்துக்கு*
*ஐயவி யனைத்தும் ஆற்றாது'* என்று.

வையம் - இவ்வுலகம். இது இவ்வுலக வாழ்க்கையான சிற்றின்பத்துக்கு ஆகுபெயர். தவம் - தவப்பயனாகிய பேரின்பத்துக்கு ஆகுபெயர். இதனால் பேரின்ப வாழ்விற்கு உபாயம் தவம் என்பதும் உடன்கூறினாராயிற்று. தூக்கின் என்றது வேதாந்த நூல்களால் ஆராயுமிடத்தில் என்றவாறு. இதனால் சிரவண மனனம் சொல்லப் பட்டது; கல்வியிற்பிரிவும் காட்டியதாயிற்று. தவத்துக்கு-தவப் பயனாகிய பேரின்ப வாழ்க்கைக்கு. ஐயவி - சிறுவெண்கடுகு. அது இங்கு 'இம்மி' என்னும் அளவுபோலும் மிகச்சிறிய பின்னாம்சமான அளவையுணர்த்துகிறது. உலகம் ஐயவியனைத்தும் ஆற்றாது என எழுவாய் வருவித்து முடிக்க. உலகின் சிறுமையளவிற்கு ஐயவியை உறழ்பொருளாகக் காட்டித் தவத்தின் பெருமைக்கு எடையொன்றும் காட்டாமையால் அது அளவிறந்ததென்பதாம்.

வேதம், இவ்வுலகவாழ்க்கையில் ஒன்றானும் குறையில்லா துயர்ந்ததொரு காமவின்பத்தை ஒன்று என்னும் எண்ணாகவைத்து அவ்வின்பத்தைக்கொண்டு பேரின்பத்தை அளந்துகாட்டத் தொடங்கி நூற்றானுறழ்ந்துறழ்ந் தடுக்கடுக்காயடுக்கி அளந்தும் அளக்க முடியாதென்று கைவிட்டது. அத்தகைய பேரின்பத்தைக் கொண்டு இதனுள் சிற்றின்பத்தையளந்து பேரின்பத்தின் பெருமை தோன்றச் செய்திருப்பது வியப்பு.

ஆற்றாதாகலின் என்றது ஞாபகவேதுவாய் ஆற்றாதென்றறி தலால் என்னும் தெளிதற்பொருள்பயப்பதாயிற்று.

காதலர் கைவிட்டனர் என மாறுக. காதலர் என்றது இறந்த காலவினைக்குறிப்புப் பெயராய் முன்பு காதலராயிருந்தவர் என்னும் பொருள்பயப்பதாய் அகப்பொருட்பயனெய்திநின்றமையை நினைப்பித்துப் பெருந்திணையொழுக்கங்காட்டியவாறு. கைவிட்டனர் என்றது பற்றறத்துறந்தார் எனப் புறத்திணையான துறவுகூறியவாறு.

காதலர் கைவிட்டனர் என நேரே கூறாது, கைவிட்டனரே காதலர் என மாறிக்கூறிய ஓசைநயத்தால், புதல்வர்ப்பயந்த பின்றைக் காமமுதலியகடிந்து தவஞ்செய்யக்கடவதென்னும் கடவுளாணையைக் கடந்து காமபரவசராயிருந்தோர் ஒருவாறு தேறி அப்பற்றை விட்டனர் என்னும் குறிப்புணர்த்திக்கொண்டு அதன் விடலருமைகுறித்து நின்றது. இது வந்தாரையாவழிக்கு என்னும் உலகவழக்கின் குறிப்புப் போல்வதொரு குறிப்பு.

காதலர் கைவிட்டனர் என அநுபவங்காட்டியவாறு, முடி மன்னர் கைவிடுதல் கூறவே ஏனையோர் கைவிடுதல் கூறவேண்டாதாயிற்று.

'அதனால்' என்றது காமப்பற்றுவிட்டமையால் என்பதாம். இது திருமகள் விடாதுபற்றுதற்கு ஏதுவாயிற்று. இதனால் வீடடைய வேண்டுவோர், பற்றுவிடுதற்கு முயலவேண்டுமல்லது வீடடைதற்கு முயலவேண்டாவென்பதாம். இது பற்றியே, 'பற்றற்றகண்ணே பிறப்பறுக்கும்' என்றும் 'அற்றது பற்றெனிலுற்றது வீடு' என்றும் கூறுவாராயினர்.

'விட்டாரை' - காமப்பற்று விட்டவரை. 'திரு' என்றது பரம புருஷனுடைய கருணாரூபியும் தேவியுமான திருமகளை. எங்கும் நிறைந்தவனாய்க் காமப்பற்றுவிடுவாரை எதிர்பார்த்திருக்கும்

திருமாலின் நெஞ்சிற்கமலத் துறைபவளாதலால் 'விடாள்' என்றார்; விட்டார், கடவுளின் கருணைக்கிலக்காதல் ஒருதலை என்பதாம்.

'விடாதோர்' என்றது காமப்பற்றுவிடாதோரைச் சுட்டிநின்றது. 'இவள்விடப்பட்டோர்' என்றது கருணைக்கிலக்காகாதவராய்ப் பிறவித் துன்பமடைவர் என்பதாம். 'அருளில்லார்க் கவ்வுலக மில்லை' என்பது பொய்யாமொழி.

விட்டோரை விடாள், விடாதோ ரிவள்விடப்பட்டோர்: என உடன்பாட்டானும் எதிர்மறையானும் தவப்பயனாகிய பொருளை வலியுறுத்தியிருப்பதும், சொல்லும் பொருளும் முரணத்தொடுத் திருப்பதும் வியக்கத்தக்கன.

இன்னும் பலகுறிப்புக்களும் நயங்களும் இச்செய்யுளுள் அமைந்துள்ளன. அவையெல்லாம் கூறில் மிக விரியுமென்றெண்ணி விடப்பட்டன.

ஈண்டுக் காட்டியவற்றோடு மற்றுமுள்ள பலவகை நயங்களையும் நோக்குங்கால் இச்செய்யுளியற்றியவர் சாதாரணமான தமிழ்ப்புலவரில்லையென்றும் வேதவேதாந்தமுதலிய சாஸ்திரங் களிலும் பயிற்சியுடையவரென்றும் வான்மீகிமுனிவர்வாக்குப் போலும் காவியநயங்களமைந்த வாக்குடையவரென்றும் அறியலாம்.

மேலும், இதனுள்,

*"விட்டாரை விடாஅள் திருவே*
*விடாஅதோரிவள் விடப்பட்டோரே"*

என உடன்பாட்டானும் எதிர்மறையானும் கூறியிருக்கும் இப்பொருளை,

*'இவள் சந்நிதியாலே காகம் தலைபெற்றது;*
*அஃதில்லாமையாலே ராவணன் முடிந்தான்'*

என்று ரஹஸ்யத்திரயநூல் இராமாயணத்திலிருந்து வெளியிட்டிருக்கிறது. இதனாலும் வான்மீகிமுனிவர்கருத்தை ஒத்திருக்கிறது,

இன்னும் வீடளிக்கும் பரம்பொருள் திருமாலாயிருக்கச்செய்தே **'விட்டாரைவிடாஅன் மாலே, விடாஅதோ ரிவன் விடப்பட்டோரே'** என நேரே கூறாது, திருமகளை வாயிலாகக்கொண்டு 'விட்டாரை விடாஅள் திருவே, விடாஅதோரிவள் விடப்பட்டோரே' என்று இக்கவி கூறுதலால் இவர்க்குத் திருமாலினும் திருமகளிடத்து மிக்க ஆர்வமுண்டென்று தோன்றுகிறது.

இக்கொள்கை வான்மீகிமுனிவருக்குமுள்ளதென்பதை, முதன் முதல் அவர் பாடத்தொடங்கும்பொழுதே ராமசரித்திரச் சுருக்கமாய மைந்த செய்யுளில் 'மாநிஷாத[3]' என்று முதலில் மா என்னும் திருமகளைப்பற்றிக்கொண்டே திருமாலை அழைக்கின்றார் என்பது கொண்டறியலாம். அன்றியும், 'கா[1]வ்யம் ராமாயணம் க்[1]ருத்[1]ஸ்நம் ஸீதா[1]யாச் சரித[1]ம் மஹத்[1]' என்பதனால் மஹா காவியமான ராமாயண முழுதும் சீதையின் சரித்திரமாயுள்ளது என இராமபிரானிலும் சீதை பெருமையுடையவள் என்று பாராட்டியிருக்கிறார். இதனாலும் ஒன்றுபட்ட கருத்துடைமை தோன்றுகிறது.

வான்மீகி கருத்தையறிந்த **லோகதேசிகனும்**, 'ராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது' என்று ராமாயணத்தின் பொருள்முடிவு கூறுகிறார். (இங்குச் சிறையிருந்தவள் என்றது தேவர்களைச் சிறை விடுவிக்கைக்காகத் தான் ராவணன் கோட்டையில் சிறைப்பட்டிருந்த சீதை என்பதாம்.)

வான்மீகியார்பாடியதென்றுகாணப்படும் இப்புறநானூற்றுப் பாட்டுப் பாடினார்கருத்துக்களையும் பாட்டின் சொன்னயம் பொருணயமுதலியவற்றையும் உற்றுநோக்குவார்க்கு இது வான்மீகி முனிவர்வாக்குத்தானோ வென்ற சந்தேகமுண்டாகலாம். அதனைத் தெளிதற்கு அவர்க்குத் தமிழ்ப்பயிற்சியுண்டாவென்பதை ஆராய வேண்டும்.

## 2. சுந்தரகாண்டம்

ஸ்ரீ வால்மீகிமுனிவர், ராமாயணத்தில் காண்டங்கள்தோறும் சொல்லப்படும் விஷயம்பற்றியே ஒவ்வொருகாண்டத்துக்கும் பெயரிட்டிருக்கிறார். அதாவது; இராமனுடைய பாலசரிதம்கூறும் காண்டம் பாலகாண்டம் என்றும், அயோத்தியில்நடந்த இராமசரிதம் கூறும் காண்டம் அயோத்தியாகாண்டம் என்றும், அரண்யத்தில் நடந்த இராமவிருத்தாத்தங்கூறும் காண்டம் ஆரண்யகாண்டமென்றும், யுத்த சரிதம்கூறும் காண்டம் யுத்தகாண்டமென்றும் பெயரிட்டிருக் கிறார் என்பது.

அம்முறையில் சுந்தரகாண்டமென்று ஒரு காண்டத்துக்குப் பெயரிட்டிருக்கிறார். சுந்தரம் என்ற சொல்லுக்கு வடமொழியில் அழகுடையது என்பது பொருள். இதனால் அக்காண்டம் அழகுடைய காண்டம் என்று பொருள்கொள்ளக்கிடக்கிறது. இவ்வாறு பொருள் கொண்டால் அக்காண்டத்தின் அழகுபற்றிப் பெயரிட்டதாகுமல்லது அக்காண்டத்திற் பல இடங்களிற் சொல்லப்பட்ட இராமவிருத்தாந்தம் பற்றிப் பெயரிடப்பட்டதாகக் கொள்ளற்கிடமில்லை; கொள்ளின் அந்த ராமவிருத்தாந்தங்களுக்குச் சுந்தரம் என்ற பெயர் பிரசித்தமாயிருக்க வேண்டும்; அங்ஙனமில்லாமையால் அது பொருந்தாது.

அக்காண்டத்திற் சொல்லப்படும் விஷயசமுதாயத்துக்கும் சுந்தரம் என்ற பெயரில்லை. அதனால் விஷயசமுதாயம்பற்றியிடப் பட்ட பெயராயும் இல்லை.

ஆதலால், கிஷ்கிந்தாகாண்டத்துக்கு அதிற்சொல்லப்படும் விஷயசமுதாயம்பற்றிப்பெயரிடாமல் அதிற்சொல்லப்பட்டதொரு

சிறுபகுதியின்விஷயம்பற்றிக் **கிஷ்கிந்தாகாண்டம்** என்று பெயரிட்டிருப்பதுபோலச் சுந்தரகாண்டத்துக்கும் அதனுட் சொல்லப்பட்ட சரிதங்களுள் ஒரு சிறுபகுதியுட்சொல்லப்பட்ட விஷயம்பற்றிப் பெயரிட்டிருக்கலாமென்று தோன்றுகிறது.

கிஷ்கிந்தாகாண்டத்திற்சொல்லப்படும் விஷயங்கள் பலவாயிருந்தாலும் அவற்றுளெல்லாம் இராமன்சம்பந்தமான சிறந்த விஷயம் சுக்கிரீவனுக்குக் கிஷ்கிந்தாராஜ்யபட்டாபிஷேகம் செய்வித்ததே. அதுகாரணமாகக் கொண்டு கிஷ்கிந்தாகாண்டம் என்று பெயரிட்டிருக்கிறார். அவ்வாறு சுந்தரகாண்டத்துட் சொல்லப்பட்ட விஷயங்களுட் சிறந்தவிஷயம் யாதெனில் சீதை இராமபிரான்பிரிவாற்றாது உயிர்துறக்கமுயலுந்தருணத்தில் அனுமான் சென்று கூறிய **இராமபிரான்வடிவழகே. அவ்வடிவழகேசீதையை உய்யக்கொண்டமையால் அச்சிறப்புப்பற்றி** அக்காண்டத்துக்குச் **சுந்தரகாண்ட**மென்று பெயரிட்டிருக்கலாமென்று தோன்றுகிறது. இப்பொருளே யார்க்கும் புலப்படத்தக்கது.

ஆயினும், இது வடமொழிவழக்கிற் பொருந்தவில்லையென்பது பற்றி வடநூல்வல்லார் வெவ்வேறுபொருள்கூறுவர்.

அவர் அவ்வாறுகூறுதற்குக் காரணம்; அக்காண்டத்துட் சொல்லப்படும் பெரும்பான்மையான பொருள்களைக்கொண்டு பெயரிடாமல் மிகவும் சிறுபகுதியுள் இராமசௌந்தர்யம்கூறியிருப்பது பற்றிப்பெயரிட்டிருப்பர் என்றல் பொருந்தாதென்பதும், சுந்தரம் என்ற சொல்லுக்குச் சௌந்தர்யத்தையுணர்த்தும் ஆற்றல் இல்லை யென்பதுமே.

இவை காரணமாகமாட்டா. ஏனெனில், வெவ்வேறு பல விஷயங்கள் அடங்கியதாயுள்ளதொரு பெரும்பகுதிக்கு, அப்பகுதிக்குள் எங்கேனும் ஓரிடத்திற்சொல்லப்பட்ட சிறந்ததொரு சிறு

பகுதியிலுள்ள விஷயம்பற்றியும் பெயரிடுதல் வான்மீகிமுனிவர் காலத்திலுமிருந்த தமிழ்ப்புலவர்வழக்கு. இது, நோக்கு என்னும் சொல் நயமுடையதாய்ப் பெரும்பயனளிக்கத்தக்கது. இதனைப் பின் வருவனவற்றுள்ளும் கண்டறியலாம்.

வான்மீகிபகவானுடன் சமகாலத்தவராயிருந்த திரணதூமாக்கி நியென்னும் தொல்காப்பியமுனிவர் தாமியற்றிய தொல்காப்பியத்துள் **பெரும்பகுதியாகிய ஓரதிகாரத்துக்கு** அவ்வதிகாரத்தினிடையே கூறிய **பொருளியல்** என்னும் சிறந்ததொரு சிறுபகுதியிற் சொல்லப்பட்ட விஷயத்தினால் **பொருளதிகாரம்** என்று பெயரிட்டிருக்கிறார். இதனை, அதன் உரைகாரர் **நாண்மீனின்** பெயர் **நாளுக்காவது** போல்வதோர் ஆகுபெயர் என்று உரைவரைந்தமையான், இதனை நாண்மீன் போன்ற அப்பகுதியின் குறுமையும், நாள்போன்ற அத்தொகுதியின் நெடுமையும் கண்டறியலாம்.

இன்னும், திருவள்ளுவரியற்றிய முப்பாலுள் இடையிலுள்ள தொரு பெரும்பகுதிக்கு அதனுட்சொல்லப்படும் பொருள்கள் பலவற்றுள்ளும் இடையேயுள்ள மிகச்சிறியபகுதியாகிய **பொருள்செயல்வகை** என்னும் அதிகாரத்திற் சொல்லப்பட்ட விஷயம் பற்றிப் **பொருட்பால்** என்று பெயரிட்டிருக்கிறார்.

மேலும், இளங்கோவடிகளியற்றிய சிலப்பதிகாரமும், அந்நூலின் இடையேயுள்ள மதுரைக்காண்டத்தின் இடைப்பட்ட சிலம்பின் செய்தி கூறிய சிறுபகுதிப்பொருள்கொண்டு பெயரிடப்பட்டிருக்கிறது.

பதிற்றுப்பத்துப் பாட்டுத்தோறும் இடையிடைகாணப்படும் சிறந்ததொரு சொற்றொடர்விஷயங்கொண்டு பெயரிடப்பட்டிருக் கிறது.

இவ்வாறாகப் பெயரிடுவதாற் போந்த பயன் யாதெனில் நோக்கு என்னும் காவியநயம் அமைவதாம். அதாவது: சொல்லுணர்ச்சி

மாத்திரத்தாற் பொருள்புலப்படாது அப்பெயருடைய பகுதி முழுதும் உற்றுநோக்கப் பொருள்புலப்படவைத்தலாம். இதனால் படிப்பவர்கள் அதன் பெயர்க்காரணந் தெரியவேண்டி அப்பெயரிடப்பட்டபகுதி முழுதும் ஊன்றியுணரும் உணர்ச்சியுடையராதலும் ஆராய்ச்சியுடையராதலும் பயனாம்.

இத்தகைய பயனுடைமையால் சிறுபகுதிப்பொருள்கொண்டு பெரும்பகுதிக்குப் பெயரிடுதல் குற்றமாகமாட்டாதென்பது தமிழறிஞரது தொன்றுதொட்ட துணிபு.

இவ்வாறே வடமொழியிலும் ம்ருச்$^{1}$ச$^{1}$க$^{1}$டி$^{1}$க$^{1}$ம் (மண்ணியல் சிறுதேர்) என்னும் நாடகத்துக்கு நுவல்பொருள்பற்றி சா$^{1}$ருத$^{3}$த்$^{1}$த$^{1}$ச$^{1}$ரித$^{1}$ம் என்று பெயரிடாமல் அதனுள் சிறந்த சுவையுடையதொரு சிறுபகுதியின் நுவல்பொருள்பற்றி ம்ருச்$^{1}$ச$^{1}$க$^{1}$டி$^{1}$க$^{1}$ம் (மண்ணியல் சிறுதேர்) என்று பெயரிட்டிருப்பதும் நோக்கத்தக்கது.

ஆதலால் கிஷ்கிந்தாகாண்டத்துக்கு அதனுட்சொல்லிய சிறுபகுதியான கிஷ்கிந்தாராஜ்யபட்டாபிஷேகம் சிறந்தமையால் அவ்விஷயம்பற்றிப் பெயரிட்டிருப்பதுபோலவே சுந்தர காண்டத்துக்கும் அதன் சிறுபகுதியுட் சொல்லப்பட்ட ராம சௌந்தர்யம் சிறந்தமையால் அவ்விஷயம்பற்றிப் பெயரிட்டிருக் கலாம் என்பதில் தடையில்லை.

இனி, சுந்தரம் என்ற தர்மிவாசகம் சௌந்தர்யம் என்னும் தர்மத்தை உணர்த்துமா என்பது ஆராயத்தக்கது.

சுந்தரம் என்பது வடசொல்லாய்த் தமிழில்வந்து வழங்கப் படுகிறது. வடமொழி வல்லார் அதற்கு அழகுடையது என்னும் குணிப்பொருளல்லது அழகு என்னும் குணப்பொருள் கொள்வதில்லை என்பது உண்மையே. தமிழ்மொழிப்புலவர்கள் அழகின்

பரியாயமாகிய சௌந்தர்யம் என்னும் பண்பையும் சுந்தரம் என்ற சொல்லால் வழங்குவர். இதனை,

*"சுந்தரம் அணங்கு மஞ்சு சொக்குத் தேசிகம் அம்பொன்னே*
*சந்தம் காரிகை கவின் பூத் தளிமமே வாமம் காமர்*
*அந்தமே மயமே யொண்மை ஆய்ந்த வாறேழுந்தானே*
*வந்திடும் அழகின் பேராம்"*

என்ற நிகண்டினாலும் அறியலாம். சிந்தாமணியுள், "சுந்தரநில மிசைச் சொரிதலின்" என்ற தொடரிலுள்ள 'சுந்தரம்' என்ற சொல்லைப் பண்புப்பெயராகவேகொண்டு, 'சுந்தரம்' நன்மை என்று குறிப்புரை எழுதப்பட்டது. அழகும் நன்மையேயாதலால் அது நன்மையென்றதும் பொருந்தும்.

இவ்வாறே தமிழ்ப்புலவர்கள் வடமொழியிலுள்ள குணிப் பெயர்களைக்கொண்டு பெரும்பாலும் குணப்பொருள்களையும் வழங்குவர். இதனைத் தரித்திரம் என்னும் குணிப்பெயரால் தாரித்திரியம் (வறுமை) என்னும் குணத்தையும், கவி (புலவன்) என்னும் குணிப்பெயரால் அக்கவியின் செயலாகிய கவிதை என்னும் பண்பையும், வீரம் என்னும் குணிப்பெயரால் வீரியம் என்னும் பண்பையும் வழங்குதல் காணலாம். கம்பரும், "வீரமுங் களத்தே போட்டு வெறுங்கையோ டிலங்கை புக்கான்" என்றது போலப் பலவிடங்களில் வழங்குவர்.

சங்ககாலத்துநூலாகிய மணிமேகலையுள்ளும்,

*'சாத்தியதன்மமாயுள்ள அநித்தமும்*
*சாதநதன்மமாயுள்ள மூர்த்தமும்'*

என்பன போல, வடமொழியுள் அநித்யத்துவம், மூர்த்தத்துவம் என்று சொல்லவேண்டிய குணப்பொருள்களை (தர்மங்களை)

அநித்தம், மூர்த்தம் எனக் குணிப்பெயரால் பல இடங்களில் வழங்குதல் காணலாம்.

இவ்வாறே சுந்தரம் என்ற குணிப்பொருளின் பெயர் (தர்மிவாசகம்) சௌந்தர்யம் (அழகு) என்ற குணப்பொருளின் பெயராக (தர்மவாசகமாக) வழங்குதல் தமிழ்ப்புலமைபற்றிய வழக்கென்றறியக்கிடக்கிறது.

தமிழ்ப்புலவர்தாம் தர்மிவாசகமான சுந்தரபதத்தைத் தர்மவாசகமாகக் கூறுதல் குற்றமன்றோ? எனில் அன்று. தர்மதர்மி களுக்கு ஒற்றுமைச்சம்பந்தம் உண்மையால் தர்மிவாசகம் தர்மியை யுணர்த்தும்போதே தர்மத்தையும் உடனுணர்த்துவதல்லது தர்மத்தை ஒழித்துத் தர்மியைமாத்திரம் உணர்த்தமாட்டாது; ஆதலால் சுந்தரம் என்ற தர்மவாசகத்தால் சௌந்தர்யமும் உணர்த்தப்படும்.

அல்லது ஊர்அடங்கிற்று என்பதில் ஊர் என்னும் சொல் ஊர் என்னும் இடப்பொருளைவிட்டு ஊரிலுள்ளார் என்னும் இடத்து நிகழ்பொருளையுணர்த்துவதுபோலச் சுந்தரம் என்னும் சொல்லும் அப்பொருளினிடத்துள்ள சௌந்தர்யத்தை யுணர்த்துமெனக் கொள்ளினும் தவறாகாது.

அன்றியும், குணிப்பொருளுணர்த்தும் ஸுந்த³ரம் என்னும வடமொழிப்பெயரின் தற்பவமாய்ச் **சுந்தரம்** எனத் தமிழில் வந்து குணப்பொருளிலும் வழங்கப்பெற்று ஆற்றல்படைத்த தமிழ்ச் சொல்லை மறித்தும் வடமொழியில் தற்பவமாக்கிக்கொண்டு ஸுந்த³ரம் எனக் குணப்பெயராக வழங்கினமையால் அது பண்புப் பெயராயிற்றெனினும் இழுக்காது.

வடமொழி நூல்களில் தமிழினின்றும் பாலன், ஆணி முதலிய சொற்கள் போலத் தற்பவமாகவும் தற்சமமாகவும் தொன்றுதொட்டு வழங்கப்பட்டுவருவன பலவுள. அவை பின் வேண்டுழிவேண்டுழி ஆராய்ந்து காட்டப்படும்.

அன்றியும், சௌந்தர்யம் என்பதைவிடச் சுந்தரம் என்ற சொல் செவிக்கின்பம்பயப்பதாயும், எழுத்து, மாத்திரை அசை இவைகள் சுருங்கியதாயும் கல்லாதார்க்கும் பொருள்புலப்பாடுடையதாயும் இருப்பதுபற்றிச் **சுந்தரகாண்ட**மென்று பெயரிட்டிருக்கலாமென்று கொள்ளுதற் கிடமிருக்கிறது.

ஆனால் அவர் (வான்மீகிமுனிவர்) வடமொழிவன்மையு முடையராயிருத்தலால் வடமொழிக்காவியத்துள் வடமொழிவழக்கின் வழுவாது சௌந்தரியகாண்டமென்று பெயரிடாது தமிழ்வழக்குப் பற்றிச் சுந்தரகாண்டம் என்று பெயரிடுவானேன்? என்றால் அவர்க்குத் தமிழ்வழக்குக்களும் கொள்ளத்தகும் என்பது உடன்பாடாயிருக்கு மானால் அதனை வடமொழிப்புலவர்க்கும் அறிவிக்கவேண்டி ஞாபகமாக, இடையிடையே தம் நூலுள் தமிழ்வழக்குக்களை யெடுத்தாளுதலும் பொருத்தமுள்ளதே.

இதனாற்பயன், தமிழ் நூல்களில் இன்னோரன்ன தமிழ்வழக்குக்களைக் கண்டு வடமொழிவல்லார் அரியதமிழ் நூல்களைப் பிழையுடையனவென்றிகழாது நன்குமதித்து அவற்றையும் கற்றுணரவேண்டும் என்று அறிவித்தலாம்.

இவ்வாறான ஞாபகங்களை நூல்களினிடையிடையேகாட்டித் தம் கருத்துக்களைப் புலப்படுத்துவது நூலாசிரியர்களது இயல்பு.

அவ்வியல்புபற்றித் தமிழ் நூலியற்றிய திருவள்ளுவரும் தமக்கு வடநூன்முடிபுகளும் உடன்பாடென்பதைத் தமிழ்ப்புலவர்க்கு அறிவிக்கவேண்டி முதற்குறளில் தமிழ்நூல்முடிபுபற்றி **ஆதிப்பகவன்** என்னாது, வடநூன்முடிபுபற்றி **ஆதிபகவன்** என்று கூறினார்.

இதனாற் பயன், திருக்குறளுள் வடநூன்முடிவுபற்றி வழங்கப்பட்ட **'நாணென்னும் நல்லாள்' 'அதிநுட்பம்' 'சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லி' 'ஆபயன்'** முதலிய தொடர்களும் பிறவும்

தமிழ்ப் புலவர்களால் இலக்கணவழுவென்று தள்ளாது கொள்ளத்தக்கனவென்பதாம்.

அரிய நூலியற்றுபவர் தம் கோட்பாடுகளைக் கூற்றாற் காட்டாது குறிப்பாகிய ஞாபகத்தாற் காட்டிச்செல்வது முறையேயாதலால் அம்முறைபற்றி வான்மீகிமுனிவர் தமிழ்நூன்முடிபும் தமக்கு உடன்பாடென்பது தோற்றுவிக்கும் ஞாபகமாகச் சுந்தரகாண்டம் என்று பெயரிட்டிருக்கலாமென்று தோற்றுகிறது.

ஆனால் வான்மீகத்தில் இதனையொழியத் தமிழ்ப் புலமை பற்றி அவர் வழங்கியவை எவையேனும் உண்டோவென்று ஆராய வேண்டும்.

# 3. ஒரு பழமொழி

**பழமொழி**யென்பது ஒருவர் தாம் சொல்லக்கருதியபொருளை முடித்தற்குரிய குறிப்புடன் நுணுக்கமும் சுருக்கமும் விளக்கமும் மென்மையும் உடையவாக உலகவழக்கிலும் செய்யுள் வழக்கிலும் தொன்றுதொட்டுப் பயின்றுவரும் சொற்றொடராம்.

இப்பழமொழிகளை வடமொழிப்புலவர்கள் **லோகோக்தி** எனப் பெயர்கொடுத்துக் காவியங்களில் எடுத்தாளுவர்.

வடமொழி உலகவழக்காய் இல்லாமையால் பழமொழி உலகவழக்கான தேசபாஷையில் மட்டும் உள்ளதென்பது வடமொழிவாணர்க்கு உடன்பாடாயிற்று.

தமிழ்மொழியுள் தொல்காப்பியனார் **முதுமொழி** என இதற்குப் பெயர்கொடுத்து இலக்கணமும் கூறுவர். (முதுமொழியென்பதும் பழமொழியின் பரியாயமே.)

அவ்விலக்கணம்,

> *நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
> மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
> குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
> ஏது நுதலிய முதுமொழி யென்ப.

என்பது.

* தொல். பொருள். சூ.489

இதன்பொருள்: 'கூரிதாய்ச் சுருங்கி விழுமிதாய் எளிதா
இயற்றப்பட்டுக் குறித்தபொருளொன்றனை முடித்தற்கு வருமாயின் அங்ஙனம் வந்ததனை முதுமொழியென்றுசொல்லுவர் புலவர் என்றவாறு.

இவ்விலக்கணத்துள் செய்யுள்வழக்கில் வருவது என்றேனும் உலகவழக்கில் வருவது என்றேனும் விதந்துகூறாமையால் தமிழில் அவ்விருவகைவழக்கினும் பழமொழி வருமென்பது இவர்க்கு உடன்பாடாயிற்று.

இவற்றால், வடமொழியுள் பழமொழியில்லையென்பதும் தமிழ் மொழியுள் உண்டென்பதும் பெறப்பட்டன.

இதன் உதாரணம்:-

*உழுத வுழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால் - வழுதியைக்
கண்டன கண்ணீருகுப்ப நெடும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு.

என்பது.

இதனுள், வழுதியைக் கண்டகண்கள் உவகைநீருகுப்ப அவனைக் காணாத தோள்கள் பசந்தன; இஃதென்போலவெனின் **உழுதசெய்யில் ஊர்க்கன்று மேயக் கழுதை காதறுப்புண்டதுபோலும்** என இயைபின்மைகாட்டி முடிக்குமாறு காண்க.

இவ்வாறாக வான்மீகிமுனிவர்க்குச் சமகாலத்தவரான தொல்காப்பியமுனிவராற் சொல்லப்பட்ட இலக்கணங்களமைந்த பழமொழிகள் பலவுள்ளன; அவற்றுள் ஒன்று,

* தொல். பொருள். சூ.489 உரைமேற்கோள்

**பாம்பறியும் பாம்பின்கால்** என்பது.

இப்பழமொழி, தம்மினத்தரல்லாதாரால் அறியப்படாதிருக்கும் படி மறைந்திருக்கும் இருப்பை முடித்தற்கு உரியதாக வழங்கப்பட்டு வருகிறது.

இது, **பழமொழி** என்னும் நூலுள்,

*புலமிக் கவரைப் புலமை தெரிதல்*
*புலமிக் கவர்க்கே புலனாம் - நலமிக்க*
*பூம்புன லூர பொதுமக்கட் காகாதே*
*பாம்பறியும் பாம்பின கால்*

என்று, 'புலவர் கவிகளில் மறைபொருளாகக் கூறும் உள்ளுறை முதலிய பலவகைக்குறிப்புக்களையும் புலவர்களே அறிந்து பயன் கொள்வார்; பிறர் அறியார்' என்னும் பொருளை எடுத்துக்காட்டாய் நின்று முடித்தவாறு காண்க.

இதனுள், **பாம்பின்கால்** என்றது பாம்பு மறைந்துகிடக்கும் இருப்பிடத்துக்குப் பெயர்.

இப்பழமொழி ஸ்ரீவால்மீகிபகவானால் செய்யப்பெற்ற ஸம்ஸ்கிருதராமாயணத்தில் மொழிபெயர்ப்பாக வழங்கப்பட்டிருக்கிறது.

அது,

*அஹிரேவஹ்யஹே: பா[1]தா[3]ன் விஜாநாதி[1] என்பது.

இதன் பொருள் : அஹே: - பாம்பினுடைய. பா[1]தா[3]ன் - கால்களை, அஹிரேவ-பாம்பே. விஜாநாதி[1] - அறியும். என்பது.

* சுந்தரகாண்டம். ஸர்க்கம் 42. சுலோகம். 9.

இது சுந்தரகாண்டத்தில் அனுமான் சீதையைக் கண்டு கணையாழிகொடுத்து அவள் சோகம் தீரப் பேசிப்போனபின்பு அரக்கியர்கள் அநுமானை ஐயுற்றுச் சீதையைநோக்கி இவன் யார்? எங்கிருந்து என்னகாரியமாக இங்கு வந்தான்? நீயும் அவனும் பேசியது என்ன விஷயம்? உன்னிடம் அவன் என்ன சொன்னான்? நீ அஞ்சவேண்டாம்; சொல். என்று வினவ, அதற்கு விடையாக அச்சந்தோன்றச் சீதை சொல்லிய மறுமொழிகள் சில வுள்ளன.

அவை:-

அஞ்சத்தக்க வடிவுடைய அரக்கர்களை அறிவதற்கு எனக்கு என்ன வல்லமையுண்டு? **பாம்பின்கால் பாம்பறியும்.** இவன் எதைச் செய்வானோ அதை நீங்களே அறிவீர்கள். ஐயப்படவேண்டாமே! நானும் இவனை அஞ்சுகிறேன். இவன் இங்கு எதற்கு வந்தானோ? இவனை நான் அறியேன். இவனை நினைத்தபடி வடிவுகொள்ளும் அரக்கனென்றே எண்ணுகிறேன்: என்பன

இங்குச் சீதை சொல்லக்கருதிய பொருள்:- அஞ்சத்தக்க வடிவுடைய அரக்கர்களை அறிவதில் எனக்கு என்ன வல்லமையுண்டு? **இவன் என்ன செய்வானோ அதை நீங்கள் அறிவீர்கள்; நான் அறியேன்:** என்பன.

இவற்றைத் திருஷ்டாந்தங்காட்டி முடித்தற்குப் **பாம்பின்கால் பாம்பறியும்** என்ற பழமொழி வழங்கப்பட்டிருக்கிறது. இது 'பாம்புகளின் கரப்பிடங்களைப் பாம்பறிவதல்லது பிறரறியாதவாறுபோல அரக்கர்களின் கரப்புவேடங்களை அரக்கராகிய நீங்களே அறிவீர், யானறியேன்' எனத் திட்டாந்தங் காட்டி முடிக்கத்தக்கதாயுள்ளது.

இதன் மொழிபெயர்ப்பாகிய வடமொழிவாக்கியத்திலுள்ள பா'த³ சப்தம் காலின் பிரதிபதமாயிருந்தாலும், பாம்புகரந்துறையும்

இடவிசேடங்களை யுணர்த்தாது, நடக்கும் உறுப்பாகிய கால்களையே யுணர்த்துதலால் அது இங்குப் பொருளற்றதாகிறது.

எங்ஙனமெனில் பாம்புகளுக்குப் பா[1]த[3]ம் (கால்கள்) இல்லையென்பது கண்கூடாய் அறியத்தக்கது. அன்றியும், பாம்புக்குக் காலிலி என்று தமிழ்நிகண்டுகளிலும், உரக[3]: (நெஞ்சாற் செல்வது), ப[1]ந்நக[3]: (காலாற் செல்லாதது) என வடமொழிநிகண்டுகளிலும் பெயர் வழங்கப்பட்டிருப்பதால் நூல்வழக்காலும் காலில்லையென்றே கொள்ளக்கிடக்கிறது. ஆதலால் பாம்பின்கால்களைப் பாம்பே அறியும் என்பது, முயலின்கொம்புகளை முயலே அறியும், பிறர் அறியார்: என்பதுபோலும் பொருளற்ற கூற்றா மென்க.

பாம்புக்கு வடமொழியில் கூ[3]ட[4]பா[1]த்[1]: (மறைந்த கால்களை யுடையது) என்று ஒரு பெயரிருப்பதால் அம் மறைந்த கால்களைப் பாம்பறியும், பிறர் அறியார்: என்று பொருள்சொல்வதானாலும் பயனில்லை.

ஏனெனில்? அரக்கர் பிறரறியாமல் கரந்துறையும் கள்ள வேடத்தை அவ்வரக்கர்கள் அறிந்துகொள்வதனால் ஒருவர்க்கொருவர் உதவியாய்நின்று கருதியகாரியங் கைக்கொள்ளுதல்போல், அப்பாம்புகளுக்கு, உடலில் மறைந்துகிடக்கும் கால்களைப் பாம்புகள் அறிந்துகொள்வதனால் யாது பய னுள்ளது? அதனுடலில் மறைந்துகிடக்கும் கால்களைப் பிறர் அறிந்துகொள்வதனால் அதற்குண்டாகும் தீங்கென்ன? பிறர் அறிந்துகொள்ளாததனால் அப்பிறர்க்குள்ள கேடென்ன? ஒருவகையாலும் பயனில்லாமையால் 'பிறர்க்குக் கேடுவிளைக்கக்கருதி அரக்கர்கொள்ளும் வஞ்சவேடத்தால் கரந்திருக்குமிருப்புக்களை அரக்கர் அறிவார்; பிறர் அறியார்' என்று சீதை சொல்லக்கருதியபொருளைத் திருஷ்டாந்தங்காட்டி முடிப்பதற்கு மொழிபெயர்ப்பான பாதசப்தம் சிறிதும் பயன் படாதாயிற்று என்க.

அன்றியும், இங்குச் சீதை சொல்லக்கருதியபொருள் 'தம்மைப் பிறர் அறியில் தமக்கு ஏதமுண்டாமென்றுகருதிக் கள்ளவேடத்தால் தம்மை மறைத்துக்கொண்டு பிறர்பொருள் கவர்ந்துதிரியும் அரக்கர்களைப் பிறர் அறிதலரிது; அவ்வரக்கர்களே அறிவர்' என்பதாம்.

இப்பொருளில் அரக்கருக்குப் பாம்பும், அவ்வரக்கர் மறைந்துறையும் வேடங்களுக்கு அப்பாம்பு மறைந்துறையும் இடமாகிய கால்களும் திட்டாந்தமாகவேண்டும். வடமொழி வாக்கியத்துள்ள பா$^{1}$த$^{3}$ சப்தம் பாம்பு மறைந்துறையும் இடத்துக்குப் பெயராகாது நடக்கும் கால்களுக்கே பெயராயிருத்தலாலும், பாம்பின் உடலுள் மறைந்திருக்கும் அக்கால்கள் பாம்பு மறைந்திருப்பதற்கு இடமாகாமையாலும் பொருத்தமில்லதாம்.

அன்றியும், கூ$^{3}$ட$^{4}$பா$^{1}$த்$^{1}$ (மறைந்தகால்களையுடையது) என்னும் பெயருள், கூ$^{3}$ட$^{4}$ சப்தம் அபா$^{4}$வலக்ஷகமாகநின்று, *'அருங்கேடன்' என்பது கேடில்லாதவன் என்னும் பொருளுணர்த்துவது போல இல்லதை உள்ளதுபோலவைத்துக் கூறும் வழக்குவகையால் காலில்லாதது என்னும் பொருளே பயப்பதாலும் பொருந்தாதாயிற்று.

ஆதலால் அப்பொருளையொழித்துப் **பாம்பறியும் பாம்பின்கால்** என்னும் தமிழ்ப்பழமொழிப் பொருளைக் கொண்டால் மிகவும் பொருத்தமாய் முடியும்.

எங்ஙனமெனில், பாம்பறியும் **பாம்பின்கால்** என்னும் தமிழ்ப் பழமொழியிலுள்ள **கால்** என்னும் சொல் பாம்பிற்கு நடக்கும் கால்களில்லாமையால் அதனையுணர்த்தாது, **கண், கால், கடை, இடை, அளை, புடை** முதலிய இடவிசேடப்பெயர்களில் ஒன்றாய்ப் பாம்பு மறைந்திருக்கும் இடத்தையுணர்த்துமாதலால், 'பாம்பு மறைந்திருக்கு

* திருக்குறள். 210.

மிருப்பைப் பாம்பேயுணர்வதுபோல அரக்கர் கள்ள வேடத்தால் மறைந்திருக்குமிருப்பை அரக்கரே அறிவர்' எனப்பொருளொடு பொருந்துமென்க.

அரக்கர் கள்ளவேடத்தில் மறைந்து தீமைபுரிதலைத், 'தவமறைந் தல்லவைசெய்தல்' போலக் கொள்க.

இங்கு அளை என்னும் இடவிசேடப்பெயர் பாம்பளை, அளைமறிபாப்பு எனவும், புடை என்னும் இடவிசேடப்பெயர் பாம்புப்புடை எனவும் வழங்கப்படுதல்போல அவற்றோடொத்த கால் என்னும் இடவிசேடப்பெயர் பாம்பின்கால் எனப் பாம்பு மறைந்து கிடக்கும் இடத்தை யுணர்த்துகிறது.

கால் என்றது நடக்கும் கால்போல ஒடுங்கியும் முடங்கியும் நீண்டும் கிடக்கும் இடவிசேடத்தை யுணர்த்துவதாம். இதனை வாய்க்கால் குளக்கால் கால்வாய் கொடிக்கால் என்னும் பெயர்களிலுள்ள கால் என்னும் சொல்லால் உணர்த்தப்படும் இடங்களிலும் காண்க.

அவ்வாறு ஒடுங்கியும் இடுங்கியும் நீண்டுமிருக்கும் பாறையறை, கல்லிடுக்கு, விரிவு முதலிய இடங்கள் பாம்பின் உடற்கிடக்கைக்கு இசைந்தனவாயும், அவை பிறர் அறியாமல் மறைந்தியங்குதற்கு உரியனவாயும் இருத்தலால் அவற்றைப் பாம்படைதல் இயல்பென்றும் அதனால் அவை பாம்பின்காலென வழங்கப்படுமென்றும் அறியத்தகும்.

இக்காலத்தும் வரிவடிவில் சில உயிர்மெய்யெழுத்துக்களுக்கு உறுப்பாக (ா இவ்வாறு) இடுக்கிபோல எழுதும் இடுக்குள்ள எழுத்தைக் கால் என்று வழங்குதலும் இதற்குச் சான்றாகும்.

ஆகவே, தமிழ்ப்பழமொழியிலுள்ள பாம்பின்கால் என்பதற்குப் பாம்புமறைந்துறையும் இடம் என்றே பொருள்படுதலால், 'பாம்பு மறைந்துறையுமிடம் பாம்பறியும், பிறர் அறியார்' என்பதே தமிழ்ப் பழமொழியின் பொருளாம்.

இப்பொருள் கருதியே 'இன்னபுற்றிற் பாம்பிருக்குமென்று யாரறிவார்?' என உலகவழக்கிலும் வழங்கிவருகின்றனர். அன்றியும்,

> *நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்*
> *அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு - நெஞ்சில்*
> *கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்*
> *கரவிலா நெஞ்சத் தவர்.*

எனச் செய்யுள் வழக்கிலும் இது பயின்றுவருதல் காண்க.

இதனுள்ளும் நெஞ்சிற் கள்ளமுடையதீயோர் தாம் அக்கள்ளம் தோன்றாதிருக்கும்படி மறைந்தியலுதற்கு, அவர்போலத் தீங்கிழைக்கத்தக்க நாகம் பிறர்க்குப் புலப்படாது விடர், புடை, அளை முதலிய கால்களில் மறைந்தியலுதலைத் திட்டாந்தமாகக் காட்டிப் பொருள் முடிக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால், பாம்பறியும் பாம்பின்கால் என்பது, பாம்பு பிறர் அறியாமல் மறைந்தியலுமிடங்களைப் பாம்புகளே அறிந்து ஒன்றோடொன்று கூடி உடனுறைந்து பிறர்க்குத் தீங்குபுரிவதுபோல, அரக்கர் பிறர் அறியாமல் மறைந்தியலும்வேடங்களை அவ்வரக்கர்களே அறிந்து ஒருவரோடொருவர் அளவளாவி உடனுறைந்து பிறர்க்குத் தீங்குபுரிவர் என்றும், அப்பாம்பின் மறைவிடமாகிய கால்களைப் பிறர் அறியில் அதனை யடைந்த பாம்புகள் அப்பிறரால் தீங்கிழைக்கப் படுமாறுபோல அவ்வரக்கரது கள்ளவேடத்தைப் பிறர் அறியில் அப்பிறரால் அவ்வரக்கர் தீங்கிழைக்கப்படுவரென்றும் நுவல் பொருளை முடித்தற்குத் திருட்டாந்தமாய்நின்று பயன்படுவதாகிறது.

பாம்பின் காலாகிய இடங்கள் பிறரால் அறியப்பட்டால் அவற்றைத் தீயிட்டெரித்தும் வெட்டியும் பாம்புகளை வெளிப்படுத்திக் கொல்வர். அதுபோல் அத்தீய அரக்கர் மறைந்தியலும் வேடமும் பிறரால் அறியப்படில் அவ்வரக்கர் படும்பாட்டுக்கு வானரரிடம் சாரணர் பட்டபாடே சான்றாகும். அவர் கள்ளவேடத்தைப் பிறர் அறியாத இடத்தில் அப்பிறர்படும் பாட்டுக்கு மாரீசன் கொண்ட மான்வேடத்தாற் சானகி பட்ட பாடும் சான்றாகும்.

இத்துணை பொருணயங்களமைந்துள்ளது **பாம்பின்கால் பாம்பறியும்** என்னும் பழமொழி.

இது வான்மீகிமுனிவர்காலத்திலேயே (1) நுண்மையும் (2) சுருக்கமும் (3) ஒளியுடைமையும் (4) மென்மையும் என்றிவை விளங்கத்தோன்றிக் (5) குறித்தபொருளைமுடித்தற்குவருதலாகிய பழமொழியிலக்கணங்கள் ஐந்தும் அமைந்ததாய்ப் பயிலப் பெற்றிருப்பதும் நோக்கத்தக்கது.

(1) இதில் **பாம்பின்கால்** என்றது, நடக்கும் கால் என்னும் பொருள் தோன்றுமாறு காட்டி, அப்பாம்பிற்குக் காலில்லாமையை நோக்கி வேறுபொருள் கொள்ள வேண்டுமென் றாராய்ந்தபின் அது பாம்பு மறைந்திருக்கும் இடம் என்னும் பொருள்தோன்றச் செய்தமையால் சொல்நோக்கும் பொருள்நோக்குமாகிய நுண்மையுடைய தாயிற்று.

(2) இரண்டுசீரில் முடிந்தமையால் சுருக்கமுடையதாயிற்று.

(3) உலகப்பிரசித்தமாயிருத்தலால் ஒளியுடையதாயிற்று.

(4) ஓசையால் கடுமையின்றிச் செவிக்கின்பம் பயத்தலால் மென்மையுடையதாயிற்று.

(5) அரக்கரது கள்ளவேடம் இன்னதென அறிதற்கு அரிது என்னும் கருதிய பொருளை முடித்தற்குரிய திட்டாந்தமானமையால் ஏது நுதலியதாயிற்று. ஈண்டு ஏது என்றது உபலக்ஷணமாய் அதற்கு இனமான திட்டாந்தமும் அகப்படநின்றது.

இவ்வாறு இலக்கணங்களமைந்து விளங்கிய **பாம்பின்கால் பாம்பறியும்** என்னும் பழமொழியே, அஹிரேவஹ்யஹே: பா[1]தா[3]ன் விஜாநாதி[1], என்று ஸ்ரீ வால்மீகிபகவானால் மொழிபெயர்க்கப்பட்ட தென்று தோன்றுகிறது.

இப்பழமொழி உலகப்பிரசித்தமென்பதை ஹி சப்தத்தாலும், பிறர் அறியார் என்னும் குறிப்பை ஏவகாரத்தாலும் காட்டி விபக்திவசனங்களை விரித்துரைத்திருப்பதும் மொழிபெயர்ப்பு என்று காட்டுகிறது.

இப்பழமொழியுள் **பாம்பின்கால்** என்பதற்குப் பாம்பு இருக்கும் இடம் என்பதே பொருளாயின் அப்பொருள் தோன்றும்படி அஹிரேவஹ்யஹே: ஸ்தா[2]நம் விஜாநாதி[1] என்று மொழிபெயர்க்காத காரணம் என்னெனில், அவ்வாறு அப்பொருள் வெளிப்படத்தோன்றும் படி மொழிபெயர்த்தால் அப்பழமொழியின்கண்ணுள்ள **நுண்மை** என்னும் இலக்கணத்தை யொழித்து மொழி பெயர்த்ததாகும். அந்நுண்மையும் ஒழியாதிருக்கும்படி காலின் பிரதிபதமான பாதசப்தத்தால் மொழிபெயர்த்தார் என்க.

அல்லது, தமிழ்ப்பழமொழியின் மொழிபெயர்ப்பென்று வெளிப்படத்தோன்றுமாறு அங்ஙனம் மொழிபெயர்த்தாரென்க.

பிரதிபத மொழிபெயர்ப்பில் பாதசப்தம் இடத்தையுணர்த்தாது பொருளற்றிருப்பது குற்றமன்றோ? எனின், அன்று. அவ் வடமொழிவாக்கியம் தமிழ்ப்பழமொழியின் மொழிபெயர்ப்பாதலால்

அம்மொழிபெயர்ப்புத். தானாகவே பொருளுணர்த்தாமல் அதற்கு மூலமாயுள்ள தமிழ்ப்பழமொழியை நினைப்பித்து (ஸ்மாரகமாய்)க் கொண்டே அத் தமிழ்ப்பழமொழி மூலம் பொருளுணர்த்தும் என்க.

இஃதென்போலவெனில் இரண்டுரேபங்களையுடையது என்னும் பொருளுடைய த்விரேப சப்தமானது நேரேநின்று வண்டையுணர்த்தாது, அவ்விரண்டு ரேபங்களையுடைய ப்$^{4}$ரமர சப்தத்தையுணர்த்தி அந்தப் பிரமரசப்தத்தின்வாயிலாக வண்டையுணர்த்துவது போலும் என்க.

அல்லது பா$^{1}$த$^{3}$ சப்தம் அதன் பரியாயமான ப$^{1}$த$^{3}$ சப்தவாயிலாக இடத்தையுணர்த்தும் எனினும் இழுக்காது. இது குஞ்சரநகரம் என்னும் பெயர் ஹாஸ்தினபுரத்தையுணர்த்துவது போலும் தமிழ்வழக்காம் என்க.

இவ்வாறாக வால்மீகிபகவான் தமிழ்ப்பழமொழியின் இலக்கணங்களையுணர்ந்து நுண்மையழியாது மொழிபெயர்த்துரைத்தமையால் அவர் தமிழில் பொருளதிகாரப்பயிற்சியுடையவரென்றும் அதனானே அகத்திணைபுறத்திணை யிலக்கணம் அமையப்பாடப்பெற்றிருக்கும் ‘பருதிசூழ்ந்தவிப் பயன்கெழுமாநிலம்’ என்று தொடங்கியுள்ள புறநானூற்றுச்செய்யுள் இவராற் பாடப்பெற்றிருக்கலாமென்றும் தோன்றுகிறது.

அன்றியும், சுந்தரகாண்டப்பெயரால் ஞாபித்திருக்குமாறு தமிழ்வழக்கான விஷயங்களை இராமாயணத்துள் வழங்கிவருபவரென்றும் கருதற்குரியரே.

இன்னும், இராமாயணகாலத்தில் இப்பழமொழியை வழங்கிய சீதையும் அது கேட்டிருந்த அரக்கியரும் இராமாயணப்பொருளையுணர்தற்குரிய மக்களும் எல்லோரும் பேசிவந்த தாய்மொழி தமிழாயிருக்கவேண்டுமென்பதும் குறிப்பால் தோன்றுகிறது.

இது வலியுறுதற்கு அனுமான் சீதையிடம் பேசநினைந்து ஆலோசித்த ஸம்ஸ்க்ருத மாநுஷபாஷையும், ஸம்ஸ்க்ருதபாஷையும், அஸம்ஸ்க்ருதமாநுஷபாஷையும் எத்தகைய என்பது ஆராயத்தக்கது.

# 4. மாநுஷபாஷை - (மானிடர்தம்மொழி) தமிழ்

சுந்தரகாண்டத்தின் 29-வது சர்க்கத்தின் 15-முதல் 19-வரையுள்ள சுலோகங்களால் அநுமான் சீதையைக் கண்டு பேச வேண்டி என்னபாஷையில் எவ்விதமாகப் பேசலாம் என்பதுபற்றி ஆலோசிக்கிற விவரம் சொல்லப்படுகிறது. அந்தச் சுலோகங்கள்,

1. அந்த[1]ரத்[1]வஹ மாஸாத்[3]ய ராக்ஷஸீநாமிஹஸ்தி[2]த[1]:
2. சனைராச்வாஸயிஷ்யாமி ஸந்தா[1]ப[1]ப[3]ஹுதா[3]மிமாம்
3. அஹம்த்[1]வதி[1]த[1]னுச்சை[1]வ வாநரச்ச[1] விசேஷத[1]:

*4. வாசன்னோதா[3]ஹரிஷ்யாமி மானுஷீமிவ ஸம்ஸ்க்[1]ருதா[1]ம்

*5. யதி[3]வாச[1]ம் ப்[1]ரதா[3]ஸ்யாமி த்[3]விஜாதி[1]ரிவ ஸம்ஸ்க்[1]ருதா[1]ம்

6. ராவணம் மந்யமாநா மாம் ஸீதா[1]பீ[4]தா[1] ப[4]விஷ்யதி[1]
7. வானரஸ்ய விசேஷேண கத[2]ம்ஸ்யாத[3]பி[4]பா[4]ஷணம்
8. அவச்யமபி[1]வக்[1]த[1]வ்யம் மாநுஷம் வாக்[1]யமர்த்[1]த[2]வத்[1]
9. மயாசாந்த்[1]வயிது[1]ம் சக்[1]யா
10. நாந்யதே[2]ய மநிந்தி[3]தா[1]

என்ற இப் பத்து வாக்கியங்களாம். இவ்வாக்கியப்பொருள் வருமாறு:-

* ஐந்தாவது வாக்கியத்திலுள்ள யதி[3] என்னும் சப்தத்தையும் நான்காவது வாக்கியத்திலுள்ள ச[1] என்னும் சப்தத்தையும் நஷ்டாசுவத[3]க்[3]த[4]ரத[2] ந்யாயத்தாலே யதி[3]ச[1] என்று சேர்த்து நான்காவது வாக்கியத்திலும் ஐந்தாவது வாக்கியத்திலும் தனித்தனி கூட்டி மாநுஷ பாஷை பேசுவேனானாலும், ஸம்ஸ்க்ருதபாஷை பேசுவேனானாலும் என்று பொருள்கொள்ளத்தகும்.

1. நான் இங்கு அரக்கியர்களின் ஒழிவுள்ள சமயமடைந் திருக்கிறேன்.

2. மிகுந்த மனக்கொதிப்புள்ள இவளை மெல்ல ஆறுதலடை விப்பேன்.

3. நான் (நன்குமதிக்கத்தகாத) மிகுந்த சிறியவடிவுடைய னாகவும் வானரனாகவுமிருக்கிறேன்.

4. இங்கு இலக்கணங்களால் நன்றாகச்செய்யப்பெற்ற மாநுஷபாஷைபேசுவேனானாலும்,

5. இருபிறப்பாளன்போல் ஸம்ஸ்க்ருதபாஷை பேசுவேனானாலும்,

*7. வானரனுக்குச் சிறப்பாகத் திருந்தியவாக்கு எப்படி யுண்டாகக் கூடும்? (என்று எண்ணி,)

*6. ஸீதை என்னை இராவணனெனநினைந்து அச்சமுறுவாள்.

8. (ஆதலால்) இன்றியமையாது பேசத்தக்கது பொருள் விளங்கத்தக்க மாநுஷபாஷையே;

9. (அதுகொண்டு) என்னால் ஆறுதலடைவிக்கத் தக்கவளாவள்.

10. இங்ஙனம் பொருள்புலப்படத்தக்க மாநுஷபாஷையாற் பேசாது, இலக்கணங்களமைந்த மாநுஷபாஷையாலாவது, ஸம்ஸ்க்ருதபாஷையாலாவது பேசுவேனானால் பழிப்பில்லாத இவள் என்னால் ஆறுதலடைவிக்கத் தக்கவளாகாள் என்பது.

* பொருளியைபு கருதி 6,7 வாக்கியங்கள் பின்முன்னாக மாற்றப்பட்டன.

இங்கு அநுமான் தான் பேசத்தெரிந்துகொண்டுள்ள பாஷைகள் சொல்லப்படுகின்றன. அவை:- (1) மாநுஷீவாக், (2) ஸம்ஸ்க்ருதாவாக், (3) மாநுஷம்வாக்யம் என்பன.

இவற்றுள் வாக், வாக்யம் என்பன ஏகவசனத்தால் பாஷையேயாம். ஆகவே மாநுஷீவாக், மாநுஷம்வாக்யம் என்னும் இரண்டும் மாநுஷபாஷை என்றும், ஸம்ஸ்க்ருதாவாக் என்பது ஸம்ஸ்க்ருதபாஷை என்றும் பொருள்கொள்ளத்தகும்.

இவற்றுள் நான்காவது வாக்யத்தில் ('வாச[1]ம்சோ[1]தா[3]ஹரிஷ்யாமி மாநுஷீமிஹ ஸம்ஸ்க்[1]ருதா[1]ம்[1]' என்று) **மாநுஷபாஷை** ஸம்ஸ்க்ருத சப்தத்தால் விசேஷிக்கப்பட்டிருக்கிறது. இதன்பொருள் இலக்கணத்தால் நன்றாகச்செய்யப்பட்ட மாநுஷபாஷை யென்பதாம்.

ஐந்தாவது வாக்யத்தில் ('யதி[3]வாச[1]ம் ப்[1]ரதா[3]ஸ்யாமி த்[3]விஜாதி[1]ரிவ ஸம்ஸ்க்[1]ருதா[1]ம்' என்று) **ஸம்ஸ்க்ருதபாஷை** சொல்லப்பட்டிருக்கிறது. இதிலுள்ள ஸம்ஸ்க்ருத சப்தம் காரண விடுகுறியாய்க் கீர்வாணபாஷையை உணர்த்துகின்றது. காரணவாற்றலால் இலக்கணங்களால் நன்றாகச்செய்யப்பெற்றது என்னும் பொருளோடு இடுகுறியாற்றலால் கீர்வாணபாஷையென்னும் பொருளும் தோன்றுகிறது. மேலும், இதனை **மாநுஷபாஷை**யை யடுத்துவைத்தமையால் அதன் மறுதலையான **தேவபாஷை** யென்னும் பொருளும் குறிப்பால் தோன்றுகிறது.

எட்டாவதுவாக்கியத்திற் சொல்லிய **மாநுஷம்வாக்யம்** என்பதற்கு '**அர்த்தவத்**' என்ற விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அர்த்தவத் என்பதற்குப் **பொருளுடையது** என்பது பொருளாகிறது. பொருளுடையதாகாத பாஷை பிறிதொன்றும் இன்மையால் இந்த மாநுஷபாஷையைமட்டும் பொருளுடையது என்று சொல்லி யிருப்பது பயனில்கூற்றாவான்செல்லும். அதனைநீக்குதற்குஇங்குச் சொல்லுகிற

மாநுஷபாஷைக்குரிய **பொருளுடைமையாவது:** ‘ஒவ்வொருசொல்லும் அதற்குரிய **செம்பொருளையுடைய வாயிருத்தல்**’ என்றே கொள்ளவேண்டும். கொள்ளவே, இது செம்பொருளையுடைய செஞ்சொற்றொடர்களால் உலகவழக்காகப் பேசப்படும் மாநுஷபாஷை யென்பதாம்.

இந்த ‘அர்த்தவத்’ என்னும் விசேஷணம் நான்காவது வாக்கியத்திற்சொல்லிய மாநுஷபாஷைக்குக் கொடுக்கப்படவில்லை. இதனால் அது கற்றோர்க்கல்லது மற்றோர்க்குப் பொருள் இனிது புலப்படாத செய்யுள்நடைபோலுள்ளதொரு மாநுஷபாஷை யென்றவாறாயிற்று. அதற்குக் கொடுத்திருக்கும் ‘ஸம்ஸ்க[1]ருதா[1]ம்’ (இலக்கணத்தால் நன்றாகச்செய்யப்பட்டது) என்னும் விசேஷணம் இந்த எட்டாவது வாக்கியத்திற்சொல்லிய மாநுஷபாஷைக்குக் கொடுக்கப்படவில்லை.

இவற்றால் நான்காவதுவாக்கியத்திற் சொல்லப்பட்ட மாநுஷபாஷைக்கு, இலக்கணமுடைமை சிறந்ததென்றும், செம்பொருளுடைமை சிறந்ததில்லையென்றும், எட்டாவது வாக்கியத்திற் சொல்லிய மாநுஷபாஷைக்குச் செம்பொருளுடைமை சிறந்த தென்றும், இலக்கணமுடைமை சிறந்ததில்லையென்றும் சொல்லியவாறாயிற்று.

நான்காவது வாக்கியத்திற் சொல்லப்பட்ட மாநுஷபாஷை இங்கு விலக்கற்கு இலக்காகவும், எட்டாவது வாக்கியத்திற்சொல்லப்பட்ட மாநுஷபாஷை இங்கு அநுமான் பேசவேண்டி எடுத்துக்கொள்ளற்கு இலக்காகவும் சொல்லப்பட்டன.

இவற்றால் மாநுஷபாஷை இருவேறுவகைத்தாகப் பகுக்கப்பட்டதாயிற்று.

அவற்றுள் முன்னையது இலக்கணங்களால் நன்றாகச் செய்யப்பட்டதாயும், லக்ஷக வ்யஞ்ஜக சப்தங்களாலும் திரிசொற்களாலும் சமாதி முதலிய பலவகைக்குறிப்புக்களாலும் புனைந்துரை வகையாலும் கற்றோர்க்கல்லது மற்றோர்க்குப் பொருளினிது புலப்படாத செய்யுள்நடைபோலும் நடையுடையதாயும் இருப்பதாம்.

பின்னையது கற்றோர் கல்லாதோர் எல்லோருக்கும் பொருள் இனிது புலப்படற்குரிய செஞ்சொற்களாலாகிய வாக்கியங்களையுடைய மாநுஷபாஷையெனவும், இது, இலக்கணத்தால் நன்றாகச் செய்யப்பட்டதென்னாமையால் சிறிது இலக்கணவழுவுடையதாயிருப்பினும் அமையும் எனவும் கூறியவாறாயிற்று.

ஆகவே, மாநுஷபாஷையென்பது :-

(1) இலக்கணத்தால் செப்பஞ்செய்யப்பெற்ற சொற்களால் பொருள் அரிதிற் புலப்படற்குரிய செய்யுள்நடைபோன்ற சிறந்த நடையுடையதும்,

(2) இலக்கணத்தை முக்கியமாகக்கொள்ளாத செஞ்சொற்களால் பொருள் எளிதிற் புலப்படுமாறு நாட்டிலுள்ளோரால் வீட்டு வழக்காகவே வழங்கப்பட்டுவரும் உலகநடைபோலும் நடையுடையதும்,

என இருவேறு நடையுடையதென்று கூறியவாறாயிற்று.

மாநுஷபாஷை யென்பதில் மாநுஷம் என்பது மனிதர்க்குச் சொந்தமாயுள்ளது என்னும் பொருளுணர்த்துகிறது. சொந்தமாயுள்ள பாஷை ஸ்வபாஷை யென்பதாம். இதனால் ஸம்ஸ்க்ருதம் மனிதர்க்குச் சொந்தமில்லையென்று தெரிகிறது.

மாநுஷபாஷை இரண்டுவகையாகப் பிரித்துரைக்கப்பட்டது போல, ஸம்ஸ்க்ருதபாஷை பிரித்துரைக்கப்படாமையால் அது

அக்காலத்தில் உலகவழக்கில் இல்லையென்றும் சாஸ்த்ரபாஷையாக நூல்வழக்கில்மட்டும் உள்ளதாய்க் கற்றோரால்மட்டும் பேசுதற்குரிய தாயிருந்ததென்றும் வெளியாகிறது.

இனி, அநுமான் சீதையிடம் பேசுதற்கு ஆராய்ந்து தெரிந்தெடுத்துக்கொண்ட மாநுஷபாஷை இன்ன பாஷையென்று ஆராயத்தக்கது.

அது சீதை பொருள்தெரிந்துகொள்ளும்படி பேசவேண்டிய பாஷையாகையால் ‘கோசலதேசத்துள்ள மானிடராற் பேசப்பட்ட பாஷையாயிருக்கவேண்டும்’. என்று வியாக்யாதா சொல்லுகிறார். அது உண்மையே. ஆயினும், அது அக்காலத்தில் இன்ன பாஷையாயிருந்ததென்று வியாக்யானத்திற் பெயர் குறிக்கப் படாமையால் அதனை ஈங்கு ஆராய்ந்து அறியவேண்டும்.

ஆராய்ச்சி. 1.

(1) இலக்கணங்களால் திருத்தஞ்செய்யப்பெற்ற செய்யுள் நடையுடையதும், (2) தேவபாஷையின் மறுதலையானதும், (3) மானிடர்களுக்கு வந்தேறியாகாது சொந்தபாஷை (ஸ்வபாஷை)யாகப் பேசப்பட்டுள்ளதும் ஆன மூன்றுவகை யிலக்கணங்களுடன் இராமாயணகாலத்திலிருந்த பாஷை யாதாயிருக்கலாம்?

(1) இராமாயணகாலத்தில் வடநாட்டில்நின்றும்வந்த அகத்தியர் தொல்காப்பியர் முதலான சங்கமருவிய சான்றோர்களாலே “வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளும்” ஆகிய இருவேறுவகைப்பட்ட தமிழ்மொழி ஆராயப்பெற்று இலக்கணங்களமைக்கப் பெற்றிருந்தமையாலும்,

(2) வடமொழியாகிய தேவபாஷையின் மறுதலையாய்த் தென்மொழி என்று பெயர்பெற்றமையாலும்.

(3) மானிடரால் பேச்சுவழக்கிலும் வழங்கப்பட்டிருத்தலாலும்,

நான்காவதுவாக்கியத்தால் (1) **'மாநுஷீமிஹஸம்ஸ்க்ருதாம்'** என்றது **செய்யுணடையான தமிழ்மொழி** என்றும், எட்டாவது வாக்யத்தால் (2) **'மாநுஷம்வாக்யம் அர்த்தவத்'** என்றது **உலகநடையான தமிழ்மொழி** என்றும் அறியத்தகும். இனி மற்றொருவகையாலும் ஆராய்வாம்.

ஆராய்ச்சி. 2.

மாநுஷபாஷை என்பதனால் அது, அதற்கு இனமான தேவபாஷையின் மறுதலையாயிற்று. ஆகவே, தேவபாஷையும் மாநுஷபாஷையின் மறுதலையாயிற்று.

இவ்விரண்டு பாஷையும் கிழக்கும் மேற்கும்போல ஒன்றற்கொன்று மறுதலையாம்; பிறிதொன்றை மறுதலையாக வுடையனவல்ல.

இவ்வாறே தென்மொழியும் வடமொழியும் ஒன்றற்கொன்று மறுதலையே; வேறு மறுதலையுடையனவல்ல.

ஒன்றற்கொன்று மறுதலையாகிய இவற்றுள், ஒருதலை யாயுள்ள வடமொழியும் தேவபாஷையும் ஒன்றேயாம் என்று அறிந்துள்ளோம். அதனால், அவற்றின் மறுதலையாகிய தென் மொழியும் மாநுஷபாஷையும் ஒன்றேயாம் என்றறியப்பட்டதாயிற்று. இன்னும் மற்றொருவகையாலும் ஆராய்வாம்.

ஆராய்ச்சி. 3.

**தமிழ்** என்ற சொற்குப்பலரும் பலவகையாகப் பொருள் கூறுவர். அவற்றுள் (1) **தம்மொழி** என்பதே **தமிழ்** (எனத் திரிந்தது) என்பதும், (2) இனிமையுடையது-**தமிழ்** என்பதும் சிறந்த பொருள்களாம்.

மானிடர்பாஷைக்குத் தம்மொழியென்றபெயர் வந்த தெவ்வாறெனின், மானிடர் தாம் பேசும்பாஷைக்கு ஒரு பெயரிட வேண்டும் பொழுது, அப்பெயரானே அதன் இனம் ஒன்றிருக்க அதனை விலக்கவேண்டும். இனமாவது: தன்னிற் பிறிதாகிய மொழி. அது இங்கு தேவபாஷை. ஒருவன் ஒரு விஷயத்தைத் தேவ பாஷையிற் பேசும்பொழுது, அப்பாஷை தெரியாதானொருவன், அவனைத் தம்மொழி (ஸ்வபாஷை)யில் பேசு என்பான். அதனால் மானிடர்பேச்சுத் **தம்மொழி** எனப் பெயர்பெறுவதாகும். **மாநுஷபாஷை** என்பதற்கும், (மானிடர்) **தம்மொழி** என்பதற்கும் பொருள் ஒன்றேயாம். ஆதலால் மாநுஷபாஷையின் பரியாயமாக வழங்கற் குரியது தம்மொழி என்பதாம்.

இனி, தம்மொழி தமிழ் எனத் திரியுமாறென்னையெனின், தம்மவர்-தமவர் என்றாவதுபோலத் **தம்மொழி**யென்பது மகரங் கெட்டுத் தமொழியாய், அது, தொடக்கம்-துடக்கமாவதுபோல ஒகரம் உகரமாகத் தமுழியாய், அது மாநுடர் மானிடராவது போல உகரம் இகரமாகித் தமிழியாய், அது, அகழி அகழ் ஆவது போல ஈற்றிகரங்கெடத் **தமிழ்** என்றாயிற்று என்பது.

இது, தமிழ் என்னும் பெயர் உண்டாதற்குவேண்டும் நீண்ட காலத் திரிபாகலாம்.

தம்மொழியென்பதில் தாம் என்பது யாரையெனில் அம் மொழி பேசுதற்குரியவராகிய மானிடரை என்க. அதனால் தம் மொழி என்ற பொருளும் மாநுஷபாஷையென்ற பொருளும் ஒன்றாயிருக்குமாறு காண்க. தம்மொழி எனினும் தமிழ் எனினும் ஸ்வபாஷையெனினும் ஒக்கும்.

இங்ஙனம் வேறுவேறுவகையாகிய முத்திறவாராய்ச்சியாலும்., அநுமான் சீதையிடம் பேசக்கருதிய மாநுஷபாஷை **தமிழ்மொழி** என்று தெளியப்பட்டது.

அத்தமிழ்மொழியே முன்பு, **ஸம்ஸ்க்ருதமாநுஷபாஷை**.என்றும் (அர்த்தவத்) **பொருளுடைய மாநுஷபாஷை** என்றும் இருவகையாகப் பகுக்கப்பட்டிருக்கிறது.

அவற்றுள் **ஸம்ஸ்க்ருதமாநுஷபாஷை** என்பது இலக்கணத்தால் நன்றாகச்செய்யப்பட்ட **தமிழ்மொழி** என்பதாயிற்று. இதற்கு 'அர்த்தவத்' (செம்பொருளுடையது) என்னும் அடைகொடுக்கப் படாமையால் சொற்களுக்குரிய செம்பொருளுடைமை முக்கியமில்லை யென்றும், இலக்கணமுடைமையே முக்கியமென்றும் அறியத்தக்கன. இவ்வேறுபாட்டால் இது செய்யுள்நடையுடைய தமிழ்மொழியென்று தோன்றுகிறது.

செய்யுள்நடை, பெரும்பாலும் இலக்கணங்களமைந்ததாய்ச் சொற்களுக்குரிய செம்பொருளுடைமையை முக்கியமாகக் கொள்ளாமல் 'செவிகைப்பச்சொற்பொறுக்கும்..... கவிகைக் கீழ்த்தங்கும் உலகு' என்பனபோலச் சமாதி முதலிய குறிப்புக்களும் புனைந்துரை வகைகளும் உள்ளுறை முதலியனவும் உடையவாய்ப் பெரும்பாலும் சொற்களுக்குரிய செம்பொருளையிழந்து வேறு வேறு குறிப்புப்பொருள்களையுணர்த்தல் காண்க.

இதனின் வேறாக, 'அர்த்தவத்' (பொருளுடையது) என்று விசேடிக்கப்பட்ட தமிழ்நடை ஒன்று எட்டாவதுவாக்கியத்தாற் சொல்லப்பட்டுள்ளது. அது ஒவ்வொரு சொல்லும் அததற்குரிய செம்பொருளை ஆற்றலாலுணர்த்தும் செஞ்சொற்றொடர்களாலாகிய தமிழ்நடை. இதற்கு இலக்கணமுடைமை முக்கியமன்று; செம்பொருளுடைமையே முக்கியமாம். செய்யுள்நடையும் பொருளு டையதாயினும், அது இதுபோலச் செம்பொருளுடையதல்லாமையால் இது பொருளுடையதென்று விசேடிக்கப்பட்டது.

ஆதலால் இது, நாட்டிலுள்ள சாமானியசனங்களால் வீட்டு வழக்காகப்பேசப்படும்.(இரண்டு கண்ணும் சிவந்தது.லெக்ஷ்மணனை எனக்குத் தெரியும், உன்விஷயமாக வந்தேன். என்பன போலும்) சொற்றொடர்களாலாவது.

இந்நடை, இலக்கணவழுவுடையதாயினும் பொருள் இனிது புலப்படக்கூறுதலால் உலகியற் றமிழ்நடையாயிற்று.

இவ்விருவகையான தமிழ்நடையுள் அநுமான் சீதையிடம் பேசுதற்குச் சூழ்ந்து துணிந்த தமிழ்நடை உலகவழக்கான தமிழ் நடையென்று தோன்றுகிறது.

ஆயினும், இன்னும் இதனை உத்தமகாவியகர்த்தாவான வான் மீகிபகவான் சீதையிடம் அநுமான் பேசுமிடத்தில் இன்னபாஷையில் இன்னவாறு பேசினான் என்று சொல்லுவாரன்றே! அங்கும் அவர் தம் வாயால் என்னென்று சொல்லுகிறார் என்பதையும் ஆராய்வாம்.

# 5. அவித$^{1}$த$^{2}$ மது$^{4}$ரம்— உள்ளபடியான தமிழ்

இதற்கு முன் 4-வது பகுதியில் அனுமான் சீதையிடம் என்னபாஷையிற் பேசலாம் என்று ஆலோசித்துத் தெரிந்துகொண்டதாகச் சொல்லப்பட்ட மானுஷபாஷை செந்தமிழ்மொழியென்று நிரூபிக்கப் பட்டது.

அந்த மானுஷபாஷையை வான்மீகிபகவான்வாயாலும் செந்தமிழ் மொழியென்றே வெளியிடுகிறார் என்பது இதில் நிரூபிக்கலாகும்.

சுந்தரகாண்டத்தின் 30-ஆம் சர்க்கத்தின்முடிவிலுள்ள சுலோகத்தில் இது சொல்லப்பட்டிருக்கிறது; அது வருமாறு:-

> இதி$^{1}$ஸப$^{3}$ஸுவித$^{4}$ம் மஹாநுபா$^{4}$வோ
> ஜக$^{3}$தி$^{1}$பதே$^{1}$: ப்$^{1}$ரமதா$^{3}$மவேக்ஷமாண: |
> மது$^{4}$ரம் அ$^{1}$வித$^{1}$த$^{1}$த$^{2}$ம் ஜகா$^{3}$த$^{3}$வாக்$^{1}$யம்
> த்$^{3}$ருமவிட$^{1}$பா$^{1}$ந்த$^{1}$ரம் ஆஸ்தி$^{2}$தோ$^{1}$ ஹநூமான் ||

இதன் பொருள் :-

ஸ:மஹாநுபா$^{4}$வ: ஹநூமான் — அந்த மஹானுபாவனான ஹனுமான், த்$^{3}$ருமவிட$^{1}$பா$^{1}$ந்த$^{1}$ரம் ஆஸ்தி$^{2}$த$^{1}$ : — மரக்கிளையிலிருந்து கொண்டு

ஜக$^{3}$தி$^{1}$ப$^{1}$தே$^{1}$; ப்$^{1}$ரமதா$^{3}$மவேக்ஷமாண:— லோகநாயகன் தேவியைப் பார்த்து

அவித$^{1}$த$^{2}$ம்— உள்ளபடியேயிருக்கிற (அதாவது செய்யுள் நடையாகத் திரிவுபடாதிருக்கிற என்றபடி.)

மது[4]ரம் வாக்[1]யம்—தமிழ் என்று வழங்கப்படுகிற பாஷையை

ப[3]ஹுவித[4]ம் – சுத்தமாகவும், தெளிவாகவும், சுருக்கமாகவும், விரும்பிக் கேட்கத்தக்கதாகவும், சொல்வன்மையுடைய தாகவும் பலவிதமான நயங்களிருக்கும்படி.

ஜகா[3]த[3] – பேசினான். இதி[1] – ஸம்பூர்ணமயாயிற்று என்பது.

இங்கு வாக்[1]யம் என்ற சொல் ஒருமைப்பெயராயிருப்பதால் அது பாஷை என்னும் பொருளை யுணர்த்துகிறது. அல்லாக்கால் எழுவாயும் பயனிலையுமுள்ள ஒருதொடர்மொழியைமட்டும் அனுமான் சீதையிடம் சொன்னான் என்னவேண்டும். அனுமான் சீதையிடம் ஒரு தொடர் மொழிமட்டும் சொல்லிநில்லாமல் பல தொடர்மொழிகளைச் சொல்லுதலானும், வெகுவிதமாகப் பேசுகிறான் என்றதனாலும் வாக்[1]யம் என்பது இங்கு பாஷை என்னும் பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது.

இனி, அந்தப் பாஷை யென்னும் பொருளுடைய வாக்யம் என்னும் பொதுப்பெயருக்கு, மதுரம் என்னும் சிறப்புப்பெயர் அடைமொழியாக (விசேஷணமாக) வழங்கப்பட்டிருக்கிறது. இதனால் அது மதுரம் என்னும் சிறப்புப்பெயருடைய பாஷை என்பது பொருளாயிற்று.

மதுரம் என்னும் பெயர் தமிழ் என்னும் பெயரின் பரியாயமா யிருக்கிறது. தென்மொழியாகிய மானுஷபாஷைக்குத் தமிழ் என்னும் பெயர் காரணவிடுகுறிப்பெயராய் (அந்வர்த்தநாமமாய்) இனிமையுடையது என்னும் பொருளில் உலகப்பிரசித்தமாய் வழங்கப்படுகிறது.

ழகாராக்ஷரம் ஸம்ஸ்கிருதபாஷையில் இல்லாமையால் வால்மீகி பகவான் 'தமிழ்வாக்கியம்' என்று நன்றாக வெளிப்படச் சொல்லமுடியாமல் பிரதிபதமொழிபெயர்ப்பாகத் தமிழின் பரியாயப்பெயர்கொண்டு மதுரம் வாக்கியம் என்றார் என்று தோன்றுகிறது. அது அவர்க்குக் கருத்தானால் மதுரம் என்னும் சொல்லால் தமிழ்ப்பாஷையை உணர்த்துவதைக்

காட்டிலும் தி$^{3}$ரவிட$^{3}$ம் என்னும் சொல்லால் விளங்கச்சொல்லியிருக்கலாமே என்னில், மதுரம் என்னும் சொல் அந்வர்த்தநாமமான தமிழ் என்பதன் பிரதிபதமொழிபெயர்ப்புப்பெயராய் இனிமையுடையது என்னும் பொருளையும் விடாமல் விசேடிக்கிற அர்த்தவிசேஷமிருப்பதால் தமிழ்ப்பாஷையை மதுரம் என்ற பெயரால் வழங்கினார் என்று தோன்றுகிறது. அன்றியும், அந்தக்காலத்தில் தமிழுக்குத் திராவிடம் என்ற பெயர் உண்டாயிருந்ததாகவும் தெரியவில்லை.

இம்மட்டில் மது$^{4}$ரம் வாக்$^{1}$யம் ஜகா$^{3}$த$^{3}$, என்பதற்குத் தமிழ்ப் பாஷையை வழங்கினான் என்று பொருள்பெறப்பட்டது.

இனி, இம் மது$^{4}$ரம் என்பதற்கு விசேஷணமாக அவித$^{1}$த$^{2}$ம், என்று ஒருசொல் வழங்கப்பட்டிருக்கிறது. அதற்குப் பொருள் வித$^{1}$த$^{2}$ம் அல்லாதது என்பதாம். வித$^{1}$த$^{2}$ம் என்பதற்கு அப்படியாந்தன்மையற்றது (த$^{2}$தா$^{2}$பா$^{4}$வரஹித$^{1}$ம்) என்பது பொருளாம். அப்படியாந்தன்மை யற்றதாவது, உள்ளபடியாயில்லாதது (வேறுபடியாயிருப்பது) என்றபடி. இதனின்வேறாயிருப்பது (உள்ளபடியேயிருப்பது) அவித$^{1}$த$^{2}$ம் எனப்பட்டது. இது மது$^{4}$ரம் என்ற தமிழ்மொழிக்கு விசேஷண மாயிருக்கிறது. இதனால் அவித$^{1}$த$^{2}$ம் மது$^{4}$ரம் வாக்$^{1}$யம் ஜகா$^{3}$த$^{3}$ என்பதற்கு ‘உள்ளபடியேயிருப்பதான தமிழ்ப்பாஷையைப் பேசினான்’ என்பது பொருளாயிற்று.

இங்கு, வித$^{1}$த$^{2}$ம் என்பது பொய்ம்மொழிக்குப் பெயராதலால் அவித$^{1}$த$^{2}$ம் மது$^{4}$ரம் வாக்$^{1}$யம் ஜகா$^{3}$த$^{3}$ என்பதற்கு மெய்ம்மொழியான இனியவாக்கியங்களை வழங்கினான் என்று பொருள்கொள்ளற்கு இழுக்கென்னையெனில், இங்கும் ஏகவசனத்தால் மெய்யான இனிமை யுள்ள ஒரே வாக்கியம் சொன்னான் என்று பொருள்படும்; அப்படி அவன் சொல்லாமையாலும் மெய்ம்மொழியென்று ஒரு பாஷையை விசேஷிப்பதும், அனுமான்பேச்சை மெய்ம்மொழியென்று விசேஷிப்பதும் சிறப்பில்லாமையாலும் அதற்கு மெய்யான தமிழ்மொழி என்று பொருள்

கொள்ளாது வேறுபொருள்கொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது.

இங்கு அவித[1]த[2]ம் என்பது மதுரம் என்ற தமிழ்ப் பாஷைக்கு விசேஷணமாயிருப்பதால் அது வித[1]த[2]ம் என்னும் தமிழ்நடையை விலக்குவதாயிற்று.

விததமான தமிழ்நடையாவது: செஞ்சொல்லும் செம்பொருளு முடைய உலகவழக்கான தமிழ்நடையின் வேறாய், **திரிசொற்களும் குறிப்புமொழிகளுமுடைய செய்யுள்வழக்கான தமிழ்நடை.** இது உள்ளபடியில்லாதது. இதனின் வேறாய் உலகவழக்காயுள்ள தமிழ் நடை உள்ளபடியேயிருப்பது. இத்தகைய செம்**பொருளுடைய** உலக வழக்கான தமிழ்நடை முன்பு **அர்த்தவத்** (பொருளுடைய) மானுஷபாஷையென்று சொல்லப்பட்டது.

இதனின்வேறாய்த் திரிசொற்களும் பலவகைக் குறிப்பு மொழிகளுமுள்ள விததமதுரபாஷையான செய்யுள்நடையே முன்பும் ஸம்ஸ்க்ருதமானுஷ பாஷை (இலக்கணங்களால் திருத்தியமைத்துக் கொள்ளப்பட்ட தமிழ்நடை) என்று சொல்லி விலக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால், முன்பு அனுமான் சீதையிடம பேசுவதற்கு நிச்சயித்துக்கொண்ட அர்த்தவத் மானுஷம் வாக்கியம் (செம் பொருளுடைய உலகநடையான தமிழ்மொழி) என்றதனை, இங்கு அவிதத மதுரம் வாக்யம் (உள்ளபடியான தமிழ்நடை) என்றார்: என்று அறியத்தக்கதாயிற்று.

இனி, இதனையே நியமிக்கவேண்டி அடுத்த ஸர்க்கத்தின் தொடக்கத்திலும் **மதுரம் வாக்யம்** என்று வால்மீகிபகவான் சொல்லியிருப்பதும் ஆராயத்தக்கது.

# 6. மது$^{4}$ரம் வாக்கியம் — தமிழ்ப்பாஷை

இனி, அனுமான் சீதையிடம் வெகுவிதமாக உலகவழக்கான தமிழ்நடையிற் பேசியவற்றை விரித்துச்சொல்லத் தொடங்கி, 31-ஆம் சர்க்கத்தின் முதல் சுலோகத்தில், "அனுமான் பலபடியாலும் ஆலோசித்துக்கொண்டு, சீதைக்குக் காதுகேட்கும் தூரத்திலிருந்து, இனிச்சொல்லப் போகிறபடியே தமிழ்ப்பாஷையைப் பேசினான்" என்று வான்மீகிபகவான் பாயிரம் கூறியிருக்கிறார்.

அந்தச் சுலோகம் வருமாறு:-

ஏவம் பஹுவிதா$^{4}$ம் சி$^{1}$ந்தா$^{1}$ம் சிந்த$^{1}$யித்$^{1}$வா மஹாக$^{1}$பி$^{1}$: |
ஸம்ச்ரவே மது$^{4}$ரம் வாக்$^{1}$யம் வைதே$^{3}$ஹ்யா வ்யாஜஹாரஹ ||

இதன் பொருள்:-

மஹாக$^{1}$பி$^{1}$:- மஹானுபாவனான ஹனுமான்

ப$^{3}$ஹுவிதா$^{4}$ம் சி$^{1}$ந்தா$^{1}$ம் சி$^{1}$ந்த$^{1}$யித்$^{1}$வா — வெகுவிதமான ஆலோசனையைச் செய்து

வைதே$^{3}$ஹ்யா:— ஸீதாதேவிக்கு

ஸம்ச்ரவே — காதுகேட்கும் தூரத்தில் (இருந்து)

ஏவம் — பின்சொல்லப்போகிற பிரகாரம்

மது$^{4}$ரம் வாக்$^{1}$யம் — மதுரசப்தபர்யாயமான **தமிழ்** என்னும் பெயருடைய பாஷையை

வ்யாஜஹார — வழங்கினான்

ஹ — ஆச்சர்யம் என்பது.

இங்கும் **மதுரம் வாக்யம்** என்பது, ஏகவசனத்தால் ரஸஜநகமான (இனிமைபயப்பதான) தமிழ்ப்பாஷை யென்றே பொருள்

கொள்ளக்கிடக்கிறது. அப்படியிருந்தும், இந்தச் சுலோகத்திலுள்ள **'மதுரம் வாக்யம்'** என்பதற்கு மட்டும் ரஸஜநகமானவாக்யம் என்று வியாக்கியானம் எழுதப்பட்டிருக்கிறது. இதன் முற்பட்ட சுலோகத்திற் சொல்லப்பட்ட மதுரசப்தத்துக்கும் இவ்வாறே ரஸஜநகம் (இனிமைபயப்பது) என்று வியாக்கியானம் எழுதாமல் சும்மா விடப்பட்டிருப்பதற்குக் காரணமென்ன?

மதுரசப்தத்துக்கு ரஸஜநகம் என்னும் பொருள் வெளிப்படை என்றெண்ணி உரையெழுதாமல் விடப்பட்டிருக்கலாமென்றால், அவ்வாறே பிந்திய இந்தச்சுலோகத்திலுள்ள மதுரசப்தத்துக்கும் உரையெழுதாமல் விடப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறில்லாமல் (பிரதமாதிக்கரணமாக) முந்தியதை விட்டுவிட்டுப் பிந்திய சுலோகத்திலுள்ள மதுரசப்தத்துக்கு மட்டும் ரஸஜநகம் என்று உரை எழுதப்பட்டிருப்பதற்குத் தக்ககாரணம் இருக்கவேண்டும். அந்தக் காரணம் யாதாயிருக்குமென்று இங்கு ஆராய்வோம்.

முந்திய சுலோகத்திலுள்ள மதுரசப்ததத்துக்கும் ரஸஜநகம் என்று உரையெழுதினால், கூறியதுகூறல் என்னும் புனருக்தி தோஷம் ஸம்பவிக்கும்; ஆதலால் அதற்கு ரஸஜநகம் என்று உரையெழுதலாகாது; வேறுபொருள் இருக்கவேண்டும் என்று எண்ணி உரையெழுதாமல் விடப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

அவ்வாறு உரையெழுதாமல் விடப்பட்டபொருள் யாதாயிருக்க வேண்டும்? அது அனுமான் சீதையிடம் பேசவேண்டி முன்பே நிச்சயித்துக் கொண்ட பாஷையின் பெயராயிருக்கவேண்டும்; அந்தப் பாஷையையே வால்மீகிபகவான் தம் வாயாலும் வெளிப்படச் சொல்லித்தீர வேண்டும். அவ்வாறு சொல்லியிருப்பாதாக வேறொருவகையாலும் புலப்படாமையால், முந்தியசுலோகத்தில் சொல்லிய மதுரம்வாக்கியம் என்பது அந்தப்பாஷையின்

பெயராயிக்கலாமென நினைந்து, அந்தப்பாஷை இன்னதென்று தோன்றாமையால் அதற்கு உரையெழுதாமல் விடப்பட்டிருக்க வேண்டும்.

இவ்வாறாக முந்திய சுலோகம் அனுமான் சீதையிடம் பேசக்கருதிய பிரகாரங்களைத் தொகுத்துச்சுட்டுதலால் அதில் இன்னபாஷையில் பேசினான் என்பதைச் சொல்லி, பின் வகுத்துக்காட்டத்தொடங்கிய அடுத்த சுலோகத்தில் ரஸஜநகமான வாக்கியத்தைப் பேசினான் என்று பொருள்கொள்வது புனருக்தமும் வியர்த்தமுமாகாமல் சமர்த்தமாகிறது: என்று வியாக்கியாதா கருதி, முந்திய சுலோகத்தில் மதுரம் என்ற சொல்லுக்குப் பொருள் எழுதாமல் விட்டுவிட்டுப் பிந்திய சுலோகத்திலுள்ள மதுரம் என்பதற்கு மட்டும் உரையெழுதியிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

இப்படியாகத் தமிழ்ப்பயிற்சியில்லாதார் இடர்ப்படுவர் என நினைந்தே வால்மீகிபகவான் மதுரப்பிரயோகம் இருமுறை செய்துபோந்தார். இருமுறை சொல்லாது ஒருமுறையே மதுரமான வாக்கியத்தைப் பேசினான் என்று சொல்லியொழிந்தால், அதற்குத் தமிழில் பேசினான் என்று பொருள் கொள்ளாமலே, இனிமையுள்ள வாக்கியங்களைச் சொன்னான் என்று பொருள் கொண்டொழிவர்கள். அங்ஙனம் ஒழியாது தமிழ்ப்பேச்சைப் பேசினான் என்று ஓரிடத்தேனும் தமிழும் உணர்ந்தவர்களுக்குப் பொருள் தெரியும்படி சொல்லவேண்டும்; அல்லாக்கால் விளங்கவைத்தல் என்னும் குணம் ஒழியும் என்று எண்ணி, தமிழுமுணர்ந்த வால்மீகிபகவான் தமிழ் என்னும் சொல்லின் பிரதிபதமான மதுரசப்தத்தை இருமுறை சொல்லி நியமித் திருக்கலாமென்று தோன்றுகிறது.

வக்தாவுக்கு இவ்வர்த்தத்தில் தாத்பர்யமில்லையாயின் "அவித$^{1}$த$^{2}$மது$^{4}$ரம் ஜகா$^{3}$த$^{3}$வாக்$^{1}$யம்" என்றதை "அவித$^{1}$த$^{2}$மம்ருதம் ஜகா$^{3}$த$^{3}$வாக்$^{1}$யம்" என்றும் "ஸம்ச்ரவே மது$^{4}$ரம் வாக்$^{1}$யம்" என்றதை "ஸம்ச்ரவே வாக்$^{1}$யமம்ருதம்" என்றும் சொல்லி அம்ருத சப்தத்தால் ரஸஜநகம் என்னும் பொருள் மயங்காமற் புலப்படச் செய்திருப்பர்.

அங்ஙனமின்மையால் இரண்டிடத்தும் மதுரம் என்பதற்குத் **தமிழே** தாத்பர்யப்பொருளாகவும் தோன்றுகிறது.

இங்ஙனமன்றி, 'இரண்டிடத்தும் மதுரம் என்பதற்கு ரஸஜநகம் என்றே பொருள் கொண்டு அதனை நியமித்திருப்பதாகச் சொல்லில் புனருக்தமாகாது' என்பார் உளராயின், **மதுரம்வாக்கியம்** என்ற ஏகவசனம் இங்குச் சொல்லவேண்டிய பாஷையின் ஸங்கியையாகிய முக்கியார்த்தத்தைவிட்டு வாக்கியஸமூஹ ஜாதிசங்கியையாகிய லக்ஷயார்த்தத்தைச் சொல்வது கௌணமாகும். அன்றியும், அந்த வாக்கியஸமூஹம் இன்னபாஷை யென்பதும் தோன்றாதாகும். இன்ன பாஷையென்று தோன்றாத பாஷாஸாமாந்யத்தை ரஸஜநகம் என்று குணம்பற்றி விசேஷித்தால் அந்த விசேஷணம் வியாவர்த்தகமாகாது (பிறவற்றினின்றும் பிரித்துக் காட்டமாட்டது) வியர்த்தவிசேஷணமாகும் (பயனில்லாத அடைமொழியாகும்). அப்படியாகாமைக்கு வாக்கிய சப்தார்த்தமான பாஷா ஸாமான்யத்துக்கு மதுரசப்தம் பாஷா விசேஷநாமமாய் விசேஷணமானால், சாமான்ய விசேஷங்களுக்கு அபேதாந்வயமுடைமையால் வ்யாவர்த்தகமாய் மதுரேதரமான ஸம்ஸ்கிருதமாநுஷபாஷையையும், ஸம்கிருத பாஷையையும் விலக்கி, மதுரம் (தமிழ்) என்னும் பாஷையைப் பேசினான் என்று சாதுவாகும்.

ஆகவே, இரண்டு சுலோகங்களிலுமுள்ள மதுரசப்தங்களுக்கும் தமிழ் என்றே பொருள்கொண்டால் அனுமான் உத்தேசித்தபடியே தமிழில் பேசினான்; வேறு பாஷையில் (ஸம்ஸ்கிருதமாநுஷபாஷையிலாவது, ஸம்ஸகிருதபாஷையிலாவது) பேசவில்லை; என்று அந்வயத்தாலும் வ்யதிரேகத்தாலும் அர்த்தஸித்தியுண்டாய் அனுமான் ஸங்கற்பித்துக் கொண்டபடியே அர்த்தவத்தான மானுஷபாஷையில் பேசினான்: என்னும் பொருள் வலியுறுத்தப்பட்டதாய், கௌணவிருத்தியும் வேண்டாது, புனருக்தமுமாகாது, சாதுவாகுமென்று தோன்றுகிறது.

**மதுர**சப்தபர்யாயமான **தமிழ்** என்னும் பாஷாநாமத்தின் அந்வர்த் தசக்தியால் (காரணவிடுகுறியாற்றலால்) ரஸஜநகம் என்னும் அர்த்தமும் தானே சித்திக்கிறது.

தமிழ் ரஸஜநகம் (இனிமைபயப்பது) என்பதை,

*"கூடலின் ஆய்ந்த ஒண் தீம்தமிழ்"*[1]

என்று மாணிக்கவாசகரும்,

*"ஊறும் இன்பத்தமிழால் உயர்ந்தார்"*[2]

*"தேனேரார்தமிழ் விரகன மொழிகள்"*[3]

*"ஞானசம்பந்தன் இன்தமிழ்"*[4]

*"ஞானசம்பந்தன் சொன்ன இன்தமிழ்"*[5]

என்று திருஞானசம்பந்தரும்,

*"இன்தமிழ் மாலைகள்"*[6] என்று விண்டுசித்தரும்,

*"விருப்புடை இன்தமிழ் மாலை"*[7]

என்று கோதைப்பிராட்டியாரும்,

*"சொல்லில் இன்தமிழ் மாலை"*[8]

*"சொல்லிய இன்தமிழ் மாலை"*[9]

*"நல்லியல் இன்தமிழ் மாலை"*[10]

என்று குலசேகராழ்வாரும்,

*"கலிகன்றி இன்தமிழால் உரைத்த"*[11]

*"இன்தமிழ் நன்மணிக்கோவை"*[12]

*"தேனார் இன்சொல் தமிழ்மாலை"*[13]

*"இருநீர் இன்தமிழ் இன்னிசைமாலை"*[14]

*"நெடுமாலை இன்தமிழால் நினைந்த"*[15]

என்று திருமங்கையாழ்வாரும்

[1] திருக்கோவையார்-20. [2] தேவாரம் கோயில்பதிகம்-2. பா. 11. [3]தேவாரம் திருக்கழுமலப்பதிகம்-3. பா.11. தேவாரம் [4]திருக்கழு மலப்பதிகம்-16. பா. 12. [5] தேவாரம் திருக்கடைமுடிப்பதிகம்-பா.11. [6]பெரியாழ்வார்திருமொழி-3-2-10. [7] நாச்சியார் திருமொழி-1. பா. 10. [8]பெருமாள் திருமொழி-2. பா.10. [9] பெருமாள் திருமொழி 6-10. [10] பெருமாள் திருமொழி 10-10. [11] பெரியதிருமொழி 2-1-10. [12] பெரிய திருமொழி 7-8-10. [13] பெரிய திருமொழி 8-8-10. [14] பெரிய திருமொழி 8-9-10. [15]பெரிய திருமொழி 9-10-10.

**தீம்தமிழ், இன்பத்தமிழ், தேனேரார்தமிழ், இன்தமிழ்** என்பவற்றால், தமிழ் ரஸஜநகமென்னும் பொருள்தோன்றத் **தண்ணீர்** என்பதுபோலும் ஸ்வபாவவிசேஷணத்தால் விசேஷித்து வழங்குதலாலும் அறியலாம்.

ரஸஜநகமாவது : வடமொழிபோலப் புருஷாக்ஷரங்கள் (வெட்டெனவான எழுத்தொலிகள்) மிகுந்தில்லாமல் மதுராக்ஷரங்களே (மெத்தென வான எழுத்தொலிகளே) மிகுந்துள்ள பாஷையாயிருப்பது; அதனால் தமிழே மதுரம் (ரஸஜநகம்) என்பதாம்.

இதனை, "**கூஜந்தம் ராமராமேதி மதுரம் மதுராக்ஷரம்**" என்பதனால் கா[1]கு[1]ஸ்த[2] சப்தம் போல் வெட்டெனவில்லாமல், மெத்தெனவுள்ள தமிழெழுத்தொலிபோலும் **மதுராக்ஷ**ரமுடையதாய் **மதுரமா**யுள்ளது ராமசப்தம் என்றதனா லறியலாம்.

**மதுரசப்தம் தமிழ்** என்னும் பொருள்பயப்பது எங்ஙனமெனில், முன்பு அனுமான் சீதையிடம் இன்னபாஷையில் இன்னபடி பேசலாம் என்று ஆலோசித்து நிச்சயித்தவிடத்தில் "அவச்யமபி[1] வக்[1]த[1]வ்யம் மாநுஷம் வாக்[1]யம் அர்த்த[2]வத் என்று சொல்லப்பட்ட "அர்த்தவத் மாநுஷம் வாக்கியம்" என்றது பொருளினிது புலப்படும்படிபேசும் முக்கியார்த்தமுடைய (வெளிப்படைப் பொருளுள்ள) உலகநடையான தமிழ்ப்பாஷையென்று துணியப்பட்டமையால், அவ்வாறே அவன் பேசத்தொடங்கும் இங்கும் அப்படியே "அவித[1]த[2] மது[4]ரம் ஜகா[3]த[3]" என்றதனால் **செம்பொருளுடைய** உலகவழக்கான தமிழ்நடையில் பேசினான்: என்று பொருள் கொள்ளவேண்டுமென்பது பிரகரணத்தாலும், ஔசித்தியத்தாலும் சித்திக்கிறது (—இடத்தாலும், பொருந்துமாற்றாலும் பெறப்படுகிறது).

இனி அர்த்தத்தாலும் மதுரமும் தமிழும் ஒன்றென்று சித்திக்குமாறு காட்டுதும்.

**மதுரம்** என்பதும் **இனிது** என்பதும் ஒருபொருட்சொற்கள் என்பதைச் சாமானியரும் அறிவர். அந்த **இனிது** என்பதும் **தமிழ்** என்பதும் ஒருபொருட்சொற்கள் எனத் தமிழ்கற்றோரெல்லோரும் அறிவர்.

**இனிது** என்பதும் **தமிழ்** என்பதும் ஒருபொருளுடையவாகவே, **இனிது** என்பதனோடு ஒருபொருளுடைய **மதுரம்** என்பதும் **தமிழ்** என்பதும் ஒருபொருளுடையவாமென்று அறியத்தக்கதே.

தமிழ் என்ற சொல் **இனிது** என்பதன் பரியாயமாமாறு எங்ஙனம்? எனில் "**தமிழெ**ன்ப **தினிமை** நீர்மை" என்ற நிகண்டினாலும், கம்பராமாயணம் பம்பைப்படலத்தில் "வண்டு **தமிழ்**ப்பாட்டிசைக்குந் தாமரையே" என்பதற்கு 'வண்டுகள் இனிய கானத்தைப் பாடுதற்கு இடமான தாமரைமலர்' என்று பொருள்படுதலாலும், சிந்தாமணியில், '**தமிழ்தழீஇய சாயலவர்**' (2026) என்பதற்கு, 'இனிமைதழுவிய சாயலையுடையவர்' என்று நச்சினார்க்கினியர் பொருள் கூறுதலாலும் அறியலாம்.

இங்கு இனிமையையுணர்த்தும் **தமிழ்** என்னும் குணப் பண்புப் பெயர் அவ்வினிமையையுடைய பாஷைக்குப் பெயராயிற்று. இது நீலம் என்னும் நிறப்பண்புப்பெயர் அந்நீலநிறத்தையுடைய மலரையுணர்த்திப் பொருட்பெயரானாற்போலக் கொள்ளத் தக்கது.

இதுகாறுங் கூறியவாற்றால், அனுமான் சீதையிடம் பேசக்கருதி ஆலோசித்து நிச்சயிக்கப்பட்டதும், சீதையிடம் பேசியதும் ஆகிய பாஷை, **அர்த்தவத்** மானுஷபாஷையென்றும் அவித[1]த[2]மது[4]ர பாஷையென்றும் சொல்லப்பட்ட **முக்கியார்த்தவாசகங்களை**யுடைய வெளிப்படையான தமிழ்ப்பாஷையென்று நிரூபிக்கலாயிற்று.

மானுஷபாஷையைப் பற்றி உரைகாரர் குறிப்பிடுவது, (தற்கால நிலையை நினைந்து) சீதை தெரிந்துகொள்வதற்குரிய கோசல தேசத்துள்ளோரால் பேசப்படும் பாஷையாயிருக்கவேண்டுமென்பது.

மானுஷபாஷை யென்பதற்கு மனிதர்க்கு உரிய பாஷை என்பதே பொருள். இதில் உரியோர் மனிதர். உரிமைப்பொருள் பாஷை. மனிதர்க்கும் பாஷைக்கும் உள்ள சம்பந்தம் - வினைமுதலும் தொழிற்பண்புமாகிய சம்பந்தம். இந்தச் சம்பந்தத்தைத் தமிழர் தற்கிழமையென்பர். இதற்கு உதாரணம் : **சம்பந்தரது தமிழ்** என்பது போலுள்ளவை. தமிழ்ப்பாஷை இங்கு மானுஷத்தன்மையை நிரூபகதர்மமாகக் கொண்டு மாநுஷபாஷையென்று பெயரிடப் பட்டிருப்பதால் அது மானிடராயுள்ளோரெல்லோருக்கும் உரியதென்றே பொருள்படும்.

இப்பொருள் கொள்ளாது கோசலதேசத்துள்ள மானிடரால் பேசத்தக்க பாஷை என்று பொருள்சொல்வதானால், சப்தசக்தியை சங்கோசம் செய்யவேண்டியிருக்கிறது. அனுமான் பேச்சில் இப்படியான தோஷம் இருக்கக்கூடாது. கோசலதேசத்து மாநுஷபாஷை யென்பதே தாத்பர்யமானால் அதை "மாநுஷீமிஹஸம்ஸ்க்[1]ருதா[1]ம்" என்னாமல் "கௌ[1]சலீமிஹ ஸம்ஸ்க்[1]ருதா[1]ம்" என்றும், "மாநுஷம் வாக்[1]யம் அர்த்த[2]வத்[1]" என்னாமல் "கௌசலம் வாக்[1]யமர்த்த[2]வத்[1] என்றும் முன்னம் அனுமான் சிந்தனை செய்யுமிடத்தே தெளிவுபெறச் சொல்லியிருக்கக் கூடும். அவ்வாறு சொல்லாமையாலும், **மதுரம்** என்ற பெயர் தமிழையொழிய வேறு ஏதேனும் ஒரு பாஷைக்குரிய பெயராகக் காணப்படாமையாலும் கோசலதேசத்து மானுஷபாஷையென்னும் பொருள் பொருந்தாதிருக்கிறது.

அப்பொருளும் பொருந்துமாறு இராமாயணகாலத்தில் கோசல தேசத்துள்ளோரும் **தமிழராயிருந்தார்கள்**: என்று பொருள் கொள்வதே சிறந்ததாம். இதற்குக் கோசலதேசத்திலிருந்து இலங்கையளவும் உள்ள இராமாயணசரித்திர சம்பாஷணங்கள் தடையின்றி நடந்தேறிவந்திருப்பது சான்றாகும்.

அக்காலத்தில் கோசலதேசத்தார்பாஷை தமிழின் வேறாயிருந்த தென்றால், அது பிரமாணசித்தமாய் இன்னபாஷை என

வெளிப்பட்டிருக்கவேண்டும். அங்ஙனமில்லாமையாலும், ராமாயண காலத்தில் இருந்த அகத்தியனார் முதலியோர் சங்கமிருந்து தமிழாராய்ந்தமையாலும், தமிழ்ப்பாஷை மானிடர்க்கு உரியதாயிருந்த தென்று தெரிந்தமையாலும், தமிழ் மாநுஷபாஷையென்று சொல்லத் தக்கதாயிருந்ததென்று சித்திக்கிறது.

தமிழ் மாநுஷபாஷையென்று பொதுப்படக் கூறப்பட்டமையால், அக்காலத்தில் மானிடர்வாழுமிடமெங்கும் தேசபாஷையாகத் தமிழ்மொழி நடைபெற்றிருந்ததென்று அறியத்தக்கதாயிற்று.

இம்முடிபிற்கு உதவியான பிறசான்றுகளும் உள்ளன. அவையும் தொடர்புடைமையால் இனி ஆராயத்தகும்.

# 7. மாநுஷபாஷை தமிழ் என்பதற்குப் பிறசான்றுகள்

## 1. கம்பராமாயணம்

வான்மீகத்திலுள்ள பலகுறிப்புக்களால் இராமாயணகாலத்தில் இமயந்தொடங்கி இலங்கையளவான நாடுகளிலுள்ளோரெல்லோருக்கும் தாய்மொழி தமிழாயிருந்ததென்று கருதப்பபடுகிறது. இக்கருத்தைக் கம்பராமாயணத் துள்ளும் காணலாம்.

கல்வியிற்சிறந்த கம்பநாடர் வான்மீகிபகவான் வாக்கின் சொற் பொருணயங்களை நோக்கி,

"நொய்தின் நொய்யசொல் நூற்கலுற்றே னென்னை
வைத வைவின் மராமர மேழ்தொளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே"✱

என்றார். இங்கு ஈற்றடியைச் 'செய்த செய்தவன் செய்யுளின் முன்னரோ' என்று மோனைநயம்பெறக் கூறலையும் விடுத்துச் 'சொல் நின்ற தேயத்தே' என்றமையால், கம்பர் வான்மீகிபகவான் சொல்லும் சொற்களின் பொருட்பெருக்க முதலியவற்றை நினைந்து வியந்துள்ளார்: என்று அறியலாம்.

இதுவேயுமன்றி, அனுமான்பேச்சைப்பற்றியும், இராமன் வாயாலே, கம்பர்,✲ 'யார்கொல் இச் சொல்லின்செல்வன்,................விரிஞ்சனோ விடைவலானோ' என்று வியந்து புகழ்ந்துள்ளார்.

✱ கம்பராமாயணம். பாயிரம். செய். 5.

✲ கிஷ்கிந்தாகாண்டம். அனுமப்படலம். செய். 20.

அவ் வான்மீகிபகவான்பேச்சும் அனுமான்பேச்சும் சேர்ந்து ஒன்றாகநிற்கும் நிலையில் (-வான்மீகிபகவான் அனுமான்வாயாலே பேசும் பேச்சில்) தமிழ்மொழிக்கு **மாநுஷம்** என்று ஒருபெயர் வழங்கப்பட்டது. இப்பெயர் எவ்வளவு பொருளடக்கமுடையதாயிருக்கவேண்டுமென்பதை அக்கம்பநாடரே அறிந்தவராவர். அவர் அறிந்துசொல்லிய சில குறிப்புக்களால் தமிழைப்பற்றிய மிகப்பழமையான சரித்திரம் சிறிது ஒருவாறு அறியத்தகும். அவற்றுள்,

(முதலாவது குறிப்பு)

ஆரணியகாண்டத்துள், இராமன் அகஸ்தியாச்சிரமம் செல்வுழி, அகஸ்தியரது சிறப்புரைப்பாராகி, கம்பர், அவ் வகஸ்தியரை,

'**என்றுமுள தென்றமிழ்** இயம்பி இசைகொண்டான்'*

என்றார்.

இதனுள், தமிழை 'என்றுமுள்ளது' என்றதற்குக்காரணம், வான்மீகிபகவான் அனுமான்வாயால் தமிழை '**மாநுஷீவாக்**' என்றும், '**மாநுஷம்வாக்யம்**' என்றும் சொல்லியிருப்பதேயாம்.

**மாநுஷீவாக்** என்பதற்கும் **மாநுஷம்வாக்யம்** என்பதற்கும் வடமொழியிற் சொற்பற்றிநிற்கும் பால்வேற்றுமையல்லது பொருள்பற்றிய வேற்றுமை சிறிதுமில்லை.

மாநுஷீ என்பதும் மாநுஷம் என்பதும் (மானிடருடையது என்னும்) ஒரு பொருளுடையனவாம். **வாக்** எனினும், **வாக்யம்** எனினும், பாஷையெனினும் ஒக்கும். எனவே, மாநுஷீ **வாக், மாநுஷம் வாக்யம்** என்னும் இரண்டும் **மானிடருடைய பாஷை** என்னும் ஒரே பொருளுடையனவென்பது போதரும்.

* ஆரணியகாண்டம். அகத்தியப்படலம். செய். 47.

மானிடருடையபாஷை யென்பதில் உடைமைப்பொருள் இரண்டு வகைப்படும். அவை ❊ தற்கிழமைப் பொருளும் ●பிறிதின் கிழமைப் பொருளுமாம்.

பாஷையைப் பேசுவோராகிய மானிடர்க்கு அவர்பேசும் பேச்சாகிய பாஷை **தற்கிழமைப் பொருளாம்**. இது உடலின்கண் உறுப்புக்கள் போல் ஒற்றுமைச் சம்பந்தம்பற்றிநிற்பது. இதற்கு உதாரணம்: சம்பந்தர் பாடிய பாட்டைச் சம்பந்தர்பாட்டு என்பது போல்வது.

பிறிதின்கிழமைப்பொருள் : உடலின்கண் உள்ள ஆடை அணி கலன்கள் போல வேற்றுமைச் சம்பந்தம் பற்றி நிற்பது. இப்பிறிதின் கிழமையான பேச்சுக்கு உதாரணம்: **ஒருபுலவன்** சம்பந்தர்விஷயமாகப் பாடிய **பிள்ளைத் தமிழைச் சம்பந்தர்பிள்ளைத்தமிழ்** என்பதுபோல்வது.

இவ்வாறு **மானிடர்விஷயமான பாஷை** யென்பதற்கிடமில்லாமல் **மானிடர்பேசும்பாஷை** என்னும் பொருளில் **மாநுஷீவாக்** என்றும் **மாநுஷம்வாக்யம்** என்றும் வழங்கப்பட்டிருப்பதால் அப்பெயர்களுடைய பாஷை மானிடர்க்குத் தற்கிழமைப்பொருளேயாம்.

தற்கிழமைப்பொருளோ சினையும் முதலும், வினையும் வினை முதலும்போல் ஒன்றைவிட்டொன்று பிரியாது ஒன்றுபட்டிருப்பதே. இதனால், மாநுஷபாஷையென்னும் தமிழ்ப்பாஷை, வினையும் வினைமுதலும்போல் மானிடரைவிட்டுப்பிரியாத ஒன்றுபட்ட சம்பந்தமுடையதென்பது பொருட்குறிப்பாற் பெறப்பட்டது.

உலகத்துள்ள பாஷைகள் இயற்கையாயும் செயற்கையாயும் இரண்டு வகைப்பட்டிருக்கும்.

❊ தற்கிழமை - சமவாயசம்பந்தம்

● பிறிதின் கிழமை - ஸம்யோகா[3]தி[3] ஸம்பந்தம்

கிளி நாகணவாய் முதலிய பறவைகளுக்குப் பிறப்புரிமையாயுள்ள ஒலிக்குறிப்புக்கள் அவற்றிற்கு இயற்கையாயுள்ள பாஷைகளாம்; பின்பு அப்பறவைகளை வளர்க்கும் மானிடர் அவற்றிற்குப் பயில்விக்கும் தமிழ்மொழி முதலிய பாஷைகள் அவற்றிற்குச் செயற்கையாயுள்ள பாஷைகளாம்.

அவ்வாறே மானிடர்க்கும் பிறப்புரிமையாயுள்ள பாஷை ஒன்று இருக்கவேண்டுமன்றே! அது தமிழ்மொழியென்றும், பின்பு செயற்கையாயுள்ளபாஷை தேவபாஷை முதலிய பிறமொழியென்றும் கொள்ளத்தகும்.

இக்கருத்துக்கொண்டே **இயற்கையானமைந்த தம்மொழி** யென்னும் பொருள்தோன்ற, மாநுஷபாஷையின் ஒருபகுதிக்கு **இயற்றமிழ்** என்று பெயரிட்டு வழங்குவதும் நோக்கத்தக்கது.

இவ்வாறக, மானிடர்களுக்கு இன்றியமையாத உறுப்புக்கள்போலத் தமிழ்மொழியும் அவருடன் ஒற்றுமைச்சம்பந்தமுடையதாய் ஊழிதோறூழி தப்பாமே தோன்றிவருமாதலால் அது **என்றும் உளதாம்** என்று பெறப்பட்டது.

மானிடவடிவம் பிறந்திறந்து அழிந்துபடுதலால் அநித்திய மானாலும், மானிடத்தன்மையாகிய ஜாதி நித்தியமாயுள்ளதென்பது தருக்கநூற்றுணிபு.

ஜாதி நித்தியமாகவே அச்சாதி புலப்படுதற்குரிய உறுப்பின் கூட்டத்தொகுதியின் தோற்றம் ஊழிதோறூழி மாறுபடாது ஒருபடியே மானிடர்க்குரிய கை கால் தலை செவி முகம் முதலியன பிறழாது அமைவதுபோல, இயல்பாகவே அவர்பேசுதற்குரிய பாஷையும் பிறழாது தமிழாகவே அமையும் என்பதாம்.

இதனால், மானிடர்தோன்றும் காலங்களிலெல்லாம் தமிழ்மொழி தப்பாமேதோன்றும் என்னும் கருத்தால் **'என்றுமுளதென்றமிழ்'** என்றார்.

(இரண்டாவது குறிப்பு)

என்றுமுளது என்றமையாலே தமிழ்க்குக் காலவரையறையில்லை என்றதனோ டமையாது, அது தேசவரையறையும் இல்லாமலிருந்தது என்னும் கருத்தால்

**'நீண்டதமிழால் உலகை நேமியின் அளந்தான்'**✳

என்றார்.

இதன்பொருள்:- அகஸ்தியமுனிவர் வாமனாவதாரரூபியான திருமால்போலக் குறுமுனியாயிருந்துகொண்டே அத்திருமால் நீண்ட பாதங்களிரண்டாலும் உலகங்களை அடக்கியளந்ததுபோலத் தமக்கு அகத்துறுப்பாகி நீண்ட உலகவழக்கு செய்யுள்வழக்கு என்னும் இரண்டுபாதங்களால், உலகிலுள்ள பொருள்களையெல்லாம் அடக்கியளந்தார் என்பது.

இங்கு வான்மீகிமுனிவர் அனுமான் வாயாற்கூறிய, "வாசஞ்சோதா[3]ஹரிஷ்யாமி மாநுஷீமிஹஸம்ஸ்கிரு[1]தா[1]ம்" என்ற **செய்யுள்வழக்கையும்**, "அவச்யமபி[1]வக்த[1]வ்யம் மாநுஷம் வாக்[1]யம் அர்த்த[2]வத்[1]" என்ற **உலகவழக்கையும்** அகஸ்தியரின் அகத் துறுப்பான **இரண்டு** பாதங்களாகக் கொண்டு பொருள்சொல்லுமாறு நேமியோனை உவமித்திருப்பதும் நோக்கத்தக்கது.

இங்ஙனம் தமிழ்மொழி உலகமுழுதும் பரவியிருந்ததென்பது மிகப் பழையகால நிகழ்ச்சியென்னும் கருத்தால் **நீண்டதமிழ்** என இறந்தகாலவினையாற் கூறினார்.

(மூன்றாவது குறிப்பு)

படைப்புக்காலந்தொடங்கி உலகமுழுதும் பரவிச்சென்ற தமிழ், இராமாயணகாலத்திலும் வடநாட்டில் வழங்காமற்போகவில்லை யென்று தோன்றுகிறது.

✳ ஆரணியகாண்டம். அகத்தியப்படலம். செய். 36.

இதனை இராமன் நாடிழந்து காடடையநேர்ந்ததுகண்டு சினங்கொண்டுநின்ற இலக்குவனைச் சினமாற்றுகின்ற இராமனைப் பேசுமிடத்தில், கம்பர்,

*"நன்சொற்கடந்தாண் டெனைநாளும் வளர்த்ததாதை*
*தன்சொற்கடந்தெற் கரசாள்வது தக்கதன்றால்*
*என்சொற்கடந்தா லுனக்கியா துள தீனமென்றான்*
***தென்சொற்கடந்தான் வடசொற்கலைக்கெல்லைதேர்ந்தான்"*** ※

என்றார்.

இதனுள், **தென்சொல்** எனச்சொற்பற்றிக் கூறியதனால் தமிழ் அக்காலத்தும் உலகவழக்காயுள்ள பாஷை என்பது பெறப்பட்டது. வடசொற்**கலை** எனக் கலைபற்றிக் கூறியதனால் வடமொழி நூல்வழக்காகவே அக்காலத்தும் இருந்ததென்பது பெறப்பட்டது. **தென்சொற்கடந்தான்** என்றதனால் இராமன் மாநுஷபாஷையான தமிழை முற்றக் கற்றவனென்றும், வடசொற்கலைக் கெல்லைதேர்ந்தான் என்றதனால் தேவபாஷையான ஸம்ஸ்கிருதநூல்களை முழுதும் உணர்ந்தவனென்றும் வெளிப்படக் கூறிவிட்டார்.

இதனால் இலக்குவன் சினந்தணிந்து தெளியுமாறு தென்சொல்லால் உலகவழக்கான லௌகிகவியவகாரங்களாலும், வடநூல்கொண்டு வைதிகவியவஹாரங்களான தர்மநிரூபணங்களாலும் பேசும் சொல் வன்மையுடையவன் இராமன் என்றவாறாயிற்று.

இதற்கு இவ்வாறு பொருள்கூறாது, தென்சொற்கள் தந்தான் எனப் பிரித்து, 'இனியசொற்களை வழங்கினான்' எனப் பொருள் கூறின், தென்சொல், வடசொல் எனத் திசைப்பொருளும் அகப்படக் கூறியிருக்கும் சொற்பொருண்முரணாகிய செய்யுளழகழிவதுமன்றி, 'என்றான்' என

※ அயோத்தியாகாண்டம். நகர்நீங்குபடலம். செய்.140

மூன்றாமடியின் முற்றிநின்ற முற்றுச்சொல்லை யாதொருபயனுமின்றி எச்சச்சொல்லாக்கி யிடர்ப்படுவதோடு, எடுத்துக்கொண்டபொருளை முடித்தற்குரியதாயிருக்கும் ஏதுவையும் இழந்து, பெயரடுக்கழகையும் கெடுத்தலால் அது கம்பர்கருத்தாகா தென்க.

(நான்காவது குறிப்பு)

இங்கு, கம்பர் இராமனைத் தமிழ்கற்றவன் என்றமையால் அவனைக் கற்பித்த வசிட்டரும் தமிழ்கற்றவராவர். ஒருவருக்கு இரண்டுபாஷைப் பயிற்சி சொல்லப்பட்டமையால் அவற்றுள் தென்சொல்லாகிய **தமிழ்** மாநுஷபாஷையான தாய்மொழியாயும், வட சொல்லாகிய ஸம்ஸ்கிருதம் வந்தேறியான சாஸ்திரபாஷையாயும் அக்காலத்திலும் அங்கும் இருந்தனவென்று அறியத்தகும்.

தென்சொல் வடசொல் என்பவற்றின் திசைப்பெயராகிய அடைமொழிகள் இங்குக் கூறிய கொள்கையின் மறுப்பிற்கு உரியன போலத் தோன்றலாம். அவை அங்ஙனம் ஆகாவென்பது பின்பு ஆராய்ந்து காட்டப்படும்.

(ஐந்தாவது குறிப்பு)

இனி, கம்பர் தம் வாயாலே இராமனைத் தமிழன் என்று காட்டியதோடமையாது, அவனுக்குக் குலமுதல்வனான இக்ஷ்வாகுவும் தமிழன் என்பது தோன்ற, விசுவாமித்திரன்வாயாலே,

> *'பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி*
> *மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்*
> *பணியரங்கப்* **பெரும்பாயற் பரஞ்சுடரை** *யாங்காண்*
> **அணியரங்கந் தந்தானை** *யறியாதார் அறியாதார்'*●

என்கிறார்.

● பாலகாண்டம். குலமுறைகிளத்துபடலம். செய்.2.

இதனுள், இக்காலத்தும் தமிழ்நாடாகவேயுள்ள 'சோழவளநாட்டில் திருவரங்கமென்னும் திவ்யக்ஷேத்திரத்தில் இராமனுக்குக் குலமுதல்வனான **இக்ஷ்வாகு** என்னும் அரசன், ப்ரும்மதேவனை வழிபட்டுப் **பாம்பணைப்பரஞ்சுடரைப்பெற்றுப்** பிரதிஷ்டைசெய்தவன் என்றமையால், அவன் **காவிரிநாடுடைய** தமிழராகிய **சோழர்** குலமுதலாயுள்ளான் என்று குறிப்பாற் சொல்லியவாறாயிற்று.

(ஆறாவது குறிப்பு)

இன்னும், கம்பநாடர் வசிட்டர்வாயால் இராமனை நோக்கி,

*'அன்றயன் உலகினை யளிக்க வாகிய*
*உன்றனிக் குலமுத லுள்ள வேந்தர்கள்*
*இன்றள வினுமுறை யிகந்து ளாரிலை'* ✳

என்றார்.

இதனால் படைப்புக்காலந்தொடங்கிவருவதாயுள்ளது இராமனுடைய குடிப்பிறப்பு என்று சொல்லப்பட்டது.

இந்த வரலாறுகொண்டே பரிமேலழகரும், **குடிமை**யென்னும் அதிகாரத்துள், 'பழங்குடி பண்பிற் றலைப்பிரித லின்று' என்பதில் 'பழங்குடி' என்பதற்குத் 'தொன்றுதொட்டுவருகின்ற குடி' என்று உரையெழுதிவிட்டு, விசேடவுரையில், 'தொன்றுதொட்டுவருதல் - சேர **சோழ** பாண்டியர் என்றாற் போலப் **படைப்புக்காலந்தொடங்கி** மேம்பட்டுவருதல்' என்றார்.

இதனாலும், '**சோழர்குடி** படைப்புக்காலந்தொட்டு மேம்பட்டுவரும் குடி' என்று **இக்ஷ்வாகுகுலத்தைக்** கூறினாராயிற்று.

இந்த இக்ஷ்வாகுவின் குலமுதல்வனான மனுவை மனுச்சோழ னென்றும் அவன் மனுமுறைகண்டவனென்றும் தமிழ்நாட்டரசனென்றும்

✳ அயோத்தியாகாண்டம். கிளைகண்டுநீங்குபடலம். செய்.122.

பெரியபுராணம் கூறுகிறது. இது தவறாகுமாயின், மனு, இக்ஷ்வாகு முதலிய சூரியகுலத்தரசர்களுள் முற்பட்டவர் இருந்த ஊர் நாடு முதலிய விவரங்கள் வேறாக வெளிப்பட்டிருக்க வேண்டும். அங்ஙன மில்லாமையால் அவரைத் தமிழர் எனக் கொள்ளத் தடையென்னை.

(ஏழாவது குறிப்பு)

மேலும், இராமன் முடிசூடற்சிறப்புச் சொல்லுமிடத்துக் கம்பர்,

'.................................. **வெண்ணையூர்ச் சடையன் றன்ன**
**மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'**※

என்றார்.

இதனால் அயோத்திநகரத்தவரான சூரியகுலத்தரசரது அணிகலம் நிறைந்த மணிமுடிக்கோயிலின் **முத்திரைக்கருத்தராயும்** அமைச் சுரிமையுடையராயும் இருந்தவர்கள் **வெண்ணைச்சடையவள்ளலின்** மரபின் **முன்னையோர்** என்றமையால் அங்கிருந்த சுமந்திரன் முதலான மந்திரக்கிழவரும் **தமிழர்** என்பது கண்கூடாயிற்று.

இதனாலும் அக்காலத்தில் தமிழர் வடநாட்டிலும் இருந்தார்கள் என்று அறியத்தக்கதாயிற்று.

**சோழவரசரின் பூர்விகரும் வெண்ணைச்சடையவள்ளலின் பூர்விகரும்** வடநாட்டினின்றும் தென்னாட்டுக்கு வந்தவர்கள் எனக்கொள்ளில் இக்காலத்து ஆராய்ச்சியாளர் கருத்துப்படி அவர் தமிழராகாது ஆரியராக வேண்டும்.

கம்பர் அவரை அங்ஙனங் கருதாது, **தென்னாட்டினின்றும்** வடநா... சென்ற தமிழராகவே கருதுகின்றனர். இதனைப் பின்வருமவற்றால் அறியலாம்.

※ யுத்தகாண்டம். திருமுடிசூட்டுபடலம். செய்.38.

மஹாகவிகளாயுள்ளவர்கள் தம் காவியநாயகனுடைய தசாங்கத்தைச் சேர்ந்த நாடு யாறு முதலியவற்றிற்கு உவமைகூறுமிடத்து அவற்றினும் மிகச்சிறந்தவற்றைக்கொண்டு உவமிப்பதல்லது சிறிதளவேனும் தாழ்ந்தபொருளைக்கொண்டு உவமிக்கக் கனவிலும் கருதார்.

கம்பர் இராமனைக் **'கங்கைத்தீம்புனல்நாடன்'**★ என்றும், **'கோசல நாடுடைவள்ளல்'**● என்றும், அவனுக்குரிய யாறும் நாடும் கொண்டு சிறப்பித்துள்ளார்.

அந்தக் கங்கையாற்றிற்கும் கோசலநாட்டுக்கும் நூற்றிலொரு பங்கும் ஆற்றாத காவிரியாற்றையும் சோழவளநாட்டையும் கங்கையாற்றிற்கும் கோசலநாட்டிற்கும் உவமமாக வைத்து, **'காவிரிநாடன்ன கழனி நாடொரீஇ'**◆ என்கிறார்.

இது காவியமரியாதையினின்று நழுவிய மரபுவழுவாகும். இவ்வழு, கம்பர்கவிக்கு வாராமற் காக்கத் தக்க காரணம் இருக்கவேண்டும். அக்காரணம் யாதெனில், கங்கைநாடும் காவிரிநாடும் அக்குலத்தவர்க் குரியனவாக வேண்டும். அவற்றுள், கங்கைநாட்டினும் காவிரிநாடு அவர்க்கு மிக்க உரிமையுடையதாயிருப்பின் அதனைக் கங்கைநாட்டிற்கு உவமைகூறுதல் பொருந்தும், அல்லாக்கால் பொருந்தாது.

காவிரிநாடு தொன்றுதொட்டுவந்த இயற்கையுரிமையுடையதாயும், கங்கைநாடு இடையே வந்தேறியான செயற்கையுரிமையுடையதாயும் உள்ளன என்பதும், அதனால் அவர்க்குக் கங்கைநாட்டினும் காவிரிநாடே சிறந்ததாம் என்பதும் கருத்தாகவேண்டும். அதனால் இது குற்றமுடையதாகாதென்பது கம்பர் கருத்தென்று தோன்றுகிறது.

இங்கு இவனமுன்னோர் காவிரிநாடொரீஇ வடதிசைசென்று நாடுகொண்டதன்மறுதலையாய் இவன் கங்கைநாடொரீஇத்

★ பாலகாண்டம். தாடகைவதைப்படலம். செய்.68.

● யுத்தகாண்டம். முதற்போர்ப்படலம். செய்.256.

◆ அயோத்தியாகாண்டம். குகப்படலம். செய்.1

தென்றிசைசென்று காடுகொள்வானாயினான் என்னும் குறிப்பால் இராமாயண காலத்தின்முன்னம் மனுமரபினராகிய தமிழ் அரசர்கள் வடநாடு கொண்டனர் என்பது வெளியாகிறது.

அங்ஙனமாகில், திருவரங்கப்பெருமான் அயோத்தியரசரால் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கப்பெற்றிருந்து, பின்பு இராமனால் விபீஷணனுக்குக் கொடுக்கப்பெற்று, விபீஷணன் இலங்கை நோக்கிச் செல்லுமிடையே திருவரங்கத்தில் பிரதிஷ்டிதரானார்: என்ற ஐதிகம் பொருந்துமாறு எங்ஙனமெனில், இக்ஷ்வாகுகுலத்தரசர் வடநாடு செல்லுங்காலத்தில் தம் குலதெய்வமாகிய திருவரங்கப்பெருமானையும் உடன்கொண்டுசென்று வழிபடுதல் அவர்க்குக் கடமையாதலால் அவ்வாறுசென்று அவர்க்கு இருப்பிடமாகக் கொண்ட அயோத்தியில் அவரால் வழிபடப்பெற்றிருக்கலாமென்று தோன்றுகிறது. இது,

*'தேம்புனற் படப்பை மூதூர்த் திருநகர் அயோத்தி சேர்ந்த*
*பாம்பணை யமலன்றன்னைப் பழிச்சொடு வணக்கம் பேணி*
*.................................................. அரசரும் மற்றுளோரும்*
*ஏம்பலுற்றிருந்தார்'.* *

என்னும் **கம்பர்பாடலுள் அயோத்தியுள்ள** என்னாது **'அயோத்தி சேர்ந்த பாம்பணையமலன்'** என்ற குறிப்பால் வெளியாகும்.

இவ்வாறு இக்ஷ்வாகுகுலத்தவரால் திருவரங்கத்தினின்று அயோத்திக்குக் கொண்டுசெல்லப்பெற்று அங்கு அவரால் பிரதிஷ்டித்து வழிபடப்பெற்றுவந்த பாம்பணையமலனான திருவரங்கப்பெருமான், பின்பு இராமன் வீடணற்கு வழங்கியபொழுது அவன் இலங்கைநோக்கி வருங்கால் திருவரங்கத்தில் யதாஸ்தானம் அங்குள்ள சோழர்களின் வேண்டுகோளால் மறுமுறை பிரதிஷ்டிதராயிருக்கலாமென்று கொள்ளில் விரோதமில்லை.

* யுத்தகாண்டம். விடைகொடுத்தபடலம். செய்.13.

இக்காலத்திலும் தேசாந்தரங்களிற் குடியேறும் தமிழ்மக்கள் தம் குலதெய்வமிருக்கும் கோயிலிற் பிடிமண் எடுத்துச்சென்று தாம் தங்கிவாழுமிடத்தில் கோயில் அமைத்து அதில் அப் பிடிமண்ணைப் பதித்து அதன்மேல் அத்தெய்வத்தின் உருவத்தை இயற்றித் தொழுது வருகிறார்கள். இது தமிழ்மக்களது தொன்றுதொட்ட மரபாயுள்ளது.

இன்னும், மனுகுலத்தவனான சிபியைப்பற்றி,

*'பிறந்தநாட் டொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன் பெற்றி*
*மறந்தநாள் உளவோ'* ✲

என்று இராமன்வாயாற் கம்பர் பேசியுள்ளார்.

இதனால், **சிபி இராமாயணகாலத்துக்கு முற்பட்டவன்** என்பது கம்பர் கருத்தாகும்.

இந்தச் சிபி தமிழ்நாட்டரசன் என்பதற்குச் சில சான்றுகள் உள்ளன. அவை வருமாறு:-

## 2. புறநானூறு

புறநானூற்றுள் **37**-ஆம் பாட்டில்,

*'புள்ளுறு புன்கண் தீர்த்த வெள்வேற்*
*சினங்கெழு தானைச் செம்பியன் மருக'* என்றும்,

**43**-ஆம் பாட்டில்,

*'கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇத்*
*தன்னகம் புக்க குறுநடைப் புறவின்*
*தபுதி யஞ்சிச் சீரை புக்க*
*வரையா வீகை யுரவோன் மருக'* என்றும்,

✲ யுத்தகாண்டம். விபீஷணனடைக்கலப்படலம். செய்.110.

**46**-ஆம் பாட்டில்,

> *'நீயே, புறவி னல்ல லன்றியும் பிறவும்*
> *இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை'* என்றும்,

**39**-ஆம் பாட்டில்,

> *'புறவி னல்லல் சொல்லிய கறையடி*
> *யானை வான்மருப் பெறிந்த வெண்கடைக்*
> *கோனிறை துலாஅம் புக்கோன் மருக'* என்றும்,

சரித்திரச்சான்றுகொண்டு **சோழவரசர் சிபிமரபினர்** எனப் பொய்யில் புலவராற் சொல்லப்பட்டனர்.

அன்றியும், மேற்குறித்த **39**-ஆம் புறப்பாட்டினுள்ளே,

> *'...................................................................... ஓங்கிய*
> *வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்*
> *டிமயஞ் சூட்டிய வேம விற்பொறி*
> *மாண்வினை நெடுந்தேர் வானவன் தொலைய*
> *வாடா வஞ்சி வாட்டுநின்*
> *பீடுகெழு நோன்றாள் பாடுங் காலே'*

என்பதனால், '**இமயவரையளவும் வடநாட்டவரை வென்று** தன் **விற்பொறியை இமயவரையிற் பொறித்த சேரன்** அழியும்படி அவனை வென்ற நினதுமுயற்சியைப் பாடுமிடத்து யான் எங்ஙனம் புகல்வேன்' என்று **சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார்** பாடியுள்ளார்.

இங்கு ஒரு முக்கியமான விஷயம் **ஊன்றிநோக்கத்தகும்.** புலவர்கள் ஒரு அரசனைப்பாடும் பாட்டில் அப்பாட்டு டைத்தலைவனுக்குப் **பகையான** அரசனைப் **பொய்யே** சிறப்பித்துப் பாடார். உண்மையான வெற்றி அப்பகையரசனுக்கு இருக்குமாகில் அதனை விளங்கக்கூறி, அத்தகைய சிறப்புடையானை வென்றாய்: என்று

பாட்டுடையானைச் சிறப்பிப்பார். அங்ஙனமன்றிப் பகைவனுக்குப் பொய்யான வெற்றியைத் தாமே படைத்துக்கூறிக்கொண்டு அத்தகையானை வென்றாயென்றால் அது நகைப்புக்கிடமாகி இழிவு பயப்பதாகும். ஆதலால் சேரன் வடநாட்டவரை **வென்று** இமய **வரையில் தன் விற்பொறி தீட்டினோன்:** என்பது உண்மையாகக் கொள்ளத்தக்கதே. இங்கு **இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்** என்ற பெயர்ப் பொருளும் நோக்கத்தக்கது.

இஃதுண்மையாகவே, அச்சேரரிற் சிறந்த சிபிமரபினரான தமிழச்சோழவரசரும் ஒருகாலத்தில் வடநாட்டவரை வென்று இமயமளவும் தம்மடிப்படுத்தி அயோத்தியாராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொண்டு ஆண்டுவந்திருக்கலாம் என்பது பொருந்தாததன்று.

> *'பொன்னிமயக் கோட்டுப் புலிபொறித்து மண்ணாண்டான்*
> *மன்னன் வளவன் மதிற்புகார் வாழ்வேந்தன்'* ●

என்ற சிலப்பதிகாரப்பகுதியும் இதனை வலியுறுத்தும். இது அரசர் குலத்துதித்துத் துறவடைந்த பொய்யில்புலவரான இளங்கோவடிகள் வாக்கு.

இனி, சிபிமரபினர்க்குத் தொன்றுதொட்டுரிமையுள்ள நாடு காவிரி நாடென்பதைப் பின்வரும் வடநூற்பிரமாணங்களாலும் அறியலாம்.

### 3. பா1ணிநீய வியாக1ரணம்

பாணிநீயவியாகரணத்தில் "ஜநப1த3சப்3த3ாத் க்ஷத்1ரியாத3ஞ்" என்று ஒரு சூத்திரம் உண்டு. அதன் விருத்தி,

"ஜநப்1த3சப்3தா3த் க்ஷத்1ரியயோர்வாசக்1ரது1 அஞ்ஸ்யாத்1 அப1த்1யே" என்பது.

● ஆய்ச்சியர்குரவை. உள்வரிவாழ்த்து. 2.

இதன்பொருள்:- 'ஒருதேசத்துக்கும் அதனையாளும் அரசனாகிய க்ஷத்திரியனுக்கும் பொதுவாயுள்ள ஒரு பெயர் பகுதியாக, அப்பெயர்ப் பொருட்குரிய மக்கள் என்னும் பொருளில் (அப்பெயர்ப்பின்) அஞ் என்னும் விகுதி வரும் என்பதாம்.

இச்சூத்திரவிதிப்படி, ஒருநாட்டினுக்கும், அதன் அரசனுக்கும் உரிய சிபி3 என்னும் பெயர் பகுதியாக, அப்பெயர்ப்பொருட்குரிய மக்கள் என்னும் பொருளில் **அஞ்** என்னும் விகுதிவர, அதற்குரிய செய்கை செய்ய **சைப்3யர்** என்னும் பெயர் உண்டாகிறது.

### 4. த3சகு1மாரச1ரிதம்

**சிபி** என்னும் நாட்டின்பெயர் தண்டியாசிரியர் செய்த **தசகுமாரசரிதத்தின்** ஆறாவது உச்வாஸத்திற் காணப்படுகிறது. அது,

> *"ஏக1தா3து1 சிபி3ஷு ப1ட்1ட1நே*
> *ஸஹ பி1த்ருப்4யா மவஸித1மஹர்த்3தி4 மவசீர்ண*
> *ப4வநஸாராம் தா4த்1ர்யா ப்ரத3ர்ச்யமாநாம்*
> *க1ாஞ்ச1ன விரலபூ4ஷணாம் குமாரீம்த3த3ர்ச"*

என்பது.

இதன் வியாக்யானமாயுள்ள பூ4ஷணா, லகு4தீ3பி1கா1 என்பவைகளில், சிபி3ஷு - காவேரீத3க்ஷிண தீ1ரேஷு (சிபியில் — காவிரியின் தென்கரை நாட்டில்) என்று குறிப்புரையெழுதி, அதற்கு ஆதரவாக, "சிபி3ர்மருத்3வ்ருதா4யாஸ்து1 த3க்ஷிணம் தீ1ர முச்1யதே1 (இஷ்யதே1) இதி1 வைஜயந்தீ1" என்று, வைஜயந்தீயென்னும் வட மொழிநிகண்டில் சிபி3 யென்பது **காவேரியின் தென்கரைநாட்டிற்குப் பெயர்:** என்று சொல்லியிருப்பதை மேற்கோள்காட்டி, சிபி நாடு சோழநாடென்று நிரூபிக்கப்பெற்றிருக்கிறது.

ப$^1$ட்$^1$ட$^1$நே என்றது காவிரிப்பூம்பட்டினத்தில் என்றவாறு.

பட்டினம் என்னும் தமிழ்ப்பெயர் கடற்றுறைநகருக்குப் பெயராய் அது சோழர்க்குரிய **காவிரிப்பூம்பட்டினத்தை** நாமைக தேசத்தால் உணர்த்துகிறது. இதனைப் **பட்டினப்பாலை** என்ற பெயரால் அறியலாம். அது வடமொழிக்கண் தற்பவமாகத் திரிந்து '**பட்டநம்**' என்றாயிற்று.

ஆகவே **சிபி** என்னும் நாடு, காவிரிப்பூம்பட்டினமுள்ளதும் காவேரியாற்றின் தென்கரைப் பகுதியுமான இரண்டு இலக்கணங் களையுடைய சோழவளநாடென்பது பெறப்பட்டது.

குருக்ஷேத்திரத்தை **(குருநாட்டை)** ஆண்ட ஒரு அரசனுக்குக் குருவென்று பெயராயதுபோலச் சிபிநாட்டை ஆண்ட ஒரு அரசனுக்குச் **சிபி** என்று பெயராயிற்று. ஆகவே, அவன்குலத்துதித்த மக்கள் **சைப்யர்** எனப் பெயர் பெற்றனர். அப்பெயர் தமிழில் தற்பவத் திரிபாய்ச் **செம்பியர்** என்று சோழமன்னருக்குப் பெயராயிற்று.

பின், செம்பியர் ஆளும் நாடு **செம்பிநாடு** என்றும், செம்பி நாடாள்பவர் **செம்பியர்** என்றும் பெயர்கள் தோன்றின.

இவற்றால், **இக்ஷ்வாகுகுலத்தவனாகிய சிபிக்குரிய நாடு சிபிநாடாகிய காவிரிப்பூம்பட்டினமிருந்த சோழவளநாடு** என்றும், அச்சிபி மரபினர் வடநாடு சென்று அங்கும் ராஜ்யங்களை அமைத்துக்கொண்டு ஆண்டு வந்தாரென்றும், அதனால் அவர்களும் தமிழரேயென்றும் அறியலாயிற்று.

இம்முடிபிற்கு அநுகுணமான வேறுசில சான்றுகளும் உள்ளன. தொடர்புடைமையால் அவையும் ஈண்டு ஆராயப்படும்.

## 5. பெரியபுராணம்

பெரியபுராணத்துள், திருவாரூர்ச்சிறப்புச் சொல்லி,

'அன்ன தொன்னகருக் கரசாயினான்
துன்னும் வெங்கதிரோன்வழித் தோன்றினான்
மன்னுசீர் அநபாயன் வழிமுதல்
மின்னுமாமணிப்பூண் மனுவேந்தனே'*

என்று தொடங்கி மனுமுறை சொல்லப்படுகிறது.

இப்பாட்டினுள், அநபாயசோழனுக்குக் குலமுதல்வன் மனுவேந்தனென்றும், அவன் கதிரோன்வழித்தோன்றினவன் என்றும் சொல்லப்பட்டுள்ளான்.

கதிரோன்வழித் தோன்றினான் என்பதற்குக் கதிரோனையடுத்துத் தோன்றினான் என்பது பொருள். இது தலைப்பிள்ளைக்கு அடுத்த பிள்ளையை வழிப்பிள்ளையென்பதுபோலும் வழக்கு. இதனால், கதிரோன் குலமுதல்வனானான்; அவனையடுத்து மனுவும் குலமுதல்வனானான் என்பதாம். இக்கருத்தானே மனுவேந்தன், குலமுதலென்னாது வழிமுதல் எனப்பட்டான்.

இதனால், மனுவேந்தனென்பான் சூரியனுக்கு (-விவஸ்வானுக்கு)ப் பின் அவன் மகனாகவந்த வைவச்சுதமனுவென்று அறியத் தக்கதாயிற்று.

"மனுப்பெற்ற நீதியும் தன்பெயராக்கினான்"❊ என்றமையால் வைவச்சுதமனு வேறு; மனுவேந்தன் என்பான் வேறு, என்னாமோ எனின், என்னாம். 'மனுப்பெற்ற நீதியும் தன் பெயராக்கினான்' என்றது முன்னூழியினின்றும்பெற்ற விருத்[3]த[4] மனு நீதியைப் புதுப்பித்துத்

* திருவாரூர்ச்சிறப்பு. செய்.13.

❊ திருவாரூர்ச்சிறப்பு. செய்.15.

தன்பெயரால் ஆக்கிக்கொண்டான் என்பதாம். இதனைத் '**தொன்மனுநூற்றொடை**' ● என்றமையான் அறியலாம். 'மனுமொழி யாது? அது மருந்து' என்றபொருளை வேதம் சொல்லுதலாலும் மனுநூல் அநாதியாயுண்டென்று அறியத்தக்கது.

இவற்றால், வைவச்சுதமனு சோழர்குலமுதல்வனென்றும், அவன் தமிழ்நாட்டரசனென்றும், தமிழனென்றும் புலனாம். இக்கருத்து, அடுத்துக் காட்டப்பட்டுள்ள விக்கிரமசோழனுலா அடிகளாலும் வலியுறும்.

## 6. விக்கிரமசோழனுலா.

விக்கிரமசோழனுலாவில், பிரும்மபுத்திரன் காசிபன், அவன் மகன் மரீசி, அவன் மகன் **கதிரவன்** (விவஸ்வான்) என்று கூறி, அவன்மகன் **மனு** (வைவச்சுதன்) என்றும், இவன்,

*'...................................................................மையல்கூர்*
*சிந்தனை யாவிற்கு முற்றத் திருத்தேரில்*
*மைந்தனை யூர்ந்த மனு'*✳

என்றும் சொல்லப்படுகிறான். இவன்பின்,

*'ஆடு துறையில் அடுபுலியும் புல்வாயும்*
*கூடநீ ரூட்டிய கொற்றவனும்'*❊

என்று தொடங்கி, இம் மனுவின்வழிவந்த பல தமிழ்மன்னவர் (சோழர்)களுடைய சரித்திரப்பிரபாவங்கள் சொல்லப்பட்டன. ❍

இங்கு இம்மனுகுலத்தில் பின்பு தோன்றியவருள் ஒருவனாக,

*'காக்கும் சிறுபுறவுக்காகக் களிகூர்ந்து*
*தூக்கும் துலைபுக்க தூயோன்'*◆

---

● திருவாரூர்ச் சிறப்பு . செய்.37.
✳ கண்ணி. 4.
❊ கண்ணி. 5.
❍ அவற்றுள், 'கூற வரிய மனுக்கொணர்ந்து கூற்றுக்குத், தேற வழக்குரைத்த செம்பியன்' (கண்ணி.7) என்றதில் **செம்பியன்** என்பது சோழன் என்னுந்துணையாய் நின்றது.
◆ கண்ணி-11.

என்று சிபிச்சக்கிரவர்த்தி சொல்லப்படுகிறான். இவன்மரபின ரெல்லோரும் **சைப்பியர்** என்னும் பெயர்த்திரிபாலும் **செம்பிய**ரெனப்படுவர்.

இனி, மநுகுலத்தவர்கள் தமிழர் என்பதற்கு வடநூலுள்ளும் தக்க சான்றுகள் காணப்படுகின்றன. அவையும் வருமாறு :-

## 7. ஸ்ரீ பாகவதம்

ஸ்ரீபாகவதம் எட்டாவது ஸ்கந்தம் இருபத்துநான்காம் அத்யாயத்தில், 7, 10, 11, 12, 13-ஆம் சுலோகங்கள்,

ஆஸீத$^{3}$தீ$^{1}$த$^{1}$ க$^{1}$ல்பா$^{1}$ந்தே$^{1}$ ப்$^{3}$ராம்ஹோ நைமித்$^{1}$தி$^{1}$கோ$^{1}$ லய:।
ஸமுத்$^{3}$ரோ ப$^{1}$ப்லுதா$^{1}$ஸ்த$^{1}$த்ர லோகா$^{1}$பூ$^{4}$ராத$^{3}$யோ ந்ருப:।।
த$^{1}$த்$^{1}$ர ராஜருஷி: க$^{1}$ச்சி$^{1}$த்$^{1}$ நாம்நா ஸத்$^{1}$யவ்ரதோ$^{1}$ மஹாந்।
நாராயணப$^{1}$ரோ த$^{1}$ப்$^{1}$யத்$^{1}$ தபஸ்ஸலிலாசந:।।
யோஸாவஸ்மின் மஹாக$^{1}$ல்பே$^{1}$த$^{1}$ நய:ஸ்ஸவிவஸ்வத$^{1}$:।
ச்ராத்$^{3}$த$^{4}$தே$^{3}$வலதி$^{1}$க்$^{2}$யாதோ$^{1}$ மநுத்வே ஹரிணார்பி$^{1}$த$^{1}$:।।
ஏக$^{1}$தா$^{3}$க்$^{1}$ருத$^{1}$மாலாயாம் கு$^{1}$ர்வதோ$^{1}$ ஜலத$^{1}$ர்ப$^{1}$ணம் ।
த$^{1}$ஸ்யாம் ஜல்யுத$^{3}$கே$^{1}$ கா$^{1}$சி$^{1}$த்$^{1}$ சப$^{2}$ர்யேகா$^{1}$ப்$^{4}$யப$^{1}$த்யத$^{1}$।।
ஸத்$^{1}$யவ்ரதோ$^{1}$ஞ்ஜலிக$^{3}$தாம் ஸஹதோ$^{1}$யே நபா$^{4}$ரத$^{1}$।
உத்$^{1}$ஸஸர்ஜ நதீ$^{3}$தோ$^{1}$யே சப$^{2}$ரீம் த்$^{3}$ரவிடே$^{3}$ச்வர:।।

என்பனவாம்.

இவற்றின்பொருள் :- சென்ற ஊழிமுடிவில் உலகங்கள் கடல்நீரில் முழுகத்தலைப்பட்டன; அப்பொழுது ஸத்தியவிரதன் என்னும் பெயருடைய பெருமைவாய்ந்த ஒரு ராஜருஷியாயுள்ளவன் நீரையே உணவாகக்கொண்டு திருமாலைநோக்கித் தவம்புரிந்தான். அவன்தான் இப்போது நடைபெற்றுவருகிற கற்பத்துக்குச் சிராத்ததேவன் என்னும் பெயருடையனாய், விவஸ்வான்மகனான வைவச்சுதமனுவாகத் திருமாலால் நியமிக்கப்பெற்றவன். இவன், ஒருகாலம் (பாண்டி

நாட்டிலுள்ள) **கிருதமாலை** (வையை) என்னும் நதியில் ஜலதர்ப்பணம் பண்ணிக்கொண்டிருந்தான். அப்போது அவனுடைய இருகையாலும் அள்ளிய அர்க்யஜலத்தில் ஒரு பெண்மீன் தோன்றிற்று. அந்த ஸத்யவிரதன் என்னும் **தமிழ்நாட்டரசன்** தன்கைந்நீரையடைந்த பெண்மீனை அந்த நீருடன் (தன் கைந்நீருடன்) **கிருதமாலாநதீ**ஜலத்தில் (வையைநீரில்) கவிழ்த்துவிட்டான்: என்பது.

இதனுள், ஸத்யவிரதன் என்னும் அரசன், **தமிழ்நாட்டரசன்** (த்[3]ரவிடே[3]ச்வர:) என்று சொல்லப்பட்டிருப்பதால் அவன் **தமிழன்** என்பதும், **தமிழ்மக்கட்கரசன்** என்பதும் பெறப்படுகின்றன.*

அவன் **கிருதமாலை** (வையை) என்னும் நதியில் ஜலதர்ப்பணம் பண்ணினான் என்றமையால் **பாண்டிநாட்டிலுள்ளவன்** என்பதும் பெறப்பட்டது.

இதனால், சென்றவூழியிலும் பாண்டிநாடு தமிழ்நாடாயிருந்த தென்று வெளியாகிறது.

மேலும், எட்டாவது ஸ்கந்தத்தின் இருபத்துநான்காம் அத்தியாயத்தில் 58-ஆம் சுலோகம்,

> ஸது[1]ஸத்[1]யவ்ரதோ[1] ராஜா ஞானவித்[3]ஞான ஸம்யுத[1] :।
> விஷ்ணோ: ப்[1]ரஸாதா[3]த்[1] கல்பே[1]ஸ்மின் ஆஸீத்[3] வைவஸ்வதோ[1] மநு : ॥

**இதன்பொருள்:-** அந்த ஸத்தியவிரதனென்னும் அரசன், விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் ஆத்மதத்வஜ்ஞானமும், சாஸ்திரஜ்ஞானமு முடையவனாய் இந்தக்கல்பத்தில் **வைவச்சுதமனு**வானான்: என்பது.

* தமிழ்மொழி ஊழிமுதலில் மானுஷபாஷையென்ற பெயருடைய தாயிருந்து காலக்கிரமத்தில் பிறபாஷைகள் தோன்றிய பின்பு சுருங்கிய தேச விசேஷம்பற்றிய பெயரால் திராவிடம் என்று வழங்கப் பெறுவதாயிற்று: என்று தோன்றுகிறது.

இதனால் இவ்வூழிக்குமுதல்வனாகிய வைவச்சுதமனு முற்பிறப்பில் தமிழரசனாயிருந்து நீதிபுரிந்துவந்த வாசனையுடையன் என்பதும் அதனோடு தெய்வாநுக்கிரகத்தாலுண்டாகிய ஞான விஞ்ஞானங் களையுடையனாதலால் அவன் நீதிநெறிவழுவாது செலுத்தற்குரிய மனுவானான்: என்பதும் பெறப்பட்டன.

ஒன்பதாவது ஸ்கந்தத்தின் முதல் அத்தியாத்தில் 2,3 சுலோகங்கள்,

யோஸௌ ஸத்[1]யவ்ரதோ[1] நாம ராஜர்ஷிர்த்[3]ரவிடே[3]ச்வர :।

ஞாநம் யோதீ[1]த[1]கல்பாந்தே[1]தல்லேபே[4]புருஷ ஸேவயா।
ஸவைவிவஸ்வத[1]: பு[1]த்[1]ர: மநுராஸீதி[3]தி[1]ச்ருத[1]ம்।।

என்பவை.

**இவற்றின் பொருள் : - தமிழரசனாயும்** ராஜருஷியாயுமுள்ள எந்த **ஸத்தியவிரதன்**, சென்ற கல்பத்தின்முடிவில் பரமபுருஷனான திருமாலை வழிபட்டு ஞானத்தையடைந்தானோ அவனே **விவஸ்வானுக்கு** (ஸூர்யனுக்கு)ப் புத்திரனான **வைவச்சுதன்** என்னும் மனுவானன் என்று கேட்கப்பட்டது: என்பது.

இதனால் ஸத்யவிரதன் **திரவிடேசுவரன்** (தமிழ்நாட்டரசன்) என்று அநுவாதமுகத்தாலும் (கொண்டு கூற்றாலும்) வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

மேலும், 9-ஆம் ஸ்கந்தத்தின் 2-ஆம் அத்தியாயத்தின் 2-ஆம் சுலோகம்,

த[1]தோ[1]யஜந் மநுர்தே[3]வம் அப[1]த்[1]யார்த[2]ம் ஹரிம் பி[1]ரபு[4]ம்।
இக்ஷ்வாகு[1] பூ[1]ர்வஜாந் பு[1]த்[1]ராந் லேபே[4]ஸ்வ ஸத்[3]ருசான் த[3]ச।।

என்பது.

இதன்பொருள்: பிறகு மனுவான வைவச்சுதன் மக்கட்பேற்றை விரும்பி ஸ்வாமியாயும் தேவனாயுமுள்ள திருமாலை வழிபட்டுத் தனக்கு ஒப்பான இக்ஷ்வாகுமுதலாயுள்ள ❊ பத்துப்புத்திரரைப் பெற்றான் : என்பது.

இதனால் மனுவின்புதல்வர் பதின்மருள் முதலாவான் இக்ஷ்வாகு என்பது சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அவனும் தமிழ் நாட்டரசனான தமிழன் என்று தோன்றுகிறது.

**9**-ஆம் ஸ்கந்தத்தின் முதல் அத்தியாயத்தில் **41**-ஆம் சுலோகம்

த1ஸ்யோத் க1லோக3யோ ராஜந் விமலச்ச1ஸுதா1: த்ரய :।
**த3க்ஷிணா** ப1த2ராஜாநோ ப4பூ3வுர் த4ர்மவத்1ஸலா :।।

என்பது.

இதனால் அந்த மனுபுத்திரனான சுத்யும்நன்மக்கள் **உற்கலன், கயன், விமலன்** என்னும் மூவரும் தர்மத்தில் பிரியமுள்ளவராய்த் **தெற்கேயுள்ள** பிறநாட்டுக்கு அரசரானார்கள்: என்று சொல்லப் பட்டிருக்கிறது. இங்கு, தெற்கேயுள்ள பிறநாடென்பது திராவிட தேசத்துக்குத் தெற்கேயுள்ள நாடுகளாம். (அவை பிற்காலத்துக் கடல்கொள்ளப்பட்டன.)

இதனால் இம்மூவேந்தரும் தமிழர் என்பதும் பிற, தென்தமிழ் நாட்டரசரென்பதும் பெறப்படும்.

**9**-ஆம் ஸ்கந்தத்தின் **2**-ஆம் அத்தியாத்தில் **16**-ஆம் சுலோகம்,

க1ருஷாந் மாநவாதா3ஸந் கா1ருஷாக்ஷத்1ர ஜாத1ய: ।
உத்1த1ராப1த2கோ3ப்1தா1ர: ப்3ருஹ்மண்யா த4ர்மவத்1ஸலா: ।।

என்பது.

❊ இப்பதின்மருள் ஒருவன் அவசமாய்ப் பசுக்கொலைபுரிந்து பிராயச் சித்தமடைந்தவனாகச் சொல்லப்பட்டவன்.

இதன்பொருள்: – கரூஷன் என்னும் மனுமகனிடத்திலிருந்து காரூஷர் என்னும் க்ஷத்திரியஜாதியாருண்டானார்கள். அவர்கள் பிரஹ்மவித்துக்களான ராஜருஷிகளாயும் தருமத்தில் அன்புள்ளவர்களாயும் (திராவிடநாட்டுக்கு) வடக்கேயுள்ள பிறநாட்டுக்கரசரானார்கள்: என்பது.

**இங்கு, தென்னாட்டிற்கும் வடநாட்டிற்கும் இடையே திசைப் பொருள்நீக்கத்துக்கு எல்லையாயுள்ளது திராவிடநாடாயிற்று. இதனாலும், மனுவும் இக்ஷ்வாகுவும் திராவிடர் என்றறியலாம்.**

இதனால் வடநாடுகாவலரான அரசர்களும் பூருவகாலத்தில் தமிழராயிருந்தார்கள் என்றும், அவர்கள் பிரஹ்மவித்துக்களானார் களென்றும் அறியத்தகும். இதனை அநுசரித்த,

> இமம் விவஸ்வதே1யோக3ம் ப்1ரோக்1த1வாநஹமவ்யயம் ।
> விவஸ்வான்மநவேப்1ராஹ மநுரிக்ஷ்வாக1வே அப்3ரவீத் ।।
> ஏவம் ப1ரம்ப1ராப்1ராப்1த1மிமம் ராஜர்ஷயோவிது3: ।

என்ற கீதாவாக்கியங்களும் இங்கு நோக்கத்தகும்.

இவற்றின்பொருள்:– (ஸ்ரீகிருஷ்ணபகவான் அருச்சுனனை நோக்கி) நான் இந்தக் குறையற்றதாயுள்ள ஞானயோகத்தை விவஸ்வானுக்குச் சொன்னேன். விவஸ்வான் (தன்புத்திரனான) மனுவுக்குச் சொன்னான். மனு (தன்புத்திரனான) இக்ஷ்வாகுவுக்குச் சொன்னான். இந்தப்பிரகாரம் குலபரம்பரையாய்வந்த இந்த ஞானயோகத்தை ராஜருஷிகள் அறிகிறார்கள்: என்பது.

இதனாலும், மனுகுலத்தரசர்கள், ராஜருஷிகளான பிரும்மவித்துக் களாயிருந்தார்களென்றறியலாம்.

9-ஆம் ஸ்கந்தத்தின் 2-ஆம் அத்தியாத்தில் 33-ஆம் சுலோகம்,

விசாலாச் சூன்ய ப3ந்து4ச்ச1தூ4ம்ரகே1து1ச்ச1த1த்1ஸுதா1:।
விசாலோவம்சக்1ருத்3ராஜா வைசாலீம் நிர்மமேபூரீம்:॥

**இதன்பொருள்:-** விசாலன், சூன்யபந்து, தூமிரகேது: என்னும் மனுமரபினர்கள் மூவருள், விசாலன் என்னும் அரசன் சந்ததியுள்ளவனாய் **வைசாலீ** என்னும் நகரத்தையுண்டாக்கினான்: என்பது.

இவற்றால் **தமிழராகிய மனுமரபினர்** •வடநாடுகளிற் சென்று ராஜ்யஸ்தாபனம் செய்து கொண்டார்கள்: என்று தெளிவாகச் சொல்லப்பட்டதால் இக்ஷ்வாகு குலபரம்பரையார் வடநாடு செல்லுங்கால் தங்கள் குலாராதனமான திருவரங்கப்பெருமானையும் உடன் கொண்டுசென்று வழிபட்டு வந்திருக்கலாமென்றும் கொள்ளுதற்கு இடந்தருகிறது.

விபீஷணனுக்குத் திருவரங்கப்பெருமானை இராமனருளியதாகக் கம்பராவது வான்மீகராவது சொல்லவில்லை. ஆனாலும், "அனுக்த்1தமன்யதோ1க்3ராஹ்யம்" என்கிற கிரமத்தாலே வேறு பிரமாணங்களால் விபீஷணன் பெற்றுவந்தானென்று கொள்ளலாம்.

அதனால் அவன் இலங்கைக்குச் செல்லும்போது யதாஸ்தானம் பிரதிஷ்டிதரானார் என்பது விரோதமாகாது.

## 8. மாத்ஸ்யபுராணம்

இனி, மாத்ஸ்யபுராணத்தில், முதல் அத்யாயத்தில்,

பு1த்1ரே ராஜ்யம் ஸமாரோப்1ய க்ஷமாவாந் ரவிநந்த3ந:।
மலயஸ்யைக1தே3சேது1 ஸர்வாத்1ம குணஸம்யுத1:॥
ஸமது3:க2ஸுகோ2வீர: ப்1ராப்1த1வான் யோக3முத்1த1மம்।

என்று சொல்லப்பட்டிருக்கிறது.

● சோழன் செங்கணானைத் 'தென் தமிழன் வடபுலக்கோன் சோழன்' (பெரிய திருமொழி. 6.6.5.) என்று திருமங்கையாழ்வார் கூறுதலும் இங்கு நோக்கத்தகும். இதனாலும் சோழகுலத்தவர்க்கு வடநாட்டுரிமையும் வந்தேறியாயுண்டென்றறியலாம்.

**இதன்பொருள்:** - சூரியபுத்திரனான **வைவச்சுதமனு** தன் **புத்திரனான** இக்ஷ்வாகுவிடத்தில் ராஜ்யபாரத்தை வைத்து விட்டுப் பொறுமை யுடையவனாயும் ஆன்மகுணங்களெல்லாம் நிரம்பினவனாயும் இன்பதுன்பங்களிற் சமபுத்தியுள்ளவனாயுமிருந்துகொண்டு **பொதிய மலையின்** ஒரு பகுதியில் உத்தமமான யோகமுயற்சியை யடைந்தவனாயிருந்தான்: என்பது.

இவன் **இமயம்** விரும்பாது **பொதியமலையில்** யோகுநிலை யடைதலால் **தென்னாட்டினன்** என்பதும் **தமிழன்** என்பதும் வெளியாம்.

இவற்றால், வைவச்சுதமனுவின்மகன் இக்ஷ்வாகுவும் தென்னாட்டுத் தமிழரசனாய்த் திருவரங்கங்கோயில்கண்டவனென்று கம்பர் சொல்லி யிருப்பதும், மனுவைச் சோழனென்று சேக்கிழார் கூறியிருப்பதும் பொருந்துகின்றன.

இதுகாறும், வான்மீகத்திலுள்ள **'மாநுஷீவாக்', 'மானுஷம் வாக்யம்'** என்று தமிழ்ப்பாஷையைக்கூறிய சொற்பொருட்குறிப்புக்களாற்றோன்றிய பொருள்களைத் தொடர்புபறறி ஆராய்ந்ததினின்றும, இப்போது நடந்துவருகிற வைவச்சுதமன்வந்தரத் தொடக்கத்திலிருந்து இராமாயண காலம்வரை பரதகண்ட முழுதும் தமிழே மாநுஷபாஷையாக வழங்கப் பெற்று வந்ததென்று வெளியாயிற்று.

# 8. தடையும் விடையும்

**வான்மீகரும் தமிழும்** என்ற இவ்வாராய்ச்சியின் முடிவான பொருள், இராமாயணகாலத்திலும் அதற்குமுற்பட்ட காலங்களிலும் தமிழ்மொழி யானது **மானுஷபாஷை** (மானிடர்மொழி) என்னும் பெயரால் இமயந்தொடங்கி இலங்கையளவான நாடுகளிலெல்லாம் மானிடரால் தாய்மொழியாகப் பேசப்பட்டு வந்ததென்பதும், அதனால் வான்மீகர், வசிட்டர், அகத்தியர், தொல்காப்பியர் முதலான அந்தணர்குலத்தவரும், மனு, இக்ஷ்வாகு, சிபி, ரகு, ராகவன் முதலான அரசர்குலத்தவரும், சுமந்திரன், வெண்ணைச் சடையவள்ளலின்மரபினர் முதலிய அமைச்சுரிமையுடைய வேளாண்குலத்தவரும் தமிழர் (திராவிடர்) என்பதும், இவர்கள் பூர்வகாலத்தில் தென்னாட்டில் (திராவிடநாட்டில்) நின்றும் வடநாடுசென்று பரவினவரென்பதுமாம்.

இம்முடிபிற்கு மாறானவை போலத் தோன்றும் தடையுரைகளும் சில உள்ளன.

அவற்றுள், முதலாவது தடையுரை: தொல்காப்பியச் சிறப்புப் பாயிரத்துள் 'வடவேங்கடம் தென்குமரி' என்று சொல்லப்பட்டவற்றைத் தமிழ்நாட்டெல்லையெனக்கொண்டு, வேங்கடத்தின் வடக்கிலுள்ள நாடுகளும் குமரியின் தெற்கிருந்த நாடுகளும் தமிழ்நாடாகாது பிறநாடாகவே இராமாயணகாலத்திலும் இருந்தனவென்பதும், அதனால் மானுஷபாஷையென்று வான்மீகத்திற் சொல்லியிருப்பது தமிழின்வேறான பிறபாஷையாயிருக்கலாம் என்பதும் ஆம். இதற்கு விடையுரை வருமாறு.

தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்துள், 'வடவேங்கடந் தென்குமரி யாயிடை' என்ற தொடர் **தமிழ்நாட்டெல்லை கூறியதன்று.**

அது நூலுக்குரிய சிறப்புப்பாயிரவுறுப்பாயிருத்தலால், அப்பாயிர வுறுப்புக்களாகிய ஆக்கியோன்பெயர் முதலிய பிறவுறுப்புக்களெல்லாம் ஒவ்வொரு நூலுக்கும் வெவ்வேறாக மாறிவருவதுபோல **"எல்லை"** என்னும் இவ்வுறுப்பும் ஒவ்வொருநூலுக்கும் வெவ்வேறாக மாறுபட்டுவருதல் கூடும். (அதாவது:- தொல்காப்பிய நூலுக்கு ஆக்கியோன் பெயர் தொல்காப்பியர், நன்னூலுக்கு ஆக்கியோன் பெயர் பவணந்திமுனிவர் எனப் பெயர்வேறுபடுவதுபோல ஒவ்வொரு நூலுக்கும் அவ்வந்நூல்வழங்கும் நிலங்களின் எல்லையும் வேறுபட்டிருப்பின் அதனை விளங்கச்சொல்லவேண்டும் என்பது.) அங்ஙனம் வேறுபடாமல் தமிழ்நூல்களுக்கெல்லாம் எல்லை ஒருபடியேயிருக்குமாகில் அது சிறப்புப்பாயிரவுறுப்பாகாது பொதுப்பாயிரவுறுப்பிற் சேர்த்து எண்ணப்பட்டிருக்கவேண்டும். (அங்ஙனம் பொதுப்பாயிரவுறுப்புள் ஒன்றாக எல்லை எண்ணப்படினும், அதனால் ஒரு பயனும் இன்றாம்.) அங்ஙனம் பொதுப்பாயிரவுறுப்பிற் சேர்த்தெண்ணப்படாமல், **எல்லை** சிறப்புப்பாயிரவுறுப்பிற் சேர்த்தெண்ணப்பட்டிருத்தலால், அது தமிழ்நாட்டெல்லையாகாதென்றும், அவ்வத் **தமிழ்நூல்வழங்குதற்குரிய நிலவெல்லையே யாமென்றும்** அறியவேண்டும்.

அன்றியும், உரையாசிரியர்கள், ஆக்கியோன்பெயர் என்பது **நூலாசிரியன் பெயர்** என்றும், வழியென்பதும் **நூல்வந்த வழி** யென்றும் கூறியதற்கியைய, எல்லையென்பது **நூல்வழங்கும் (நிலத்தின்) எல்லை** என்னுங் கருத்தினராய், ('வடவேங்கடம் தென்குமரி' என்னும்) இவை **அகப்பாட்டெல்லை** * என்றும் கூறுவாராயினர்.

* தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்துக்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் எழுதிய உரைகளை நோக்குக.

அகப்பாட்டெல்லையாவது: புறப்பாட்டெல்லையான பெருநான் கெல்லைக்குட்பட்டதொரு சிறுநான்கெல்லையாம்.

இவ்வெல்லைகளைப் பண்டைக்காலத்தார் எழுதிவந்த ஒற்றிக்கலன் ✻ விற்றற்கலன் ✪ முதலியவற்றில் விளங்கக் காணலாம்.

ஆகவே, தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்திற் சொல்லிய **எல்லை** யானது **அத்தொல்காப்பியநூல்** வழங்குதற்குரிய அகப்பாட்டெல்லையான **தமிழ்நிலவெல்லையாவதல்லது** அந்நிலவெல்லையின் புறப்பாட் டெல்லையான **தமிழ்நாட்டெல்லையன்றென்று** அறியக்கிடக்கிறது.

இங்ஙனம் ஒவ்வொருநூலுக்கும் சிறப்புப்பாயிரத்து அவ்வந்நூல் வழங்கும் நிலவெல்லை சொல்லவேண்டியது எற்றுக்கெனின்? வெவ்வேறு நிலவலயங்களுள் வெவ்வேறுவகையான தமிழ்வழக்கு நிகழுமாதலால் அவ்வந் நிலவழக்கறிந்து அதுகொண்டு நூலியற்றினால் அந்நூல்பயில்வார் இந்நிலவழக்குக்கொண்டு இந்நூலியற்றப்பட்டதென்று தெரிந்து குறைகூறார். அங்ஙனம் அறியாக்கால், அவரறிந்த பிறநில வழக்குக்கொண்டு அந்நூல் பிழைபட்டதென்று இகழுவர்.

சோதிடநூல்வல்லானொருவன் ஒரு பஞ்சாங்கம் கணிப்பானாயின் அப்பஞ்சாங்கம் வழங்குதற்குரிய நிலவெல்லை கூறாக்கால் அவனிருந்து கணித்த நாட்டினின்றும் பிறநாடுகளிலெல்லாம் அப்பஞ்சாங்கம் பிழைபடுவதாகும். இதனை விந்தியமலையின் வடபாலாரும் தென்பாலாரும் தனித்தனி வழங்கிவரும் வருடப்பெயர் வேறுபாட்டால் அறியலாம்.

அங்ஙனமே, மிளகு ஏலம் கோதுமை முதலிய பயிர்நூல் எழுதுமொருவன், அவ்வப் பயிர்விளைவிற்குரிய நிலவெல்லை கூறாக்கால், அவ்வப் பயிர்விளைவிற்குரியவாகாத பிறநாட்டாரும் அவ்வந்நூல் கொண்டு முயன்று பயன்பெறாதொழிவர்.

---

✻ ஒற்றிப்பத்திரம் ✪ கிரயப்பத்திரம்

அவ்வாறே எடுத்தல் முகத்தல் நீட்டல் அளவைகள் நாடுதோறும் வேறுபட்டு வழங்குதலால் அவ்வவ்வளவைவாய்பாடு பற்றியெழுதப்படும் நூல்களுக்கும் (அவ்வவ்வளவை வழங்கும்) நிலவெல்லை கூற வேண்டும். அல்லாக்கால் அவை கற்பார் பிறழஉணர்வாரும் மயங்குவாரும் ஆவர்.

அங்ஙனம் பிறழவுணராமைப் பொருட்டும் மயங்காமைப் பொருட்டும் வழக்குநூல்களுக்கு அவ்வந் நூல்வழங்கும் நிலவெல்லை கூறவேண்டிற்று.

இதனை, தொல்காப்பியர்காலத்து அத்தொல்காப்பிய நூல் வழங்கும் தமிழ்நிலமாயிருந்த **மலைநாடு**, பிற்காலத்தில் வழக்கு வேறுபட்டமையால் அதனை விலக்கி, ('வடவேங்கடம் தென்குமரியாயிடை' என்னாது) 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' என்று நன்னூல் வழங்குதற்குரிய தமிழ்நிலவெல்லை வேறுகூறப்பட்டிருப்பதுகொண்டு அறியலாம்.

'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' என்பது தமிழ்நாட்டு எல்லையாகமாட்டாது; அக்காலத்து மலைநாடும் தமிழ்நாடேயாதலால்.

இவ்வாறே தொல்காப்பியர்காலத்தில் உலகமுழுதும் தமிழ் நாடாயிருப்பினும், அது பல்வேறு மண்டிலங்களாய்ப் பகுக்கப்பட்டுத் தமிழ்ப்பாஷை சிறிது சிறிது வேறுபட்டுக்கொண்டுவந்ததுகண்டு அதனைப் பாதுகாக்கவேண்டிச் செந்தமிழ்நாட்டு மும்மண்டலத்தரசரும் கூடித் தமிழ்ச்சங்கம் நிறுவித் தமிழாராய்வுழி, அத்தமிழாராய்ச்சிக்கு அதிகாரவரம்புகட்டவேண்டி வடவேங்கடமும் தென்குமரியும் எல்லையாகக் கொள்ளப்பட்டன.

அவ்வெல்லைக்குட்பட்ட தமிழ்நாட்டுள்ள வழக்கும் செய்யுளும் ஆராய்ந்து தொல்காப்பியரால் இலக்கணம் சொல்லப்பட்டமையால் அந்நூலுக்கு அவை நூல்வழங்கும் நிலவெல்லையாகப் பனம்பாரனாராற் செய்யப்பட்ட சிறப்புப்பாயிரத்துட் சொல்லப்பட்டன.

இக்காலத்தும் கல்விவளர்ச்சிகருதிய பல்கலைக்கழகங்களும் ஆட்சிநிலவெல்லை கட்டிக்கொண்டு வகுப்புத்தோறும் கற்பித்தற்குரிய பாடபுத்தகங்களைத் தெரிந்தெடுத்துக் கற்பித்துவருதல் காணலாம்.

இவ்வாறே முற்காலத்திலும் உயர்தரத்தமிழ்க்கல்வி கற்பிக்கும் வகுப்பைக் கீழ்வகுப்பு, மேல்வகுப்பு என இரண்டுபிரிவுபடுத்திக் கீழ்வகுப்புக்குரிய பாடபுத்தகங்களுக்குக் **கீழ்க்கணக்கு** என்றும், மேல் வகுப்புக்குரிய பாடபுத்தகங்களுக்கு **மேற்கணக்கு** என்றும் பெயரிட்டு வழங்கியுள்ளார்கள்.

கணக்கு என்னும் பெயர் இக்காலத்தில் எண்ணுநூல் குறித்தியலுமாயினும், முற்காலத்தில் எழுத்துநூல்குறித்தும் இயன்ற தென்பதை எழுத்துநூலாகிய அரிச்சுவடியை **நெடுங்கணக்கு** என்றும், பாடங்கற்பிக்கும் ஆசிரியனைக் **கணக்காயனார்** என்றும் வழங்குதலால் அறியலாம்.

பாடங்கற்பிக்கும் ஆசிரியர்க்குக் கணக்காயர் என்று பெயருண்மை, 'கற்றதூஉமின்றிக் கணக்காயர் பாடத்தால்' ● என்பதனாலும் புலனாகும்.

மேலும், கீழ்க்கணக்கு மேற்கணக்கு நூல்களைத் தெரிந்தெடுப்பதற்கு அவை இன்ன இயல்புடையவாயிருக்க வேண்டுமென்று அவ்வவ்வகுப்பின் தகுதிக்கேற்குமாறு தொன்றுதொட்டே இலக்கணம் சொல்லப்பட்டு வருகிறது. அதனைப் பின்வருவனவற்றால் அறியலாம்.

'மேற்கீழ்க் கணக்கென விருவகை கணக்கே' (173)

'மேற்கணக் கெனவும் கீழ்க்கணக் கெனவும்
பாற்படும் வகையாற் பகர்ந்தனர் கொளலே' (174)

---

● நாலடியார். அதி. 32. அவையறிதல். செய்.4.

'அகவலுங் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந்தாதி பதிற்றைம்ப தீறா
மிகுத்துடன் றொகுப்பன மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையும் அவ்வகை யெண்பெறின்
எள்ளறு கீழ்க்கணக் கெனவும் கொளலே' (175)

'ஐம்பது முதலா வைந்நூ றீறா
வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்
றொகுக்கப் படுவது மேற்கணக் காகும்' (176)

'அடிநிமிர் பில்லாச் செய்யுட்டொகுதி
யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்' ❍ (177)

என்பது **பன்னிருபாட்டியல்.**

இவ்விலக்கணங்கொண்டே கடைச்சங்ககாலத்தும் கீழ்க்கணக்கும் மேற்கணக்கும் தெரிந்தெடுத்துத் தொகுத்துக் கற்பிக்கப்பெற்றன.

இங்ஙனம் கொள்ளாக்கால் கீழ்க்கணக்கு நூல்களுக்கும் மேற்கணக்கு நூல்களுக்கும் இலக்கணம் சொல்லியிருப்பது பயனில்கூற்றாய்முடியும். அங்ஙனம் அவ்விலக்கணம் பயனில்கூற்றாய் முடிதல் கூடாது; ஆதலால் அது பயப்படுமாறு, சங்ககாலங்களில் செந்தமிழ்வளர்ச்சிகருதிய அகத்தியர் முதலாயினோர் அச்செந்தமிழியற்கை சிவணியநிலத்துக்கு எல்லையான வடவேங்கடம் தென்குமரிக்கு இடைப்பட்டிருந்த நிலப்பரப்பிற்கு வடவேங்கடந் தென்குமரியை ஆட்சிநிலவெல்லை (Jurisdiction) ஆக்கிக் கொண்டு தமிழாராய்ச்சி செய்து நூலியற்றியருளினமையால் அந்நிலப்பரப்பே அந்நூல்வழங்கும் நிலமாயிற்று என்று கொள்ளல் வேண்டும்.

❍ இவ்விலக்கணங்கள் புதியநூல்களியற்றுவார் குறிக்கோடற்குச் சொல்லப்பட்டனவல்ல; தமிழ்நூல்பயிலு மாணவர்வகுப்பிற்கு உரிய பாட புத்தகங்களைத் தொகுத்துதவுவார் குறிக்கோடற்கே சொல்லப்பட்டன. இது பதினென்கீழ்க்கணக்கு முதலியவற்றை உய்த்துநோக்கிற் புலனாம்.

தொல்காப்பியனார், வடவேங்கடம் தென்குமரிக்குட்பட்ட இந்நிலத்தையே ✳ செந்தமிழ்சேர்ந்த பன்னிருநிலம்' என்றார். ⁂ எனவே இவற்றின் புறம்புள்ளநிலங்களும் தமிழ்நிலமேயாயினும், அவை செந்தமிழ் சேர்ந்தனவாகாது பிறதமிழ்நிலமாம் என்பதும் பெறப்பட்டது.

வடவேங்கடம் தென்குமரிக்குட்பட்ட 'செந்தமிழ் சேர்ந்த பன்னிருநிலம்' :-

> 'தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
> பன்றி யருவா வதன்வடக்கு - நன்றாய
> சீதம் மலாடு புனனாடு **செந்தமிழ்சேர்**
> **ஏதமில் பன்னிருநாட்** டெண்'

எனவரும் பழம்பாடலாற் சொல்லப்பட்டனவாம்.

இதனுள், 'தென்பாண்டியென்பது பாண்டிநாட்டின் தென்பகுதியை யுணர்த்தாது, தென்குமரியென்பதுபோல இயல்படை புணர்ந்து பாண்டிநாட்டினை யுணர்த்திநின்றது.

செந்தமிழ் **சேர்ந்த** பன்னிருநிலத்தும் என்பதற்குச் செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த (பிற) பன்னிருநிலத்தும் என்பது பொருளன்று; **செந்தமிழ்வழங்கும் பன்னிருநிலத்தும்** என்பதே பொருளாம்.

✳ தொல். சொல். எச்சவியல். சூத்திரம்.4.

⁂ சேனாவரையர், தொல்காப்பியச் சொல்லதிகாரத்து எச்சவியலின் 2-ஆம் சூத்திரவுரையுள், 'செந்தமிழ்நிலமாவன:- வையை யாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம்' என்றாராலெனின், அது ஆனாவறிவிற் சேனாவரைய ருரையன்று; சிறப்புப்பாயிரவுறுப்பாக ஒவ்வொரு நூலுக்கும் அவ்வந்நூல்வழங்கும் நிலவெல்லை தனித்தனி கூறப்பட வேண்டுமென்னும் நியமம்பற்றி ஏதோ ஒருநூற்குப் பிற்காலத்தார் அந்நூல்வழங்கும் நிலஎல்லையாகக் கூறியதனைச் செந்தமிழ் நிலவெல்லையாகப் பிறழவுணர்ந்தாரொருவரால் இடைச்செருகப் பட்ட போலியுரையாகத் தோன்றுகிறது.

செந்தமிழ்நிலத்தைச் சூழ்ந்த (பிற) பன்னிருநிலத்தும் என்பது ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தாயின் அவர், அது புலப்படச் '**செந்தமிழொழிந்த** பன்னிருநிலத்தும்' என்று சூத்திரம் வகுத்திருப்பர். அங்ஙனமின்றிச் '**செந்தமிழ்சேர்ந்த** பன்னிருநிலத்தும்' என்று சூத்திரித்தமையான் அவர்க்கு அது கருத்தன்மை புலனாம். சேர்தற்றொழில் அகநிலையாய் ஒன்றுபடுதற்குரிய அடைதலாவதல்லது புறநிலையாய் வேறுபடுதற்குரியதாகாது.

அன்றியும், செந்தமிழ்நிலம் பன்னிரண்டையும் விளக்க எழுந்த மேற்குறித்த பழம்பாடலும், 'செந்**தமிழ்தீர் ஏதஞ்சேர்** பன்னிருநா'டென்று வழங்காமல், 'செந்**தமிழ்சேர் ஏதமில்** பன்னிரு நாடென்றுவழங்கி ஆசிரியர் தொல்காப்பியர்கருத்தை வலியுறுத்தி நிற்றலும் நோக்கத்தகும்.

நூலுக்குச் சிறப்புப்பாயிரவுறுப்பாக நூல்வழங்கும் நிலஎல்லை ஒவ்வொருநூலுக்கும் வெவ்வேறுநிலவழக்குப்பற்றி வெவ்வேறு கூறப்படவேண்டுமென்பது பெறப்பட்டமையால் தொல்காப்பியத்தின் முற்பட்ட பழையகாலத்தில் தமிழ்நிலப்பரப்பு மிக விரிந்திருந்ததென்பதும், அதனாற் பலவேறு தமிழ்நாடுகளிலும் தமிழ்வழக்கு வெவ்வேறு வகையாக வழங்கப்பட்டிருக்கவேண்டுமென்பதும் போதரும்.

வேங்கடத்துக்கு வடக்குள்ள நாடுகளிலும் தமிழ்வழக்குண்டு என்பதைப் பின்வருவனவற்றாலும் அறியலாம்.

வேங்கடத்தின் வடநாட்டுள்ள வடபெண்ணை, தொழுநை என்னும் யாறுகள், பொன்னி பொருநை வையையென்பனபோலத் தமிழ்ப்பெயரால் வழங்கப்பட்டமையால் அவ் யாறுள்ள நாடுகள் முற்காலத்தில் தமிழ்நாடாகவே இருந்திருக்கவேண்டும். அல்லாக்கால் அவற்றிற்கு அப்பெயர்வழக்கில்லையாம்.

இமயத்தின் ஒருபகுதிக்குக் **குயிலாலுவம்** என்னும் தமிழ்ப் பெயர் இருந்ததாகச்● சிலப்பதிகாரத்துட் காணப்படுதலால் பிற்காலத்திலும் ஆங்குத் தமிழ்வழக்கிருந்ததென் றறியப்படுகிறது.

அகத்தியனார் கயிலாயத்துநின்றே தமிழ்பயின்றவராய் ஈங்கு வந்தமையால் அவ் வடநாட்டுள் முற்காலத்தும் தமிழ்வழங்கிற்றென்பது சொல்லவேண்டாதாயிற்று.

அன்றியும், அகத்தியர் அழைத்துவந்த அரசர் பதினெண்மரும் பதினெண்குடிவேளிரும் தமிழரல்லாத பிறராயின், அவர் இங்குவந்தபின் அவர் பரம்பரையோரெல்லாரும் பேசிவந்த பிறபாஷை ஒன்றும் காணப்படாமையின் அவரும் தமிழரேயாவர்.

வடநாட்டிற்றோன்றிய குடம் முதலிய கூத்துக்களின்பெயர் தமிழ்மொழியாயிருத்தலால் அக்கூத்துக்களையெடுத்தாளுதற்குரிய நாடகத் தமிழ்நூல்களும் அங்குத் தோன்றியிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

அத்தினபுரத்தில் தருமபுத்திரனைக் கௌதமன் பாடின பாட்டுப் ✳ புறநானூற்றில் உண்மையால் குருநாடும் தமிழ்நாடாயிருந்த தென்றும், அங்கும் தமிழ்ச்செய்யுளின்பநுகரும் தமிழரசரிருந்தனரென்றும் அறியலாம்.

அன்றியும், கௌரவர் நிரைகோடலாலும், கண்ணன் விடையேறு தழுவலும் குடக்கூத்தாடுதலும், உண்மையாலும் வடநாட்டுத்தமிழ் வழக்குண்மை அறியத்தகும்.

பிற்காலத்தும் உஜ்ஜயினியில் பல்லாயிரம் தமிழக்குடிகள் இருந்தமை ❊ பெருங்கதையால் அறியப்படுகிறது.

● சிலப்பதிகாரம். காதை. 28. அடி. 102.

✳ 366

❊ மகதகாண்டம். 4. புறத்தொடுங்கியது. அடி. 10-11.

மணிமேகலையுள் நாகநாட்டரசனொருவன் **வளைவணன்** என்றும் அவன்மனையாள் **வாசமயிலை** என்றும், அவன்மகள் **பீலிவளை** என்றும் தமிழ்ப்பெயர்கொண்டு வழங்கப்பட்டமையால் அந்நாடும் தமிழ் நாடாயிருந்ததென்றும், அந்நாகசாதியாரும் தமிழராயிருந்தார் களென்றும் அறியத்தகும்.

இவ்வாறு தமிழ், வேங்கடங்கடந்த வடநாடுகளிலும், குமரி கடந்திருந்த தென்னாடுகளிலும் வழங்கப்பட்டமையால் **வடவேங்கடம் தென்குமரி** என்பன தமிழ்நாட்டெல்லையாகாது தொல்காப்பியநூல் வழங்குதற்குரிய அதிகாரவரம்பென்னும் நிலவெல்லையாமென்பது புலனாகும்.

ஆதலால், தொல்காப்பியர்காலத்தில் வேங்கடம் குமரிக்குட்பட்ட தமிழ்நாட்டுள் வழங்கிய தமிழ்வழக்குப்பற்றியே அவர் நூலியற்றினர்.

அவர் சொல்லாத பாட்டியல் முதலிய பிற தமிழிலக்கணங்களும் தொல்காப்பியத்தின் வேறுபட்ட திணைதுறைகளும் சீர்தளை கோடல் முதலிய செய்யுளிலக்கணங்களும் பாவினவிகற்பங்களும் அணி யிலக்கணங்களும் பிறதமிழ்நாட்டினின்று வந்தனவாக வேண்டும்.

பாட்டியலிலக்கணம் பண்டுமுண்மை வான்மீகிமுனிவர் முதலிய வடநாட்டார்நூலுள் முதற்கண் மங்கலமொழி வழங்குதலாலும் அறியலாம். வான்மீகியார் பாடிய **பரிதிசூழ்ந்த** என்னும் புறப்பாட்டினும் பாட்டியன் மரபுபற்றிய, மங்கலமொழி வழங்கப்பட்டுள்ளது.

இன்னோரன்னகாரணங்களால் வேங்கடம் குமரி யென்பன **தமிழ்நாட்டெல்லையன்றென்றும், தொல்காப்பியநூல்வழங்குதற்குரிய நிலவெல்லையாம்** என்றும், வேங்கடம் குமரி இவற்றுக்குப் புறம்பான நிலங்களிலும் தமிழ்மொழி முற்காலத்திற் சிறிது வேறுபட வழங்கப்பெற்றதென்றும் வெளியாம்.

இரண்டாவது தடை, தமிழைத் தென்மொழியென்றும் திராவிடமென்றும், ஸமஸ்க்ருதத்தை வடமொழியென்றும் ஆரியமென்றும் வழங்குதலால் தமிழ் திராவிடநாடாகிய தென்னாட்டுக்கே உரிய தென்றும், ஸம்ஸ்க்ருதம் ஆரியநாடாகிய வடநாட்டுக்கே உரியதென்றும் கூறுவது. அது பொருந்தாது.

தமிழ் **தென்னாட்டி**லிருந்த சங்கப்புலவரால் ஆராய்ந்து இலக்கணம் வகுத்தமைத்துக்கொள்ளப்பெற்றமையால் **தென்மொழி** எனவும் ஸமஸ்க்ருதம் வடநாட்டிலிருந்த தெய்வப்புலவராலாராய்ந்து இலக்கணம் வகுத்தமைத்துக் கொள்ளப்பெற்றமையால் வடமொழி என்றும் தேவபாஷை யென்றும் பெயர்பெற்றன.

வடநாடு ஆரியநாடாதலால் வடமொழி ஆரியம் எனவும், தென்னாடு திராவிடநாடாதலால் தமிழ்மொழி திராவிடம் எனவும் பெயர்பெற்றன.

பிற்காலத்தில் இவ்விருநிலவாழ்க்கை பற்றியே அந்தணருள் விந்தியத்தின் வடபாலார் ஆரியரென்றும், தென்பாலார் திராவிடரென்றும் வழங்கப் பெற்றுள்ளார்கள். இதனால் இப்பிற்காலநிலையில் விந்திய மளவும் தமிழ்மொழி வழங்கப்பெற்றிருந்ததென்று அறியக் கிடக்கிறது. வடநாட்டார் தமிழைப் பிழைபடப் பேசத்தொடங்கிய காலந்தொட்டு அவரைத் தமிழர், ஆரியரென வழங்கி வருகின்றனர். அவர்பேசும் தமிழ் நகைச்சுவைக்கு உதாரணமாயிற்று.

மேற்கூறியவற்றால் தென்மொழியென்பது, தென்னாட்டுக்கே யுரியதன்றென்பதும், வடமொழியென்பது வடநாட்டுக்கே உரிய தன்றென்பதும் விளங்கும்.

# அண்டகோள விருத்தி

அண்டகோளப்பொருளையாய்ந்துரைப்பன் மாறனடிப்
புண்டரீகப்பூப்புனைந்து.

சென்ற புரட்டாசிமாதச் செந்தமிழ்ப்பகுதியில் 'ஒர்ஐயம்' என்ற பெயருடன் ஒருவிருப்புரை வெளியிடப்பட்டது.●

அதில் 'அண்டகோளத்தாரணுவாகி' என்ற பாட்டைக் காட்டி அதன் வரலாறும், பொருளும் விளங்கவில்லை என்றும், அவற்றைப் பண்டிதர்களேனும் பத்திராசிரியரேனும் விளங்கச்செய்து, அப்பாட்டு இன்னநூலின்க ணுள்ளதென்பதும், இன்னாராற் பாடப்பட்டதென்பதும் தெரிவிக்கவேண்டுமென்றும் கண்டிருக்கிறது.

அப்பாட்டுப் பன்முறை செந்தமிழில் வெளிவந்திருந்தும், வரலாறுகள் நன்குவிளங்காமையாலும், பாட்டின்பொருள் மிகவும் ஆழ்ந்தறிந்து விரிவாயெழுதி விளக்கவேண்டியநிலையில் அமைந்திருந் தமையாலும் இதுகாறும் காலம் தாழ்க்கப்பட்டது.

இப்பாட்டு ஒரு நூலின் கண்ணுள்ளதென்று எண்ணுதற்குரிய சான்றுகள் ஒன்றும் காணப்படாமையாலும், இப்பாட்டின் இறுதி அடிகள் புலவரைக் கருதிக் கூறப்பட்டிருத்தலாலும், 'ஆழ்வார் சங்கத்தார்க்கு அருளிச்செய்த அகவல்' என்று ஏட்டில் எழுதப்பட்டபடியே அது ஒரு முத்தகச் செய்யுளாயிருக்கவேண்டுமென்று தோன்றிற்று.

● செந்தமிழ் தொகுதி 28. பகுதி 11.
ஓரையம். - 136ம் பக்கம் பார்க்க.

அப்பால் அப்பாட்டைப் பன்முறைபடித்துப் பொருள்நோக்கும்போது 'நவில்தொறும் நூல்நயம்போலும்' என்பதற்கு இலக்கியமாய், திருவாய்மொழிப்பொருள்களில் நோக்குடையதாய், மிகவும் ஆழ்ந்த சிறந்த பொருளுடையதாய் அப்பொருளுணர்தற்குரிய குறிப்புடைய தாய்த் தெய்வப்புலமையானமைந்த செவ்வியபாடலாக விளங்கிற்று.

இந்நிலையில், செந்தமிழ் உதவிப்பத்திராதிபர், T.K.இராமாநுஜையங்கார் கூடற்புராணத்தின் கடவுள் வணக்கத்தில் **13**-ம் பாட்டில் இப்பாட்டினை முதற்குறிப்பாற்கூறி, இது சடகோபராற் பாடப்பட்டதென்றும், இப்பாட்டால் தண்டமிழ்ச்சங்கத்தைச் சடகோபர் வென்றார் என்றும், இதன் வரலாறு சொல்லப்பட்டிருக்கிறதென்று தாம் தெரிந்துகொண்டிருந்ததை எனக்குத் தெரிவித்தார்.

அக்கூடற்புராணச் செய்யுள் வருமாறு:-

*'அண்டகோளத்தாரென்னும் **ஆரியத்தமிழாலன்று***
***தண்டமிழ்ச்சங்கம்** வென்ற சடகோபர் தாமேசிற்பங்*
*கண்டதோர் வடிவாற்பேசத் திரைப்புறத்திருந்திக்காலத்*
*துண்டெனப்பதின்மர்பாடல் உத்தரித்தவர் தாள்போற்றி;*

என்று நாதமுனிகளுக்கு வணக்கங்கூறுமிடத்துள்ளது.

இப்பாட்டில், **ஆரியத்தமிழ்** ஒன்று **தண்டமிழ்** ஒன்று எனத் தமிழ் இருதிறத்தினதென்றும், அவை ஒன்றோடொன்று மாறுபடுவனவென்றும், பொருள்தோன்றுமாறு பாடியிருப்பது மிகவும் வியப்பை உண்டாக்கிற்று. பின்பு, ஆரியம் வடமொழியாதலால் வடமொழிநூற்பொருள் பற்றித் தோன்றிய தமிழ்ப்பாசுரங்களை ஆரியத்தமிழ் என்று கருதியிருக்கலா மென்று சிறிது சமாதானமடைந்தேன்.

பின்பு, 'உயர்ந்தோர்க்குரிய ஓத்தின் ஆன' என்ற தொல்காப்பியச் சூத்திரப்பொருள் (நச்சினார்க்கினியம்) நினைவில்வரவே, பண்டைக்

காலந்தொட்டே, வீடுபேறடையவிரும்பிய உயர்ந்த வேளாளரும் பிறரும் வேதநூற்பொருளை ஓதி உணர்ந்து ஒழுகி உய்யுமாறு அவ்வக்காலத்துப் பெரியாராற் செய்யப்பட்டுத் தொடர்ந்து வழங்கிவரும் தமிழ்நூல்கள் உண்மையால் அத்தகைய தமிழே ஆரியத்தமிழ் என வழங்கத்தகு மென்றறிந்தேன். இக்காலத்துவழங்கும் அத்தகைய நூல்களுள் திருவாய்மொழி முதலிய ஆழ்வார்பாடல்களும் அமையும்.

ஆழ்வார்பாடல்கள் வேதத்தின் வழிப்பட்டன என்பதற்கு 'வேதம் தமிழ்செய்த மாறன்' என்றும் 'மிக்க வேதியர் வேதத்தி னுட்பொருள், நிற்கப் பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான், தக்கசீர்ச் சடகோபன்' என்றும் "ஸஹஸ்ரசாகோ$^{2}$ப$^{1}$நிஷத்$^{1}$ஸமாக$^{3}$மம்" என்றும் சொல்லப்பட்டனபோல் உள்ள பிரமாணங்கள் மிகப்பல காணப்படுகின்றன.

ஆதலால் சடகோபர் **ஆரியத் தமிழால்** வென்றார் என்றது **வேத வழக்கொடு கூடியதாய், வீடுபேறு** பயக்கும் **திருவாய்மொழிப்பொருளை** உட்கொண்ட பாசுரத்தால் வென்றார் என்று விளங்கலாயிற்று.

இதனால் தமிழ்மொழி இருவேறு வகைப்பட்ட தன்றென்றும், உறுதிப்பொருளில் **உயர்ந்ததான** வீடுபேற்றுக்குரிய தமிழ்நூல்வழக்கே **ஆரியத்தமிழ்** என்றும், அவ்வீடுபேற்றில், **தண்ணியவாய** அறம் பொருள் இன்பங்களை யுணர்த்தும் தமிழ்நூல்வழக்கே **தண்டமிழ்** என்றும் கருதி அப்பாட்டிற் கூறியிருப்பதாகக் கொள்ளவேண்டியதாயிற்று.

இக்கருத்துக்கொண்டு கூடற்புராணத்திற்கண்ட, 'அண்ட கோளத்தாரென்னும் ஆரியத் தமிழாலன்று, தண்டமிழ்ச் சங்கம் வென்ற சடகோபர்' என்றதன் பொருளை உற்றுநோக்குகையில் ஆரியத்தமிழர்க்கும், தண்டமிழ்ப்புலவர்க்கும், புலனெறிவழக்கில், (காவ்யமர்யாதையில்: கவிமரபில்) விவாதமுண்டாயிருக்கலாமென்றும், அதனால், அவ்விரு திறத்தாரும் வாதுபுரியுமிடத்துச் சடகோபர்

'அண்டகோளத்தாரணுவாகி' என்னும் இப்பாட்டால் ஆரியத்தமிழ்வழக்கை ஆதரித்துப்பேசித் தண்டமிழ்ச்சங்கப்புலவரை வென்றிருக்கலாமென்றும் தோன்றிற்று.

சங்கத்தார்க்குள்ளே நிகழ்ந்த இதுபோன்றதொரு ஐதிகம் 'கொங்கு தேர்வாழ்க்கை' யென்ற பாசுரத்துக்கு உள்ளதாகவும் அறிகிறோம்.

திருக்குறள் அரங்கேற்றிய கதையும் வழங்குகிறது.

இடைக்காடர் ஊசிமுறியும் ஒன்றிருக்கிறது.

தலைக்குத்துத்தீர்வுசாத்தற்கு என்றதன் குறிப்பாலறியும் சரித்திரமுமொன்று.

'ஆரியம் நன்று தமிழ் தீதென மொழிந்த, காரியத்தாற் காலக் கோட்பட்டான்' என்ற சரித்திரமும், **ஆரியம்,** **தமிழ்** என்ற இரு வேறு வழக்கால் மாறுபாடுண்டாயிருந்த தென்பதை நன்குவிளக்குகிறது. இவையெல்லாம் சங்கப்புலவர்கள் மற்றுமுள்ள தமிழ்ப்புலவர்களோடு ஓரோர் சந்தர்ப்பம்பற்றி மாறுபடுவதுண்டென்பதையுணர்த்துகின்றன.

தமிழாராயும் சங்கம் கூடியிருந்தால் அதில் தமிழ்வழக்குப்பற்றிய தடைவிடைகள் நிகழ்த லியல்பே; ஆதலால் அக்காலத்திற் சங்கப்புலவர்களுக்கும் பிற தமிழ்ப்புலவர்களுக்கும் தத்தம் புலமைத் திறமையை வலியுறுத்திக்கொள்ளும் முறையில் தம்முள் மாறுபாடிருத்தல் கூடுமென்று புலனாகின்றது.

அம்முறையானே ஆரியத்தமிழாகிய திவ்யப்ரபந்தங்களைத் தண்டமிழ்வல்லார் குற்றங்கூறி மாறுபட்டார் என்பது தோன்றுமாறு,

*'அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்*
*மன்னு மடலூரரார் என்பதோர் வாசகமும்*

**தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை யாம்தெளியோம்**
**மன்னும் வடநெறியே வேண்டினோம்.**

என்னும் திருமங்கையாழ்வார் பாசுரமும் (பெரிய திருமடல்) குறிப்பால் வெளியிட்டிருக்கிறது.

இதனால் பெண்மடல் கூறலாகாது என்னும் மறுப்புண்டாயிருப்பதை அறிந்தே, பெண்மடல் கூறலாம் என்பதற்குச் சமாதானம்சொல்லியிருப்பது போல் தோன்றுகிறது; இதில் மன்னும் **வடநெறியேவேண்டினோம்** என்றதனால் இது ஆரியநூல்வழக்கு என்பதும் வெளியாயிற்று.

இதனால் பெண்மடல்கூறலாகாதென்பது தண்டமிழ்வழக்கென்றும், வீடுபேறுகருதிய வேதவழக்காயுள்ள பேரின்பப்பாடல்களிற் பெண்மடல் கூறலாமென்பது ஆரியவழக்கென்றும் அக்காலக்கொள்கை என விளங்குவதாயிற்று.

திருவாய்மொழியிலும் சடகோபரால் பெண்மடல் கூறப்பட்டிருக்கிறது.

இதுவன்றியும், ஒருவனையே பாட்டுடைத்தலைவனாகவும் கிளவித் தலைமக (சிருங்காரநாயக) னாகவும் ஒரு பாட்டில் நாட்டிப் பாடலாகாதென்பது தமிழ்வழக்கு என்பர். ஆழ்வார்கள் எம்பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகவும் கிளவித்தலைமகனாகவும் கொண்டு பாடியிருக்கிறார்கள்.

அன்றியும், திருவாய்மொழியில் பகவத்பக்தியைப்புலப்படுக்கும் துறைப்பாடல்களைக்கேட்ட சிலர், காமபுருஷார்த்தத்தைப் பேசுகின்றன வென்றும், காமுகவாக்கியமாயிருந்ததென்றும் குறை கூறிச்சென்றார்கள் என்று திருவாய்மொழி ஈட்டால் தெரிகிறோம்.

இவற்றால் முற்காலத்துத் தமிழ்ப்புலவர்கள் ஆழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்த விஷயங்களில் மனம்பற்றாமல் வாதாடிவந்தார்களென்று தோன்றுகிறது.

பின்பு அவ்வாதங்களையெல்லாம் அடக்கித் திருவாய்மொழி வெற்றி பெற்று விளங்கலாயிற்று என்பதை, கம்பநாடர் பாடிய சடகோபரந்தாதி நன்கு விளக்குகின்றது. இதனை, சடகோபரந்தாதிப் பாட்டு 25ல்

*'தொகையுளவாயபனுவற்கெல்லாந்* **துறைதோறுந்** *தொட்டாற்*
**பகையுளவாம்; மற்றும் பற்றுளவாம்;** *பழநான் மறையின்*
*வகையுளவாகிய வாதுளவாம்; வந்தவந்திடத்தே*
**மிகையுளவாம்** *குருகூரெம்பிரான்றன் விழுத்தமிழ்க்கே'*

என்றதனாலறியலாம். இதனுள், 'துறைதோறும் தொட்டாற் பகையுளவாம்' என்றும், 'மற்றும் பற்றுளவாம்' என்றும், 'பழநான்மறையின் வகையுளவாகியவாதுளவாம்' என்றும், 'வந்தவந்திடத்தே மிகையுளவாம்' என்றும் கூறியுள்ள (இசைவேறுபாட்டால்) எதிர்மறுத்தல் கருதிய இகழ்ச்சிக் குறிப்பால்* அகப்பொருட்டுறையிலக்கணம் வழுவியதென்றும், காமப் பற்றுடையதென்றும், வேதவிரோதமுள்ளதென்றும், கூறியது கூறலுள்ளதென்றும் குருகூரர் விழுத்தமிழைக் குறைகூறினோர் கூற்றெல்லாம் அறியாமையுடையவாயின என்று பொருள்படுதலால் அவ்வாதங்களெல்லாம் முன்பு இருந்தொழிந்தனவென விளங்குகின்றது.

பின்பு திருவாய்மொழி எல்லோராலும் போற்றப்பட்டதென்பதை, சிவப்பிரகாசப்பெருந்திரட்டு நூலாசிரியராலும், பரிமேலழகராலும் பிறசமய நூலுள்ளும், பொதுநூலுரையுள்ளும் அதன் பாசுரங்கள் பிரமாணமாக எடுத்தாளப்பட்டிருத்தலால் அறியலாம்.

அன்றியும் கம்பநாடர் தாம் பாடிய இராமாயணத்தின் அவையடக்கியலில்,

* 'உளவாம்' என்றது இசைவேறுபாட்டால் எதிர்மறுத்தல்கருதிய இகழ்ச்சிக்குறிப்புணர்த்திவருதலுண்டு என்பதை, 'எடுத்தவுடல் தான் அன்றாம்; ஆன்மாவென்றே இதனையல்லால் வேறுளதாம்; இதுபோய்ப்பின்னை, அடுத்த பரலோகத்தும் புசிப்பதுண்டாம்' என்னும் பிரபோதசந்திரோதயச் சாருவாகவாதக்கூற்றினுள்ளும் காண்க.

"முத்தமிழ்த் துறையின் முறைபோகிய
உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவன்
பித்தர்சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ."

என்று தண்டமிழ்ப்புலவருக்குத் தனியே ஒரு அவையடக்கம் கூறிய அளவினமையாது,

"துறையடுத்தவிருத்தத் தொகைக்கவிக்
குறையடுத்தசெவிகளுக்கோதில்யாழ்
நறையடுத்தவசுணநன்மாச்செவிப்
பறையடுத்ததுபோலுமென்பாவரோ"

என்று மறித்தும் கூறிய இது, திவ்யப்ரபந்தங்களைக் கேட்ட செவியுடையாரை நோக்கியதென்பது தோன்றுமாறு, **துறைப்பாட்டுக் களையுடைய** திருவிருத்தம் முதலிய, **விருத்தப்பாவாலாகிய தொகைநூல்**களைக் கேட்ட செவியுடையார்க்கு என்று கூறியிருக்கிறார். இதனாலும், கம்பர் இராமாயணம் பாடுதற்குமுன்பே திவ்யப்ரபந்தங்கள் நன்கு மதிப்புப் பெறலாயினவென விளங்குகிறது. இவ்வாறாகத் திருவாய்மொழி வெற்றிபெற்று விளங்குதற்கு இடையே ஏதேனும் ஒருகாரணமிருக்க வேண்டும்; அது இவ்வண்டகோளப்பாசுரத்தின் ஐதிகமாயிருக்கலா மென்று கொள்ளுதற்கு இடந்தருகிறது.

அன்றியும் சடகோபரந்தாதி 48-ம் செய்யுளில், '**சங்கக் குவடிறக் குத்திய மாறப்பெயர்க்** கொலையானை' என்ற தொடரால் ஆழ்வார் சங்கத்தாரை வென்ற விருத்தாந்தத்தைக் கம்பரே கூறியிருப்பதால், அவர்காலத்துக்கு முற்பட்டே இந்த விருத்தாந்தம் பிராமாணிகர்களால் அங்கீகரிக்கப்பட்ட பிரஸித்தியுடையதாயிருந்ததென்று தெரிகிறது.

சடகோபரந்தாதியின் ஆழ்ந்தபொருள்களும் கவித்திறமையும், இராமாயணம்பாடிய கம்பர்பாடியதென்பதைப் புலப்படுத்தற்குரியன.

அன்றியும், அது தொன்றுதொட்டுத் திருக்குருகூரில் ஆழ்வார் ஸந்நிதியில், ஜ்ஞானசீல வ்ருத்தர்களாயும் ப்ராமாணிகர்களாயுமுள்ளார்கள் கோஷ்டியில் அரையரால் சேவிக்கப்பட்டுவருதலால் அதைப் பிரமாணமாகாதென்று சொல்லுதற்கிடமில்லை.

1. இனி, ஆழ்வார் சங்கத்தார்க்கு அருளியதாகக்காட்டும், அப்பாட்டை நோக்குகையில், வைதிகத்தில் ஏதேனும் ஒரு சமயப்பற்றுத் தோன்றாமல், பொதுப்பட விஷயங்களைச் சொல்லிச் செல்லும் முறையால் திருவாய்மொழியின் முதற்றிருவாய்மொழியை ஒத்திருக்கிறது.

2. சொல்லளவில் எல்லாச்சொல்லும் செவிக்கினிய செஞ் சொல்லாகத் தொடுக்கப்பட்டிருக்கும் செய்யுள்நடை திருவாய்மொழிச் செய்யுணடையை ஒத்திருக்கிறது.

3. அநதிகாரிகளான சாமானியஜனங்களுக்கு சொற்பொருள் விளங்கினாலும் நுவல்பொருள் விளங்காததாகவும், ரஹஸ்யார்த்தங்களை அறிதற்குரிய தத்துவவித்துக்களான சாஸ்த்ரஜ்ஞர்களுக்குச் சொல்லக் கருதிய பொருள் எளிதில் விளங்கும்படியாகவும், அமைந்திருக்கும் வாக்யநடையானது,

*'செத்தத்தின்வயிற்றிற் **சிறியது பிறந்தால்,***
*எத்தைத்தின் றெங்கே கிடக்கும்?'*
*'அத்தைத்தின் றங்கே கிடக்கும்'*

என்று மதுரகவியாழ்வாரும், ஆழ்வாரும் வழங்கிய வாக்கியநடையை ஒத்திருக்கிறது.

4. **'சிறுவரைப் பயந்தனள்'** என்ற தொடர், **'சிறியது பிறந்தால்'** என்றதோ டொன்றாயிருக்கிறது.

5. 'அவளிவளுவள்' என்ற சொற்றொடர் 'அவளிவளுவள் திருவாய்மொழி (1-1-4) என்றதை முழுதும் ஒத்திருக்கிறது.

6. 'பேரெழில் ஒருமை' என்றது, 'நலனுடை ஒருவன்' (திருவாய்மொழி 1-1-3) என்பதை ஒத்திருக்கிறது.

7. 'தன்னிலை யறியா' என்பது 'இறைநிலை உணர்வரிது' (திருவாய்மொழி, 1-3-6) என்பதை ஒத்திருக்கிறது.

8. 'ஒண்சுவை தருவது' என்பது 'ஒருகதி இன்சுவை தந்திட்டு' (திருவாய்மொழி 1-9-3) என்பதை ஒத்திருக்கிறது.

9. 'நிரைபொழிற் குப்பை தருகட்டு' என்பது 'குப்பைகிளர்ந் தன்னசெல்வம்' (திருவாய்மொழி 3-9-5) என்பதைப் பொருளால் ஒத்திருக்கிறது.

10. 'தலை யிலி' என்பது மிகுநரை இலனே (திருவாய்மொழி 1-1-2) என்பதை ஒத்திருக்கிறது.

11. ஒரு மொழியுள் - பொழில், எழில், மா, கடல், மணல், நிலை, மகள், புலவர், சுவை, அவன், துவள், முதலிய பலசொற்களும் திருவாய்மொழியுள் வழங்கப்பட்டன.

12. திருவாய்மொழியுள் வழங்கப்படாத கடிய திரிசொல் ஒன்றேனும் இப்பாட்டின்கணில்லை.

இப்பாட்டுள், நூன்மரபாயுள்ள இலக்கணங்களுள், நாற்பொருட் பயனும் சொல்லப்பட்டுள்ளன.

**மதங்களுள்** உடன்படல், மறுத்தல், பிறர்தம்மதம்மேற்கொண்டு களைதல், தாஅனாட்டித் தனாது நிறுவுதல், இருவர்மாறுகோளொருதலை

துணிதல், பிறனூற்குற்றங்காட்டல், பிறிதொடுபடாஅன் தன்மதம்கொளல் என்னும் எழுவகைமதமும் அமைந்துள்ளன.

**அழகினுள்** சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின்வைப்பு, உலகமலையாமை, விழுமியதுபயத்தல், விளங்கு தாரணத்ததாதல் என்னும் பத்தழகும் அமைந்துள்ளன.

**உத்திகளுள்** ஒத்துமுறைவைப்பு, தொகுத்துச்சுட்டல், வகுத்துக் காட்டல், முடிவிடங்கூறல், தானெடுத்துமொழிதல், பிறன்கோட்கூறல், சொற்பொருள்விரித்தல், தொடர்ச்சொற்புணர்த்தல், இரட்டுறமொழிதல், ஏதுவின்முடித்தல், ஒப்பினமுடித்தல், மாட்டெறிந்தொழுகல், எதிரது போற்றல், பின்னதுநிறுத்தல், ஒருதலைதுணிதல், எடுத்துக்காட்டல், விகற்பத்தின்முடித்தல், முடிந்ததுமுடித்தல், இன்னதல்லதிதுவென மொழிதல், முன்மொழிந்துகோடல், உய்த்துணரவைத்தல் என்னும் இவ்விருபதின்மேலுள்ள உத்திகள் அமைந்துள்ளன.

**கவிமரபுகளுள்** சொற்குறிப்பு, பொருட்குறிப்பு, சொற்பொருட்குறிப்பு, தொகைக்குறிப்பு, குறிப்பிற்குறிப்பு முதலிய பலகுறிப்புக்களும், உவமை, உருவகம், சொல்முரண், பொருள்முரண், நிரனிரை, சிலேடை முதலிய பல அணிகளும், தந்த்ரோக்தி, சாடூக்தி, கூடோக்தி, விஷமோக்தி, லோகோக்தி, விநோதோக்திகளாகிய சாதுர்யோக்திகளும், ஸ்வாபதேசம், அந்யாபதேசம் என்னும் அர்த்தவிசேஷங்களும் அமைந்து விளங்குகின்றன.

இவையெல்லாம் பொருளுணர்ந்தபின்பே விளங்கத்தக்கனவாதலால் அவை பின்னர் விளக்கப்படும்.

இப்பாட்டு நீண்டகாலமாக உரையெழுதப்படாத முத்தகச் செய்யுளாகவே ஏடுகளில் எழுதப்பட்டு வந்திருப்பதால் எழுதுவோரால் நேர்ந்த சில எழுத்துப்பிழை புகுந்திருப்பதாகத் தெரிகிறது. அவை

'ஆருயிர்' என்பது 'ஆரியர்' என்றும், 'பரப்பில்' என்பது 'பரப்பி' என்றும், 'பெருமா' என்பது 'பெருமரம்' என்றும், 'டொன்று' என்பது பொன்று என்றும், 'கொட்' என்பது 'கோட்' என்றும் உள்ளனவாம்.

## இப்பாட்டால் நுவலப்படும் பொருள்.

உபயவேதாந்தபாரங்கதர்களால் அறிதற்குரிய வேதவழக்காயுள்ள பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளும், தத்வஹிதபுருஷார்த்தங்களும், புருஷார்த்தங்களை அடைதற்குரிய உபாயங்களும், புருஷார்த்த விசேஷங்களும், அவற்றின் ப்ரகாரங்களும், அவைபற்றிப்பாடிய ஆரியத்தமிழ்ப்புலனெறிவழக்கங்களும், அவை தண்டமிழ்ப் பாடல்களின் புலனெறிவழக்கோடொவ்வாமைக்குரிய காரணங்களும், அவை பற்றிய ஸ்வபக்ஷ பரபக்ஷ வ்யவஹாரங்களும், அவற்றுள் ஒருதலைதுணியப் பணித்தலும் உள்ளனவாம்.

## பாட்டின் பொருட்டொடர்நிலை.

இப்பாட்டுக்குப் பகவத்பக்தி விஷயமாகையாலே, அந்த பக்திக்கு விஷயமான பகவத்ஸ்வரூபரூபகுணங்களைச் சொல்லத் தொடங்கி, ஜகத் காரணத்வம்தோன்ற முதலிரண்டடிகளால் ப்ரக்ருதியின் ஸ்தூலரூபமான மஹதாதி தத்வசிருஷ்டியும், மூன்றாமடியால் அம்மஹதாதிதத்வங்களின் காரியரூபமான பிரபஞ்சசிருஷ்டியும் கூறப்பட்டுள்ளன. அவ்வடிக ளுள்ளேயே பகவத்ஸ்வரூபரூபகுணங்களும் உடனிலையாயமையுமாறு கூறப்பட்டன. இன்னும் அவ்வடிகளுள்ளேயே, சித், அசித், ஈசுவரரூபமான தத்வத்ரயங்களும் அடங்கியுள்ளன.

இவ்வாறாக 'தத்சிருஷ்ட்வா' என்கிறபடியே ஜகத்சிருஷ்டிக்ரமம் சொல்லி, 4, 5, 6 அடிகளால் 'ததநுப்ரவிச்ய' என்கிறபடியே ஜீவாத்மாக்களில் அநுப்ரவேசித்துப் பலப்ரதானம் செய்ய அப்பரம்பொருள் இருக்கும் இருப்பின்படிசொல்லி, 7ஆம் அடியால் பலப்ராப்திக்குரிய

உபாயங்களும், அவற்றுக்குரிய பலங்களும் சொல்லி, 8 முதல் 12 வரையுள்ள அடிகளால் அப்பலங்கள் இருக்கும் ப்ரகாரம்சொல்லி, 12ம் அடியால் பலப்ரதாதாவான பாட்டுடைத்தலைவன், அப்பாடற்குரிய கிளவித்தலைமகன் இவர்களது இயல்புகூறி, 13ம் அடியின் முற்பாதியால் பாட்டுடைத்தலைவனும், கிளவித்தலைமகனும் ஒருவனேயாதற்கு ஏதுக்கூறி, அவ்வடியின் பிற்பாதி தொடங்கி, 'பயந்தனள்' என்னுமளவும் ஆரியத்தமிழ்த்தலைமகளது இயல்புகூறி, அவள் தண்டமிழ்த்தலைமகளின் வேறுபடுதல்காட்டி, தண்டமிழ்த்தலைமகள் இன்னளல்லள் என்பது குறிப்பாற்கொள்ளுமாறு ஸ்வபக்ஷ பரபக்ஷ வ்யவஹாரங்களை நிரூபித்து, 16, 17 அடிகளால் இவ்விருவகை வழக்கினுள் கொள்ளத்தக்கது இதுவென்று புலவர்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்று முடிவுகூறியிருக்கிறது.

**இனி அப்பாட்டு வருமாறு :-**

*அண்ட கோளத் தாரணு வாகிப்*
*பிண்டம் பூத்த பேரெழில் ஒருமை*
*ஈருயிர் மருங்கின் ஆருயிர் தொகுத்து*
*நித்திலத் தன்ன வெண்மணற் பரப்பில்*
*வேரும் வித்து மின்றித் தானே*
*தன்னிலை யறியாத் தொன்மிகு பெருமா*
*மூவழி முப்பழ முறைமுறை தருதலின்*
*ஒன்றுண் டொண்சுவை தருவது மற்றது*
*கல்லி லெழுந்து கடலில ழுந்தி*
*அறுகாற் குறவன் நீரற விளைக்கும்*
*நிரைபொழிற் குப்பை தருகட் டொன்றுவித்*
*தறுகொட் டாமா விளைக்கு நாடன்*
*அவனே தலையிலி யவன்மகள் முலையிலி*
*தானு மீனாள் ஈனவும் படாஅள்*
*எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்*

அவளிவ ளுவளென் றறிதல்

துவளறு காட்சிப் புலவரது கடனே."

என்பது.

**பொழிப்புரை வருமாறு : -**

அண்டகோளங்களின் அறிதற்கரிய நுண்பொருளாயிருந்து (அதனைப்) பிண்டமாகத் தோற்றுவித்த பெருமையும் எழிலும் வாய்ந்த ஒருபொருள், ப்ரக்ருதியின்கண்ணே (போகம்) நுகர்தற்குரியன வாய்க்கிடந்த உயிர்களை (அப்போகம் நுகர்தற்குரிய தநுகரண புவனங்களுடன்) கூட்டி முத்துப்போலே சுபாவ சுத்தமாயும் மணல்போலே அநந்தமாயும் உள்ள அவ்வுயிர்த்தொகுதிகளில் யாதொரு பற்றுதலும் காரணமுமில்லாமலே உள்ளுறைந்துநிற்கும் தன்னிலையை ஒருவராலும் அறியமுடியாத தொன்மையும் பெருமையும் உடைய மகிமைபொருந்தியதாய்நின்று (அவ்வுயிர்களுக்கு) மூன்றுநெறியின் வாயிலாக மூன்று பயன்களை வேதத்திற் சொல்லிய கிரமமாகத் தருமிடத்து, ஒரு பயன் குற்றமற்ற சுவையுடையதாயிருக்கும்; மற்றொருபயன் மலைபோலுயர்ந்தும், கடல்போலிழிந்தும் (ஏற்றிழிவு டையதாய்) ஆறுகால்களையுடைய குறவனால் நீரில்லாமல் விளைவிக்கப்படுகின்ற வரிசையான பொழிற்றொகுதி தருகின்ற கள்ளையுடையதாயிருக்கும்; மற்றொன்று விதையற்ற கொட்டை யாயிருக்கும்; அப்படிப்பட்ட (பெரு) மா, பலனளிக்கும் சிறப்புவாய்ந்த நாட்டையுடையோன் (பாட்டுடைத் தலைவனும் கிளவித்தலை மகனுமான) நாடன் என்று சொல்லப்பட்டவனானான்; அவனுக்குமேல் ஒரு தலைவனில்லாதிருத்தல் அதற்கு ஏது; (அவனால் பிறப் பிக்கப்பட்டும், அறிவுகொளுத்தப்பட்டும் அவன் வழிப்பட்டொழு குதலுடைமையால்) மகளாயுள்ளாள்; (பேரன்பும் பேரின்பமும் உடைமையால்) காதலியுமானாள்; (அவள் சிற்றின்பத் தலைமகள்போல) முலை முதலிய பெண்ணுறுப்பில்லாதவள்; (அவள் கலவியின்பந் துய்த்தலால்) மகப்பெறுமவளல்லள்; பிறளொருத்தி வயிற்றிற்

பிறந்தவளுமல்லள்; பத்துப்பிள்ளையைப் பெற்றாள்; அவள் இத்தன்மையுடையளாதலாற் சிற்றின்பப்பாடற் புலனெறிவழக்க மெய்தற்குரிய ளல்லாத பிறள் என்று தெரிந்துகொள்ளுதல் சிறந்த இயற்கையறிவோடுகூடிய நூலறிவுடையோர் கடன் என்றவாறு.

**இனி, இதன் விரிவுரை வருமாறு:-**

**"அண்டகோளத்து ஆர் அணுவாகி"** என்றது ஸம்ஹாரகாலத்தில் அண்டகோளங்களின் அறிதற்கு அரிய அணுமயமான ஸூக்ஷ்மரூபியாய் நின்று என்றவாறு.

**அணுவாகி** என்ற ஆக்கத்தால் ஸம்ஹாரகாலத்தில் என்பது பெறப்பட்டது.

விட்டுநீங்காத ஒற்றுமைநயத்தால் அணுவாகிய அண்டத்தின் ஆக்கம் ஒருமைப்பொருள்மேலும் ஏறிநின்றது; இதனால் அவ் வொருமைப் பொருட்கு ஜகதுபாதாநகாரணத்வம் ஸூசிதம்.

**"பிண்டம் பூத்த பேர் எழில் ஒருமை"** என்றது ஸூக்ஷ்ம ரூபமாயிருந்த அவ்வண்டத்தை ஸ்ருஷ்டிகாலத்தில் ஸ்தூல ரூபமாகப் பரிணமிப்பித்த பெருமையும், எழிலும் வாய்ந்த ஒரு (பரம்) பொருள் என்றவாறு.

பிண்டம் பூத்த என்றதன் குறிப்பால் ஸ்ருஷ்டிகாலத்தில் என்பது பெறப்பட்டது. பிண்டம்-ஸ்தூலவடிவம். பூத்தல் தோன்றுதலும்; தோற்றுவித்தலும் ஆம். தோன்றுதற் பொருளில், பிண்டமாகப் பூத்த என்க. இங்கு பூத்த என்பது பூ பூத்தது என்புழிப்போலச் செயப்படுபொருள்குன்றியவினையாய் நின்றது. இப்பொருள் ஜகதுபாதாந காரணபரமாயிற்று.

இனித் தோற்றுவித்தற்பொருளில் மரம் பூப் பூத்தது என்புழிப்போலச் செயப்படுபொருள்குன்றாதவினையாய்நின்றதெனக் கொள்க. இதற்கு அவ்வணு செயப்படுபொருள். இது ஜகந்நிமித்தகாரணபரமான பொருள்.

இங்ஙனம் ஒருதொடரின் இருபொரு ளொருங்கமையக்கூறிய இது தந்திரோச்சாரணம். பரம்பொருள் ஒன்றாய்நின்றே உலகிற்கு இருவகைக்காரணமுமாயும் அமைந்திருப்பதுபோல, பிண்டம் பூத்த என்னும் ஒரு தொடர்நின்றே அவ்விருவகைப்பொருளையும் ஒருங்குணர்த்திநிற்பது ஒரு வியப்பு.

பகவத்காமமாகிற பக்தி இப்பாட்டுக்கு முக்யார்த்தமாகையாலே, அந்த பக்திரூபமான ஞானத்திற்கு விஷயமாகக் கொள்ளத்தக்க பகவத்ஸ்வரூபத்தை, 'காரணம்து த்யேய:' என்று ஜகத்காரணரூபமாக, வேதம் சொல்லியபடியே இங்கு நிரூபித்திருக்கிறது. உபாதானகாரணத் தன்மைமாத்திரம் கூறில், பிரகிருதியில் அதிவ்யாப்தியாம், அதனை நீக்குதற்கு நிமித்தகாரணத்துவம் கூறப்பட்டது. நிமித்தகாரணத்துவம் மாத்திரம் கூறின் ப்ருஹ்மா முதலான ஸத்வாரக கர்த்தாக்களில் அதிவ்யாப்தியாகும், அதனை நீக்குதற்கு உபாதாநகாரணத்துவம் கூறப்பட்டது.

**'பேரெழில்ஒருமை'** என்பதில் பெருமையும் எழிலும் தனித்தனி ஒருமை என்பதைக்கொண்டு முடியும். அவ்வொருமைக்குரிய பெருமையாவது அப்பிண்டமாகப்பூத்த பிரகிருதிமண்டலமுழுதும் வியாபித்து அதனைத் தன்னகப்படுத்தி இருத்தல்; எழில்-அழகு ★. இது சௌந்தரிய முதலான ஸமஸ்த கல்யாணகுணங்களுக்கும் உபலக்ஷணம். ஒருமை - ஒப்புயர்வற்றபொருள்.

அண்டகோளத்தணுவாகிப் பிண்டம் பூத்த ஒருமை என இயையும். இது 'உடல் மெலிந்து பருத்த உயிர்' என்பதுபோல உலகிற்கும் பரம்பொருட்கும் ஒற்றுமையும், வேற்றுமையும் ஒருங்குதோன்றக் கூறியவாறு. இதற்கு 'உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன்' என்ற திருவாய்மொழியில் நோக்கு.

★ 'அழகு - எது எப்படி இருப்பது நலமோ அப்படியிருத்தல். இதனை, கண்ணோட்டமென்னுங் கழிபெருங் காரிகை' என்பதனான் அறிக.

இதனால் ஜகத்துக்கு அபிந்நநிமித்தோபாதானகாரணமாய், ஸர்வவ்யாபகமாய், ஸமஸ்த கல்யாணகுணவிசிஷ்டமாய், உலகிற்கு உயிராய் அத்விதீயமாயுள்ளது என்ற லக்ஷணங்களால் பகவத்ஸ்வரூபரூப குணங்கள் ஏற்றபெற்றி சொல்லப்பட்டன.

பிண்டம்பூத்த 'ஒன்று' அல்லது 'ஒருவன்' என்னாது 'ஒருமை' என்றது என்னெனில், ஒன்று என்று அஃறிணைச் சொல்லாற்கூறின் அப்பிண்டத்தின்வேறாகாத பிரகிருதியைக் கூறியதாகும்; இது மஹதாதிதத்துவசிருஷ்டிநிலையாதலால் ஒருவன் என்று கூறுதற்கும் உருவமில்லை; ஆதலால் அப்பிரகிருதியைப் பற்றி அதன் பண்புபோல் உயிராய்நிற்பது என்னும் பொருண்மைதோன்றுமாறு 'ஒருமை' எனப்பட்டது என்க.

அன்றியும் இலக்கணநூலார் திணைப்பகுப்புச்செய்யுங்காலத்தே தெய்வப்பொருட்கேற்றதொரு திணைதணியேவகுத்துக்கொள்ளாமையால் தொல்காப்பியனார், 'தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக்கிளவி ............. இவ்வெனவறியுமந்தந்தமக் **கிலவே**' யென்று இடர்ப்பட்டு, வேறு கெதியில்லாமையால் '**உயர்திணைமருங்கில்** ................ இசைக்கும்' என்று ஒருபோக்குக் காட்டிச் சென்று, 'காலமுலகம்' என்ற சூத்திரத்தாலும் வழுவமைப்பர்'. ஆழ்வாரும், 'ஆணல்லன் பெண்ணல்லன் ................ கோணைபெரிதுடைத்தெம்பெம்மானைக் **கூறுதலே**' என்று திணைபால்பற்றிப்பேசுதற்கு இடர்ப்பாடு காட்டினார். இத்தன்மையான அநிர்வசநீயப்பொருள் என்பது தோன்ற உயர்திணையுமாகாது, அஃறிணையுமாகாது இருதிணைக்கும் பொதுவாய்நிற்கும் பொருண்மைத் தன்மைதோன்ற ஒருமை எனப்பட்டதென்க.

இவ்வாறு கீழ் மஹதாதி தத்துவசிருஷ்டியை நிரூபித்து, மேல் பிரபஞ்சசிருஷ்டியை நிரூபிக்கிறது 'ஈருயிர் மருங்கின் ஆருயிர் தொகுத்து' என்று.

இங்கு ஈருயிர் என்றது பிரகிருதியை; என்னை? 'மமயோநிர் மஹத்[1]ப்[3]ரும்ஹ த[1]ஸ்மின் க[3]ர்ப[4]ம் த[3]தா[4]ம்யஹம்' என்கிறபடியே அப்பரம்பொருளால் ஜீவாத்மாக்கள் பிரகிருதியுள் கெர்ப்பமாக வைக்கப்பட்டிருத்தலால் அந்தக் கெர்ப்பத்தையுடைய பிரகிருதி ஈருயிர் எனப்பட்டது. கெர்ப்பிணியை ஈருயிர் என்பது உலகவழக்கு. அன்றியும், ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் பிரகிருதி சரீரமாயிருத்தலால் அது ஈருயிர் எனப்பட்டது என்க. ஈருயிர் என்றது இரண்டு உயிர்களை உடையது எனப் பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைப்பெயராய்ப் பிரகிருதியை யுணர்த்திநின்றது. இதனால், ஈருயிர்மருங்கின் என்றது பரமாத்மா, ஜீவாத்மா என்னும் இரண்டு உயிர்ப்பொருள்களுக்கு உடலாயுள்ள ஸ்தூலப்பிரகிருதியின்கணுள்ள என்ற பொருள்பயந்து நின்றது. ஈருயிர் என்றது - ஏதுப்பெயர்.

'**ஆருயிர்தொகுத்து**' என்றது போகம் நுகர்தற்குரிய ஜீவாத்மாக்களைத் தநுகரணபுவனங்களுடன் கூட்டி என்றவாறு. இது, உணவின்மையான் அயர்ந்துறங்குவாரையெழுப்பி உண்பிப்பது போல்வதொரு கருணாகாரியம். இங்கு ஆர்தல் நுகர்தலாதலால் அந்நுகர்ச்சிக்குரிய போகம் என்னும் செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. தொகுத்தல்—கூட்டல்; அது ஏதனுடன் என்னும் உடனிகழ்பொருளை அவாவி நிற்றலால், அப்போகநிகழ்தற்குரிய சாதநங்களான தனுகரணபுவனங்கள் வருவித்துரைக்கப்பட்டன.

இதனளவும் ஜகத்ஸ்ருஷ்டிக்கு நிமித்தோபாதாநகாரணம் பரம்பொருள் என அப்பரம்பொருளின் தலைமை தோன்றக்கூறிய கூற்றானே பகவத் ஸ்வரூபரூபகுணங்களும் அமையக்கூறி, பிரகிருதியும் ஜீவனும் அப்பரம்பொருளின் அதீனம் எனக் காட்டினமையால் சித்து; அசித்து; ஈசுவரன் என்னும் தத்துவத்திரயத்தின் ஸ்வரூபநிரூபணமும் உடன் அமையக் கூறியவாறாயிற்று.

இவ்வாறு தத்வநிரூபணம்பண்ணி, மேல் ஹிதநிரூபணம்பண்ணத் தொடங்கி, சிருஷ்டிக்கப்பட்ட ஜீவர்களுக்குத் தோன்றாத்துணையாய் உள்ளேநின்று போகமளித்தற்பொருட்டு அப்பரம்பொருளின் அனுப்பிரவேசம் சொல்லுகிறது, **'நித்திலத்தன்ன வெண்மணற் பரப்பில்'** என்று தொடங்கி.

**நித்திலத்தன்ன வெண்மணற் பரப்பில்** என்றது முத்துப்போல ஸ்வபாவ சுத்தமாயும், அனுபாவ்யமாயும், வெண்மணல்போல் க்ரீடாஸ்தானமாயும் அனந்தமாயும் அணுவாயுமுள்ள ஜீவாத்தும ஸமூஹத்தின் அகத்தே என்றவாறு.

மணல் என்றது ஸாதிருசியலக்ஷணையால் ஜீவாத்மபரமாயிற்று. நித்திலத்தன்ன என்ற உவமை மணலுக்கு அடையாகாது அம் மணலின் சாதிருசியலக்ஷணையாலுணர்த்தப்பட்ட ஜீவாத்மாக்களுக்கு அடையாயிற்று.

நித்திலம் சிப்பியின் ஊனகத்துள்ளதாயினும் அது அவ்வூனின் விஜாதீயமாய், ஸ்வபாவசுத்தமாய், அநுபாவ்யமாயிருப்பதுபோலே ஜீவாத்மாவும் உடலின் ஊனகத்துள்ளதாயினும் அது அவ்வுடற் பொருளாகிய பிரகிருதியின் விஜாதீயமாய், ஸ்வபாவசுத்தமாய், பரமாத்மாவுக்கு அநுபாவ்யமாயிருத்தலால் அதற்கு அந்நித்திலம் உவமையாயிற்று.

வெண்மணல், தலைவர்க்குக் கிரீடாஸ்தானமாயும், அனந்தமாயும் அணுவாயுமிருப்பதுபோல், ஜீவாத்மாக்களும் பரமாத்மாவுக்குக் கிரீடா ஸ்தானமாயும் அனந்தமாயும் அணுவாயுமிருத்தலால் அவ்வெண்மணல் ஜீவாத்மாவுக்கு உவமையாயிற்று. பகவானுக்கு வாஸஸ்தானமாகச் சொல்லப்பட்ட 'ஸுசிமணிவிலஸத்[1] ஸைக[1]தே[1]' என்ற வடமொழிப் பொருளே 'நித்திலத்தன்னவெண்மணற்பரப்பில்' எனப்பட்டமையாலும்,

ஜீவபாஹுல்யத்துக்கு, 'நுண்மணலெக்கரிறபலர்' என்று திருவாய்மொழியில் மணற்பரப்பு உவமிக்கப்பட்டமையாலும், முன்சொல்லி முடிந்த சிருஷ்டிக்கும் இனிச் சொல்லப்புகும் பலப்ரதானநிலைக்கும் இடையேயுள்ள இது பிரகரணத்தால் வேதத்திற் சொல்லியவாறே பகவதநுப்பிரவேசம் சொல்லுமிடமாயிருத்தலாலும், நுண்மணல் ஜீவாத்மபரமாயிற்று. இனி, 'நித்திலத்தன்ன வெண்மணல்பரப்பி' என்பதே பாடமாயின், மணல் போலும் உயிர்களிடத்தில், அவ்வொருமை தன்வடிவைப் பரப்பி எனப்பொருளுரைத்துக்கொள்க. பரத்தல்-வியாபித்தல். இங்கு, 'கரந்தசில்லிடந்தொறும், இடந்திகழ்பொருள்தொறும், கரந்தெங்கும் பரந்துளன்' என்ற திருவாய்மொழிப்பொருள் சிந்திக்கத்தக்கது.

இனி அப்பரம்பொருள் ஜீவாத்மாக்களுக்குப் பலன் அளித்தற்கு இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது,

*'வேரும்வித்துமின்றித்தானே*
*தன்னிலை அறியாத்தொன்மிகுபெருமா'* என்று.

வேரும் வித்துமின்றி என்றது நாட்டிற் பாட்டுக்குப் பலன் அளிக்கும் பெருமாக்களைப்போலே வேரும் வித்தும் வேண்டுதலின்றியே என்றவாறு. அதாவது:- வேர் என்றது அவலம்பத்தையும் (பற்றுதலையும்) வித்தென்றது காரணத்தையும் குறித்துநிற்றலால், யாதொருபற்றுதலும் யாதொரு காரணமும் இல்லாமலே என்றபடி. நாட்டிற் பாட்டுக்குப் பலனளிக்கும் பெருமாக்கள், பாட்டுடைத்தலைமக்களும், மாமரங்களும். மாமரத்துக்கு வேரும் வித்தும்போலே தலைமக்களுக்குப் புகழும், பாட்டும் பற்றும், காரணமுமாயின. புகழ் உடம்பாதலாற் பற்றாயிற்று. அப்புகழைத் தோற்றுவித்தலாற் பாட்டு வித்தாயிற்று. (மாமரம் பாட்டுக்குப் பயனளித்தலாவது, வளர்ப்பார் அதற்குப்படும்பாட்டுக்குத் தக்கவாறு பயனளித்தல்.) அதாவது பரம்பொருள் ஜீவாத்மாக்களில் அநுப்பிரவேசம் செய்துநிற்கும்நிலைக்கு யாதொரு சாதனமுமில்லை; காரணமுமில்லை என்றபடி. கருணாகாரியம் என்பது குறிப்பு. தானே என்றது இயல்பாகவே

(நிற்கும்) என்றவாறு. மணற்பரப்பில் வேரும் வித்துமின்றித் தானேநிற்கும் தன்னிலை எனக் கூட்டுக. 'நிலை' எனப் பின் வருதலால் நிற்கும் என்பது பெறப்பட்டது.

இவ்வடிகளால் அப்பரம்பொருள் தன்னை அடைந்தார்க்கு அது தானே நின்று பலனளித்தற்குச் சித்தமாய் உடனுறைந்து பிறிதொன்றும் தனக்கு வேண்டாதிருக்கும் நிலைகூறி, இதன் குறிப்பால் நாட்டிற் பாட்டுடைத்தலைவர் இருக்கும் இருப்பின் வேறுபாடு காட்டப்பட்டது.

இனி அப்படி அது சித்தமாயிருந்தாலும் அடைந்தார் விரும்பிய பொருள் எல்லாம் அளித்தற்கு வேண்டும் மஹைசுவரியமுடைய தாயிருக்குமோ என்னும் சங்கையைப் போக்குகிறது. '**தன்னிலையறியாத் தொன்மிகு பெருமா**' என்று. இவ்வடி 'தன்னிலையறியாத்தொன்மிகு பெருமரம்' என்று ஏடுகளி லெழுதப்பட்டிருக்கிறது. 'மூவகை' என்று இதன்மேல் **மகர உயிர்மெய்** வருதலால் 'மர' என மகரவொற்று வேண்டாமலே எழுதல் அமையும். அமையவே மர என்பதிலுள்ள ரகர உயிர்மெய்க்கும், **மா** என்பதிலுள்ள காலுக்கும் ஏட்டெழுத்துக்களில் வேற்றுமை இல்லாமையால் பெருமா என்பதிலுள்ள காலை ரகரமாகக் கருதி, மூவழியெனப் பின்வரும் மகரத்தை நோக்கிப் 'பெருமரம்' என விரித்தெழுதப்பட்டிருக்கலாமென்று தோன்றுகிறது. 'பெருமரம்' என்ற பாடத்தைக் காட்டிலும் 'பெருமா' என்ற பாடம் சிறப்புடையதாகவும், பெருமரம் என்ற பாடத்துக்குரிய பொருளைச் சிறிதும் விடாததாகவு மிருத்தலாலும், பின் 'ஆமா' என்று சுட்டப்படுதலாலும் 'பெருமா' என்ற பாடம் கொண்டு உரைவரையப்படுகிறது.

நாட்டிலுள்ள பாட்டுடைத்தலைவர்கள் அளவுபட்ட பொருளுடையரா யிருப்பராதலால் அவர் தம்நிலையறிந்து வருவாயிற் கால்வழங்கி வாழ்வர்; தம் நிலையறியாது வழங்குவராயின், 'உளவரை தூக்காத லொப்புரவாண்மை-வளவரை வல்லைக் கெடும்' என்றபடி மிகுந்த

செல்வமிருந்தாலும் அது விரைந்து கெடும் என்பர். இதன் செல்வம் அன்னதன்று என்பது தோன்றத் 'தன்னிலையறியா' என்கிறது. நிலை என்றது நிற்குமிடத்தையும் செல்வத்தையும் உணர்த்தும். இடப்பெயர் செல்வத்தை யுணர்த்துதல் 'இடனில் பருவத்தும்' என்பதனாலும், நிலையின் பரியாயமாகிய ஸ்திதி என்னும் சொல்லால் உலகிற் செல்வத்தையுணர்த்துதலாலும் அறியலாம்.

இங்கு பரம்பொருளுக்கு, சேதநா சேதனாத்மகமான உபய விபூதிகளும், அந்தராத்மாவாய் நின்று வஸிக்கும் இடமாயும், உடைமையாயும் சொல்லப்பட்டிருத்தலால் அவை அப்பரம்பொருட்குத் தன்னிலையாயின.

இன்னும் தன்னிலை யென்பது உபாஸகர்களுக்குப் பலன் அளித்தற்கு அவர் வழிபட்டொழுகுமாறு தான் அதிஷ்டித்திருக்கும் திவ்யமங்கள விக்ரஹங்களுமாம்.

இனி அவ்வைசுவரியமும் காலமெல்லாம் வேண்டுவார்க்கெல்லாம் வேண்டியவாறே கொடுப்பிற் குறைவுபடாதிருக்குமோ என்னும் ஆசங்கை நீங்க 'அறியா' என்கிறது.

அதாவது காலதேச பரிமாண ஸங்கியாதிகளாலே இஃது இவ்வளவென்று பரிச்சேதித்து ஒருவராலும் அறியமுடியாத என்றபடி. அறியா என்பதற்கு வினைமுதல் சொல்லப்படாமையால் ஒருவராலும் என்பது தானே பெறப்பட்டது. பெறவே ஸர்வேசுவரனாலும் அவ்வாறு அளவிட்டறியப்படாதது அவனுடைய உபயவிபூத்யைசுவரியம் என்பதும், அன்னதே அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹம் என்பதும் கூறியவாறாயிற்று. இது ஐசுவரியபரமான பொருள். இதற்கு, 'தனக்குந்தன்றன்மையறிவரியான்' என்ற திருவாய்மொழியில் நோக்கு.

இனி அநுப்பிரவேசநிலையைச் சொல்லும்போது 'உணர்ந்துணர்ந் துணரிலு **மிறைநிலையுணர்வரிது**' என்ற திருவாய்மொழிப் பொருளில் நோக்கு என்க. 'தன்வலியறியா' என்பது பாடமாயின் அனந்தசக்தி களையுடைய எனப் பொருளுரைத்துக்கொள்க.

'**தொன்மிகு பெருமா**' என்றது அவ் வநுப்பிரவேசநிலையும், உபயவிபூத்யைசுவரியமும் திவ்யமங்கள விக்ரஹங்களும், அநாதி ஸித்தமாயும் ஸர்வவ்யாபகமாயும் உள்ளமகிமையையுடையதாய் என்றவாறு. இங்கேனும் 'பெருமான்' என்னாது 'பெருமா' என்றது ஈறில் பெருமான்* பெருமாவாயிருக்கும் என்னும் சாடூக்தியைத் தோற்றுவித்துக் கொண்டு, அப்பரம்பொருள் அநாதியேயாயினும் பிராகபாவம்போ லழியாது, அனந்தமாயுமிருக்கும் என்னும் பொருள்தோன்ற நின்றது.

தொன்மை - பழமை. அதற்கு மிகுதியாவது அநாதியாதல். பெருமை- வியாபகத்தன்மை. ஐசுவரியத்துக்கு வியாபகத்தன்மையாவது: பிறர் ஐசுவரியங்கள்கீழ்ப்படத் தான் மேற்பட்டுக் குறைவுபடாது நிற்றல். திவ்யமங்களவிக்ரகங்களுக்கு வியாபகத்தன்மையாவது: அடியார் நினைத்தவிடத்தெல்லாம் அவர் நினைத்தவடிவுடையனாய் நிற்றல். அந்தராத்மாவுக்கு வ்யாபகத்தன்மையாவது எல்லாவுயிருள்ளும் தப்பாமேயிருத்தல். அறியா என்னும் செயப்பாட்டுவினைப்பெயரெச்சம் சினைவினைப்பாற்பட்டு மாவென்னும் முதற்பெயர்கொண்டது. ஒருமையாகிய மா என இயையும். இது குறிப்புவினைப்பெயரடுக்கு. மா - மகிமையுடையது. மகிமை - அகடிதகடனாசாமர்த்தியம். அது 'தன்னுளே சகமும் அந்தச் சகத்துளே தானுமாகி' நிற்கும் நிலை. இதுவும் தந்நிலை எனப்படும்.

* 'ஈறில் பெருமான்' - இறுதியில்லாத பெருமான்; இறுதி-பெருமான் என்பதிலுள்ள னகரவொற்று. அது இல்லாதிருப்பது, பெருமா. அது அழிவில் பெருமான் என்பதைச் சாடுவாலுணரநின்றது. சாடூக்தியாலும் பொருளுணர்த்துதலை, "மிடியென்னுங் காரணத்தான் மேன்முறைக் கண்ணே, கடியென்றார் கற்றறிந்தார்" என்பதனா லறிக.

இவற்றால் பரமோதாரசீலமும், கொடுக்கக்குறைவுபடாத மஹைசுவரியமுடைமையும், பலப்ரதானத்துக்கு ஸாந்நித்யமுடைமையும், ஸந்நிஹிதத்வமும் ஒருங்குகூறப்பட்டன.

இனி, வெண்மணற்பரப்பிலே வேரும் வித்து மில்லாமலே நிலைபெற்றிருக்கும் இருப்பு ஒருவராலும் அறியமுடியாத மிகமுதிர்ந்த பெரியமாமரம் என்னும் பொருள்தோன்றக் கூறிய அந்யாபதேசத்துக்கு, பலப்ரதானம் செய்யாநிற்கும் 'வாஸுதேவதரு' என்பது ஸ்வாபதேசமாகும்.

இனி, அப்பரம்பொருள் உயிர்களுக்குப் பலனளிக்குமாறு கூறுகிறது – 'மூவழி முப்பழம் முறைமுறை தருதலின்' என்று.

தருவதாய்நிற்பது 'பெருமா' வாதலால் அதற்கேற்பப் 'பழம்' என்று சொல்லிற்றாயினும், சாதிருசியலக்ஷணையால் அது இங்குப் 'பயனை' உணர்த்தி நின்றது. ஈண்டு '**முறை**' என்பவற்றுள் **முதலது** ஆஜ்ஞா வாசகமாய்ச் **சுருதிஸ்மிருதி**களை யுணர்த்துமாதலால் 'மூவழி' என்பதும் 'முப்பழம்' என்பதும் **சுருதி ஸ்மிருதிகளிற்** சொல்லப்பட்ட உபாயங்களையும், பலன்களையும் குறித்தன.

முறை ஆஜ்ஞாவாசகமாமென்பதை 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன்' (திருக்குறள் 388) என்பதனாலும், **சுருதி ஸ்மிருதி பகவதாஜ்ஞை** என்பதை 'ஸ்ருதி[1]ஸ்ம்ருதீ[1] மமைவாக்ஞா' என்பதனாலும் அறியலாம்.

ஆகவே வழி உபாயவாசகமாதலால், சுருதி ஸ்மிருதிகளில் உபாயமாகச் சொல்லப்பட்ட கர்ம ஜ்ஞான பக்திகள் மூன்றும் 'மூவழி' எனப்பட்டன.

'முப்பழம்' என்றது அவ்வுபாயங்களாகிய கர்ம ஜ்ஞான பக்திகட்குப் பலனாகச் சொல்லப்பட்ட ஐசுவர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகளை உணர்த்துவதாயிற்று.

ஆகவே 'மூவழி முப்பழம் முறைமுறை தருதலின்' என்பதற்குக் கர்ம ஜ்ஞான பக்திகளாகிய மூன்றுபாயங்களின் வாயிலாக, ஐசுவர்யம் கைவல்யம் பகவத்ப்ராப்தி என்னும் மூன்றுபலன்களையும் சுருதிஸ்மிருதி களிற் சொல்லியபடி முறையாகத் தருமிடத்து என்பது பொருளாயிற்று.

முறையாகத்தருதலாவது: கர்மயோகநிஷ்டர்களுக்கு ஐசுவர்ய ப்ராப்தியும், ஜ்ஞானயோகநிஷ்டர்களுக்குக் கைவல்யப்ராப்தியும், பக்தியோகநிஷ்டர்களுக்குப் பகவத்ப்ராப்தியும் பலமாகத் தருதல்.

'தரும்' என விதியாது, 'தருதலின்' என்றதனால், தருதல் ஸித்தமா யுள்ளதென்பது பெறப்பட்டது.

இதனால் நாட்டிலுள்ள பாட்டுடைப் பெருமாக்கள் பலன்தருதல் ஸித்தமில்லையென்பது குறிப்பாயிற்று.

'முறைமுறை' என்றது, முறையிற் சொல்லியமுறை என ஏழாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடராய்நின்றது. முறைதருதல் - முறையானே தருதல்.

இனி, அப்பலன்களின் ப்ரகாரமிருக்கும்படி கூறத்தொடங்கிச் 'சிறப்புடைப்பொருளை முற்படக் கிளத்தல்' என்னும் மரபுபற்றி, ஒரு வரிசையில் முதலும் இறுதியுமாகிய இரண்டும் 'முன்' எனப்படுதலாற் சிறப்புடைய மோக்ஷபலன்களை முற்படுமாறு முதலிலும், இறுதியிலும் வைத்து, அவாந்தரபலமாகிய ஐசுவர்யத்தை இடையில்வைத்து முறைப்படுத்தி, முதலில் பகவத்ப்ராப்திரூபபலம் இருக்கும்படி கூறுகிறது, - 'ஒன்றுண் டொண்சுவை தருவது' என்று.

ஒன்று ஒண்சுவைதருவது உண்டு எனக் கூட்டுக. 'ஒன்று' என்றது இரட்டுறமொழிதலாய் 'ஒன்று, ஒன்று' என்று நின்று, 'அம்மூன்று பலன்களில் ஒன்று ஒப்புயர்வற்றதாய்க் கொண்டு' என்னும் பொருள்பட நின்றது.

'ஒண்சுவை தருவது' என்பது 'நித்ய நிர்த்தோஷமான நிரதிசயாநந்
ரஸாநுபவத்தை அளித்துக்கொண்டு' என்றவாறு.

'உண்டு' என்றது ஸத்தாயிருக்கும் என்றவாறு.

ஒண்மை-நிர்த்தோஷம். பழத்துக்கு ஒண்மையாவது: தோடுப்
நாரும், சக்கையும், கொட்டையும், அற்பஸாரமும், அஸாரமும் ஆ
தோஷங்கள் இல்லாமல் அக்காரக்கனியாயிருத்தல். இது 'அக்கார
கனியே' என்ற திருவாய்மொழி (2-9-8) யில் நோக்குடையதாயிற்று.

இனி, பலத்திற்கு ஒண்மையாவது: நித்யநிர்த்தோஷமாய் (அதாவது
அல்பாஸ்திரத்வாதி தோஷரஹிதமாய்) நிரதிசயமாயிருத்தல். இது
'**சுவையன்** திருவின் மணாளன்' (திருவாய்மொழி 1-9-1) '**கனியார்**
**வீட்டின்பம்**' (திருவாய்மொழி 2-3-5) என்பவற்றைப்பற்றநின்றது.

இனி, ஐசுவர்யரூப பலமிருக்கும்படி கூறுகிறது, – 'மற்றது
கல்லிலெழுந்து கடலிலழுந்தி, அறுகாற்குறவன் நீரறவிளைக்கும், நிரை
பொழிற் குப்பைதருகட்டு' என்று.

மற்றது - மற்றொன்று; அதாவது: அவாந்தரபலமாய் இடைப்
பட்டிருக்கும் ஐசுவர்யபலம் என்றவாறு.

'கல்லி லெழுந்து கடலி லழுந்தி' என்றது 'ஆறிடு மேடும் மடுவும்
போலாம் செல்வம் என்கிறபடியே மலைபோலுயர்ந்தும், கடல்போ
லிழிந்தும் உள்ள ஏற்றந் தாழ்வுடையதாகி என்றவாறு. கல் - மலை.

'அறுகாற் குறவன் நீரற விளைக்கும் நிரைபொழிற் குப்பை
தருகட்டு' என்றது பெரும்பொழுதாகிய ஆறு ருதுகாலங்களையும்
கால்களாகக் கொண்ட காலசக்ரரூபியான காலக்கடவுள் என்னுங் குறவன்,
நீரில்லாமலே பசையற்றுவிடும்படி விளைவிக்கின்ற வரிசையாயுள்ள

சோலைகள்போலும் உலகின் தொகுதிதருகின்ற கட்களிப்புப்போலும் களிப்பளிப்பது என்றவாறு; அதாவது: உலகியலாகிய பொருளின்பங்களால் (இந்த்ரிய விஷயபோகங்களால்) மயக்குறுவிப்பது என்றபடி. 'எழுந்து' 'இழிந்து' என்னும் வினையெச்சத்தொடர் 'தருகட்டு' என்பதிலுள்ள 'தருதல்' வினைகொண்டது. ஐசுவர்யத்தின் உயர்த்திக்கும் தாழ்த்திக்கும் கல்லுங் கடலும் முறையே உவமையாயின.

'அறுகாற் குறவன்' என்றதில், 'கால்' என்பது தந்த்ரோச்சாரணத்தாற் பெரும்பொழுதுகளையும், காலசக்ரத்தையும், காலக்கடவுளையும் உணர்த்தி நின்றது.

'குறவன்' என்றது அக்காலக்கடவுளின் வன்கண்மைதோன்ற நின்றது. இதனை, 'மறவர் குறவர் வன்கணாளர்' என்பதனான் அறிக. காலக்கடவுளுக்கு வன்கண்மையாவது: நல்வினைபுரிந்தோர் பயன் நுகருங்கால் அவ்வினையின் அளவின்றி, அவர் விரும்புமளவு சிறிதேனும் காலம் நீட்டித்தற்கும் துய்த்தற்கும் இடங்கொடாமை. இதனை,

*"தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வ*
*ரீற்றிளம் பெண்டி ராற்றாப் பாலகர்*
*முதியோ ரென்னா னிளையோ ரென்னான்*
*கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப"*

*(சக்கரவாளக்கோட்டமுரைத்த காதை வரி 97 – 100)*

என்னும் மணிமேகலையடிகளாலும் அறியலாம்.

நீரறவிளைத்தலாவது: வினைப்பயன்றுய்ப்பார்க்கு அப்பயன் அவர் வேட்கையினளவு இல்லாமையாலும், உள்ள அளவும் நிலைத்து நில்லாமையாலும், சிறிது நுகருமளவிற் றெவிட்டுதலாலும், துன்பமும் இடையிடையே புகுதரலாலும் அவர் அவ் வைசுவரியத்தில் ருசியறுமாறு பயனளித்தல். நீர்மை-இனிமை. அது நீர் என நின்றது. அன்றி, ரஸ பரியாயமாய் இனிமையுணரநின்றதெனினுமாம்.

கர்மபலபரிபாகத்துக்குக் காலம் காரணமாதலால் அப்பலனை விளைத்தற்கு அக்காலக்கடவுள் வினைமுதலாயிற்று.

'நிரை'- வரிசை. அதாவது பூலோக முதலாக ஒன்றன்மே லொன்றாயுள்ள உலகவரிசைகளும், அதலமுதலாக ஒன்றன்கீழொன்றா யுள்ள உலகவரிசைகளுமாம்.

'பொழில்' என்றது இரட்டுறமொழிதலாற் சோலைகளையும் உலகங்களையும் உணர்த்திற்று. பொழில் உலகங்களையுணர்த்துதல் 'பொழிலேழுமுண்டவெந்தாய்' (2-3-4) என்ற திருவாய்மொழியால் அறிக.

குப்பை - தொகுதி. இது, இங்கு அஸ்வாரஸ்யக்குறிப்பும் உணர நின்றது.

கட்டு - கள்ளையுடையது. இங்குக் 'கள்' என்றது இலக்கணையாற் கட்களிப்புப்போலும் களிப்புணர நின்றது. அது, அர்த்தகாமாநுபவத்தால் உண்டாகிய களிப்பு. இது, அஞ்ஞான ஜனகமாய்ப் "பிறப்புப்பிணி மூப்பிறப்பை" விளைவிப்பதென்றபடி.

இதனால் 'ஒன்றுண் டொண்சுவைதருவது' என்ற மோக்ஷ பலத்துக்கும், ஐசுவரியபலத்திற்கும் காலபரிச்சேதம் முதலியவற்றால் உள்ள வேறுபாடு காட்டப்பட்டது.

இதற்கு,

*"கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை*
*வள்ளல் புகழ்ந்துநும் வாய்மை யிழக்கும் புலவீர்காள்*
*கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல் லாந்தருங் கோதில் என்*
*வள்ளல் மணிவண்ணன் றன்னைக் கவிசொல்லவம்மினோ".*

(திருவாய்மொழி 3-9-5)

என ஆழ்வார் புலவர்களைப் பகவத்விஷயமாகப் பாடும்படி அழைக்கும் பாசுரங்களில் நோக்கு.

இனி, நுவல்பொருட்சிறப்புக் கூறுமிடத்து, இப்பலனைச் சிறிதும் பிறர்கவரவிடாதுகாக்கும் வன்கண்மையோடுகூடிய காலக்கடவுள் நீர் வற்றவிளைவிக்கும், போகபூமி அளிக்கும் அமிர்தபானம் என்க. இது உபலக்ஷணமாதலால் அரம்பைமாதர் கூட்டம் முதலியனவும் பொருளாம். இப்பொருளிற் 'கள்' என்றது லக்ஷிதலக்ஷணையால் அமிர்தத்தை யுணர்த்துகிறது.

'நிரைபொழிற்குப்பை தருகட்பொன்றுவித்து' என்பதே பாடமாயின், 'கட்பு' எனப் பிரித்து அது கள் என்னும் பெயரடியாகப்பிறந்த தொழிற்பெயராய்த் தளிர்ப்பு, பூப்பு, காய்ப்பு என்பனபோலக் 'கள்ளாதல்' என்னும் பொருள்பட நின்றதென்க.

இவ்வாறாக ஐசுவர்யம் இருக்கும்படிகூறி, மேல் எஞ்சிநின்ற கைவல்யபலம் இருக்கும்படிகூறுகிறது, 'ஒன்று வித்தறுகொட்டு' என்று.

'ஒன்று' என்றது முற்கூறிய முப்பழத்துள் எஞ்சிநின்ற கைவல்யமாகிய மோக்ஷபலம் என்றவாறு.

'வித்தறுகொட்டு' என்றது விதையற்றகொட்டையாயிருக்கும் என்றவாறு. அதாவது: விதைத்தாலும் நாறாதவித்துப் (கல்வாழைக் கொட்டை முதலாயின) போலப் பிறப்பிற்குக் காரணமில்லதாயும், கொட்டைக்காய் போலப் பரானுபவமற்றதாயும் ஸத்தாமாத்திரமாயிருக்கும் ஆத்மசுகம் என்றவாறு. வித்தறுகொட்டை என்பதிற் செய்யுள் விகாரத்தால் ஈறுகெட்டு 'வித்தறுகொட்' டென நின்றது. 'வித்தரு கொட்' டென்பது பாடமாயின் அருமை இன்மையுணரநின்ற தென்க.

மற்றது என்று தொடங்கி வித்தறுகொட்டென்னுமளவும் ஐசுவர்ய கைவல்யங்கள் சுருதி, ஸ்மிருதி விஹிதமென்றும், அவை ஸர்வாத்மநா தயாஜ்யமில்லையென்றும், பகவத்ப்ராப்தியை நோக்கத் தாழ்ந்ததென்றும் காரணங்காட்டி நிரூபித்திருத்தலால் அவற்றைக் காற்கடைக் கொண்டது சுருதி ஸ்மிருதி விரோதமாகாதென்று குறிப்பாற் காட்டப்பட்டதாயிற்று. இதுபற்றியன்றே "பழநான்மறையின் வகையுளவாகியவாதுளவாம்" என்று சடகோபரந்தாதி பரிஹஸித்தது.

இவ்வாறாக, புருஷார்த்தங்களிருக்கும்படிகூறி, அப்புருஷார்த்தத்துள், 'ஒன்றுண் டொண்சுவை தருவது' என்று சிறப்பித்துக் கூறப்பட்ட அவ்வொண்சுவையும், அதனை அடைதற்கு வேதத்தில் உபாயமாகச் சொல்லப்பட்ட அத்யந்த ப்ரியரூபமான பக்தியும் உலகத்தார் அறியாதனவாகையாலே, அவற்றின் ஏகதேச ஸாம்யம் உள்ளதாயும் உலகத்தாரால் அறியப்பட்டதாயுமுள்ள காம புருஷார்த்தத்தில் அவ்விரண்டும் சிறிதளவு காணப்படுகையாலே காணப்பட்ட இவற்றைக் கொண்டு காணப்படாத அவற்றை நிரூபிக்கவேண்டி, நிர்த்தோஷமாகு மளவே காம வொழுக்கத்தை ஆரோபித்துப்பாடிய பேரின்பப்பாடல்கள் சிற்றின்பப் பாடல்களின் வேறுபட்டிருக்கும் விஷயவைலக்ஷண்யத்தைக் காட்டத் தொடங்கி, முதலிற் பாட்டுடைத்தலைவனுடைய வைலக்ஷண்யம் காட்டுகிறது - 'ஆமா விளைக்கும் நாடன்' என்று.

ஆமா - அப்படிப்பட்ட மா. அதாவது: 'ஈருயிர்மருங்கின்' என்று தொடங்கித் 'தொன்மிகுபெருமா' என்னுமளவும் சொல்லப்பட்ட அந்தராத்மாவாயுள்ள பரம்பொருள். இது விளைத்தற்கு வினை முதலாய் நின்றது. இங்கு 'அம் மா' எனற்பாலது செய்யுள் விகாரத்தால் அகரச்சுட்டு நீண்டு 'ஆ மா' என நின்றது. இதனை 'ஈபாவம் செய்தருளாலளிப்பாரார்' (திருவாய்மொழி 2-2-2) என்பதனுள் இகரச்சுட்டு நீண்டு நின்றதுபோலக்கொள்க.

'விளைக்கும்' என்றது வேண்டுவார் வேண்டும் பலன்களான முப்போகமும் விளைவிக்கும் என்றவாறு. விளைத்தற்குச் செயப்படு பொருள் சொல்லப்படாமையால் நாட்டிற்கேற்ற செயப்படுபொருள் வருவித்துரைக்கப்பட்டது. ஸ்வபக்ஷத்தில் முப்போகங்கள் ஐசுவர்ய கைவல்ய பகவதனுபவங்கள். 'விளைக்கும்' என்னும் பெயரெச்சம், 'நாடன்' என்னும் பெயருள் நாடு என்னும் இடப்பெயர்கொண்டு முடிய, 'ஆமா விளைக்கும் நாடு' எனப் பாட்டுடைத்தலைவனது நாட்டு வளங்கூறியவாறாயிற்று. அந்நாடு உபயவிபூதிகளுமாம்.

இனி இத்தகைய நாட்டைக்கொண்டு பாட்டுடைத்தலைவனை விசேடிக்கிறது 'ஆமாவிளைக்கும்நாடன்' என்று.

'ஆமா' என்று சுட்டியது வாசுதேவதருவாய்ப்பலப்பிரதானம் செய்யும் பரமாத்மஸ்வரூபமும், 'நாடன்' என்று சுட்டியது 'பேணுங்காற் பேணுமுரு' வாய் அனுபாவ்யமாயிருக்கும் திவ்யமங்கள விக்ரஹ விசிஷ்ட ரூபமும் ஆகிய தர்மபேதமுடைமையால், கூறியது கூறலன்றாயிற்று. இன்னோரன்ன பொருள் வேறுபாடுடைமையால், 'வந்தவந்திடத்தே மிகையுளவாம்' என்பார்கூற்று, மிகையாமென்பது குறிப்பாயிற்று.

'நாடன்' என்பது தந்த்ரோச்சாரணத்தால் நாடன் நாடன் என எழுவாயும் பயனிலையுமாக நின்று ஆமாவிளைக்கும் நாட்டை யுடையோன் பாட்டுடைத்தலைவன் என்னும் பொருள் பயப்பதாயிற்று. பாட்டுடைத் தலைவனை 'நாடன்' என்றது ஏதுப்பெயரானென்க.

இன்னும் அது தந்த்ரோச்சாரணத்தால் நாடன் நாடன் என நின்று ஏதுப்பெயரால் நாடன் ● என்ற பாட்டுடைத்தலைவனே ★ திணை

● ஏதுப்பெயரால் நாடன் என்ற பாட்டுடைத்தலைவன் - பாடுவார்க்குப் பலப்ரதானம் செய்யுமவன்; இவன் பிரபந்த நாயகனாவன்.

★ திணைநிலைப்பெயரால் நாடன் என்ற கிளவித்தலைமகன - பாட்டில் அனுபாவ்யனாகக் கருதப்படும் சிருங்காரநாயகனாவான்.

நிலைப் பெயர் கொண்ட நாடன் என்னும் கிளவித்தலைமகனுமானான் என்னுங் குறிப்புணர்த்துவதாயிற்று.

கிளவித்தலைமகனைப் பொருப்பன், சேர்ப்பன் என்றற் றொடக்கத்துப் பிற திணைநிலைப்பெயராற் கூறாது நாடன் என்று முல்லைத்திணைப் பெயராற் கூறியது அவன் முல்லைநிலத்துக்குரிய திருமால் என்பது குறித்தற்கென்க.

'ஆமா விளைக்கும் நாடன்' என்ற இத்தொடரால் ஆரியத்தமிழ் வழக்கிலும் தண்டமிழ்வழக்கிலு முள்ள பாட்டுடைத்தலைவர்களின் தகுதி வேறுபாடும், கிளவித்தலைமக்களின் தகுதிவேறுபாடும் குறித்துணர்ந்து கொள்ளக் கூறியதாயிற்று.

இனி, இத்தலைமகன் சிற்றின்பத் தண்டமிழ்த்தலைமகனின் வேறுபடுதற்குக் காரணமும், அவனது ஸ்வரூபரூப குணங்களும் தந்த்ரோக்தியாற் கூறுகிறது, 'அவனே தலையிலி' என்று.

'அவனே தலையிலி' என்றது அவனொருவனே எல்லோர்க்கும் தலைவனாயும், தனக்கு மேலான தலைவனில்லாதவனாயுமிருத்தலால் என்றவாறு. அதாவது: கிளவித்தலைமகனில் உயர்ந்த பாட்டுடைத் தலைமகன் பிறனொருவனுமில்லாமையால், அக்கிளவித்தலைமகனே பாட்டுடைத்தலைமகனுமானான்; அதனால் ஒரு குற்றமில்லை என்றபடி.

இதனால், சிற்றின்பப்பாடலிற் கிளவித் தலைமகனினின்றும் உயர்ந்த நிலையுடையோனே பாட்டுடைத்தலைவனாவன் என்ற புலனெறிவழக்கு (கவிமரவு) இத்தலைக்குப் (-பேரின்பப் பாடற்கு) பொருந்தாதென்பது குறிப்பாயிற்று. இது உபலக்ஷணத்தால், 'துறைதோறுந்தொட்டாற் பகையுளவாம்' என்பதனைப் பரிகரித்த வாறாயிற்று.

ஏகாரம் தேற்றமும் பிரிநிலையும் ஒருங்குணரநின்றது.

'தலையிலி' என்பதில் 'தலை' என்பது இலக்கணையால் தலைவனை யுணர்த்திற்று. இலி - இல்லாதவன்.

இனி, இரட்டுறமொழிதலால் ஆரியத்தமிழ்ப் பேரின்பத் தலைமகனது ஸ்வரூப வேறுபாடு கூறுகின்றது, 'தலை யிலி' என்று.

இங்கு 'தலை' யென்றது ப்ராக்ருத சரீரங்களின் ஆண்வடிவைப் புலப்படுக்கும் மீசை தாடியுடைய தலையை. அது ஆணுறுப்புக்கட்கு உபலக்ஷணம். அன்றியும் 'ஸர்வஸ்ய காத்ரஸ்ய சிர: ப்ரதானம்' என்று தலைமைபற்றியவழக்காய் ப்ராக்ருத சரீரங்களையுங் குறித்து நின்றது. இதனாற் சிற்றின்பத் தலைமகனுடைய ஆணுறுப்படங்கலும் குறைபடாதெழுதிக்கொண்டு மடலூர்தல் நாணுடைய பெண்மக்களுக்கு இழுக்காமென் றெண்ணி, பெண்மடல் கூறலாகாதென்ற புலனெறிவழக்கம், அவ்வுறுப்புக்களொன்று மில்லாத அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹ ரூபமுடைய பேரின்பத்தலைமகனுக்கு வடிவெழுதவேண்டாமலே நாணின்றிக் குணசேஷ்டிதங்கள் புலப்படப் பெண்மடல் கூறல் இழுக்கின்றி இயலுமாதலால் இங்குக் குற்றமாகாதென்பது குறிப்பாயிற்று.

இன்னும், 'தலையிலி' என்றது அவன் தனக்கொரு தலைவனையுடையனல்லன் என்பதன் குறிப்பால் அவனே எல்லோர்க்குந் தலைவனாய்நின்று ஆளுந்தன்மையுடையான் ஆனமையால் ஆண்பாலாகத் தலைமகனென ஆரியத்தமிழர் புலனெறி வழக்கஞ்செய்தனர் என்னும் குறிப்பும் உணரநின்றது. இது 'ப$^{1}$தி$^{1}$ம்விச்வஸ்ய' 'ஸஉத்$^{1}$த$^{1}$ம: பு$^{1}$ருஷ:' என்பவற்றைப் பற்றநின்றது. இதனால் சிற்றின்பத் தண்டமிழ்க்கிளவித் தலைமகன் தன்னின் மிக்கோனாகிய பாட்டுடைத்தலைவனைப் பாடற் கண்ணுடையனென்றும் இவன் அத்தகையன் அல்லன் என்றும் இருதலைத்தலைவர்களின் தகவுடைமையாலுள்ள வேறுபாடு காட்டப்பட்டது. இது 'ஆணல்லன்' என்பதில் நோக்குடையதாய் 'மற்றும் பற்றுளவாம்' என்ற காமபுருஷார்த்தத்தின் வேறுபாடுகாட்டி நின்றது.

இவ்வாறு பேரின்பத் தலைமகனின் ஸ்வரூபவேறுபாடுகாட்டி, மேல், பேரின்பத் தலைமகளின் ஸ்வரூப வேறுபாடு காட்டுகிறது 'அவன் மகள் முலையிலி' என்று.

'அவன்மகள்' என்றது "ஸ்த்ரீப்ராயமகிலம் ஜகத்" என்பதுபற்றி அப்பரம்பொருளான தலைமகனுக்குத் தலைமகளாகப் புலனெறிவழக்கம் செய்யப்பட்ட ஆத்மவஸ்து என்றவாறு. இங்கு 'அவன்மகள்' என்றது தந்த்ரோச்சாரணமாய், 'அவன்மகள் அவன்மகள்' எனநின்று உரியோனும் உரிமையுமாகிய கிழமைப்பொருளுடைமையால், அவனுக்குப் பரதந்த்ரமான ஆத்மவஸ்து அவனுக்குத்தலைமகள் எனப்புலனெறி வழக்கஞ் செய்யப்பட்டது என்னும் பொருள் குறிப்பாற்கொள்ள நின்றது.

இது, இன்னும் 'அவன்மகள் அவன்மகள்' என்றதனால் அவனுக்கு முறையான் மகளாயுள்ளாள்; அவன்மாட்டுப் பேரன்புடைமையாற் காதலியாயினாள் என்னும் பொருள்படநின்று, பரம்பொருளுக்கும் ஆத்மவஸ்துவிற்கும் பிதா புத்ர சம்பந்தமும், பர்த்ரு பார்யா சம்பந்தமும் ஒருங்குண்டென்பதும் காட்டப்பட்டது.

இவ்வாறு 'அறியாதனவறிவித்தஅத்தா' (2-3-2) என்ற திருவாய்மொழிப்படி தானாக ஒன்றையும் அறியமாட்டாத ஆத்ம வஸ்துவிற்கு இந்த்ரியாதிகளைக்கொடுத்து உள்ளேநின்று அறிவுமூட்டுதல்பற்றி அப்பரம்பொருள் தந்தை எனப்படுதலால், பிதா புத்ரசம்பந்தமும், 'தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந் தொழிந்தோம்' (2-3-1) என்ற திருவாய்மொழிப்படி போகம்நுகர்தல் பற்றிப் பர்த்ரு பார்யாசம்பந்தமும் உண்டென்பது கண்டுகொள்க.

'முலையிலி' என்றது முலைபோலப் பெண்டன்மைக்குரிய ப்ராக்ருத சரீரவுறுப்புக்கள் ஒன்றுமில்லாத ஆத்மவஸ்து என்றவாறு. இதனால் ஆநுரூப்யம் கூறியவாறாயிற்று.

இன்னும், 'முலையிலி' என்றதனால் "முலையிரண்டுமில்லாதாள் பெண் காமுற்றற்று" (திருக்குறள் - 402) என்று சிற்றின்பக் கூட்டத் துக்கு இகழக்கடவதாயிருக்கும் இவ்வின்மை, பேரின்பக் கூட்டத்துக்குப் புகழக்கடவதாயிருக்குமென்று தலைமகளது உருவவேறுபாடு காட்டி அக்கலவியின் இழிவு ஒழிக்கப்பட்டது.

இங்ஙனம் அத்தலைமகளின் ஸ்வரூபமிருக்கும்படி 'முலையிலி' என்று எதிர்மறைமுகத்தாற் கூறியதுணையே அமையாது, அத்தலைமகளது செயல்கள் இருக்கும்படி கூறுகிறது 'தானுமீனாள் ஈனவும்படாள்' என்று.

இதனுள், 'தான்' என்றது ஆத்மவஸ்துவான தலைமகள் என்றவாறு.

'ஈனாள்' என்றது ப்ரக்ருதிபோலப் பிறிதொன்றைத் தன்னினின்று தோற்றுவிப்பதுமன்று என்றவாறு.

'ஈனவும்படாள்' என்றது விக்ருதிபோலப் பிறிதொன்றினின்றுந் தான் தோன்றியதுமன்று என்றவாறு.

இதனால் தான் ஒன்றைத் தோற்றுவித்தேனும் பிறிதொன்றில் தோன்றியேனும் நிகழும் ப்ரக்ருதி விக்ருதிகளாகிய அசித்வஸ்துக்களின் வேறாமாறுகாட்டி இதன்வடிவு சித்ரூபமாயும் நித்யமாயும் நிர்விகாரமாயும் இருக்குமென்று சிற்றின்பத்தலைமகளினின்று வேறுபட்டிருக்குமிருப்புக் காட்டப்பட்டது.

இதனைச் "சுவையொளியூறோசை" என்னுங் குறளுரையிற் பரிமேலழகர் சாங்கிய நூல்கொண்டு காட்டியவாற்றான் அறிக.

இதன் குறிப்பால், சிற்றின்பத் தலைமகள் அசித்ரூபமாயும் அநித்யமாயும் இருப்பள் என்பது பெறப்பட்டது.

இன்னும், 'தானும் ஈனாள்' என்றது, சிற்றின்பத்தலைமகள்கூட்டம் மகப்பேறுபயக்கும் மெய்யுறுபுணர்ச்சியாயிருக்கும்; இஃது அன்னதன்றி அநந்யப்ரயோஜனமாய்ச் சைதந்யகார்யமான உள்ளப்புணர்ச்சியாயிருக்கும் என்பதும் குறித்துணரநின்றது.

இக்குறிப்புக்கு, "அமரர்க் கமுதீந்த வாயர்கொழுந்தை, அமரவழும்பத்துழாவி யென் ஆவி, அமரத் தழுவிற்று" (1-7-9) என்றும், "கலந்தென் ஆவிநலங்கொள்நாதன்" (1-8-6) என்றும், "எனதாவி தந்தொழிந்தேன்" (2-3-4) என்றும், "தானும் யானுமெல்லாந் தன்னுள்ளேகலந்தொழிந்தோம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே" (2-3-1) என்றும் சொல்லப்படும் திருவாய்மொழிப் பாசுரப் பொருளில் நோக்கு.

இவற்றால் இழிதகவுடைய காமபுருஷார்த்தம் பேசியதன்றென்றும், காமுகவாக்யமன்றென்றும் காட்டியவாறாயிற்று.

இனி, இத்தகையுள்ளப் புணர்ச்சி ஞானானுபவமாகையால் அதனை மடல் கூறல் முதலிய அகப்பொருட்டுறைபற்றிப் பாடவேண்டியதென்? என்னும் சங்கையைப்போக்குகிறது "எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்" என்று.

இதனுள் எழுவர் மூவர் என்றது ஏழும் மூன்றும் பத்து என்றாய், அது பக்தியையுணர்த்தும் ஒரு சங்கேதப்பெயராய் நின்றது. இதனை, 'எட்டினோ டிரண்டெனனுங் கயிற்றினால்' என்ற திருச்சந்தவிருத்தத்துள், எட்டும் இரண்டும் பத்தாய், அது பக்தியை யுணர்த்துதல்போற் கொள்க. 'பத்து என்பது பக்தியையுணர்த்துதல்' 'பத்துடையடியவர்க் கெளியவன்' என்னும் திருவாய்மொழியுட் காண்க.

'சிறுவர்' என்றது ஞானவாசக்மாயிற்று. இதனை, 'செத்தத்தின் வயிற்றிற் சிறியது பிறந்தால்- எத்தைத்தின் றெங்கே கிடக்கும்?' என்ற

மதுரகவியாழ்வார்வினாவின்கண், சிறியது என்றதை ஆழ்வார் தாமே ஜ்ஞானவாசகமாகக் கொண்டு விடையளித்தருளியமையாலும், சித்ஸபை என்பதில் ஞானவாசகமான சித் சப்தத்தைச் சிறுமையின் பகுதியால் மொழிபெயர்த்துச் சிற்றம்பலம் என வழங்குதலாலும் அறியக்கூ வது.

பயத்தல் ஈண்டு அடைதற்பொரு ஞுணரநின்றது.

முன் ஈனாள் என்று சொல்லிப் பின் 'எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்' என்ற இது முரண்விளைந்தழிதல் என்னும் அலங்காரமாயிற்று.

'எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்' என்பதில் 'எழுவர் மூவர்' என்றது பக்தியையும், 'சிறுவர்' என்றது ஜ்ஞானத்தையும் 'பயத்தல்' என்றது பெறுதலையும் உணர்த்துதலால், பக்திரூபமான ஜ்ஞானத்தை அடைந்தாள் என்பது அதன் வாக்யார்த்தமாயிற்று. இதனால், அந்த பகவத் விஷயஜ்ஞானம் அத்யந்தப்ரீதிரூபமானபக்தியாகப் பரிணமித்தமையால் அதன் அவஸ்தாபேதங்களை அகப்பொருள்துறைபற்றிக் கூறவேண்டு வதாயிற்றென்று சங்காபரிகாரம் செய்யப்பட்டதென்க.

'எழுவர் மூவர்' என்றதில், 'பத்து' என்னும் பக்தியை மறைத்துப் பேசுகைக்காக ஏழு, மூன்று என்னும் எண்ணுப் பெயர்கள் கொள்ளப் பட்டன.

அதன் உயர்ச்சி தோற்றுகைக்காக உயர்திணை வாய்பாடுபற்றி எழுவர் மூவர் எனப்பட்டது. சிறுவர் என்ற உயர்திணைவாய்பாடும் அதுபற்றிவந்தது.

பக்தியை மறைத்துப்பேசும் வழக்கினை, "எட்டினோ டிரண்டெனுங் கயிற்றினால்" என்பதனாலும், அஃறிணைப்பொருளை உயர்திணைச் சொல்லால் உயர்த்திப்பேசுகையை "என்னெஞ்சினார்" என்பதனாலும் நாலடியார் திருக்கோவையார் என்பவற்றாலும் காண்க.

இந்தப் பக்திரூபாபந்ந ஜ்ஞானமாகிற பேரன்புடைமையால் சம்ஸ்லேஷ விச்லேஷதெசைகளில் அவ்வன்பின்மிகுதி புலப்படுமாறு மடற்கூற்றளவுமுள்ள அகத்திணைத்துதுறைகளின் வாய்பாடுகொண்டு பெண் பேச்சாகப் பேரின்பப்பாடல்கள் பாடப்பட்டனவென்பது குறிப்பாற் கொள்ளத்தக்கதாயிற்று.

இனி, 'எழுவர் மூவர் சிறுவர்' என்றது, "காட்சி முதலாச் சாக்காடீறாக் - காட்டிய பத்தும் கைவரு மெனினே - மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே" என்றபடி பகவத் வ்யாமோஹத்தால் ஜ்ஞானபரிபாகமான பக்தியின் காரியமாயுள்ள பத்துவித அவஸ்தாபேதங்களை யுணர்த்திற் றென்பதும் ஒன்று.

பத்துவித அவஸ்தைகளாவன:- காட்சி, வேட்கை, ஒருதலை யுள்ளுதல், மெலிதல், ஆக்கஞ்செப்பல், நாணுவரையிறத்தல், நோக்குவவெல்லாம் அவையேபோறல், மறத்தல், மயக்கம், சாக்காடு என்பனவாம்.

இவற்றுட் சாக்காடு விரும்பிய தெய்தப்பெறாதவழிச் சாதற்குரிய நிலைமை. இப்பத்தும் ஆங்காங்குத் திருவாய்மொழியுள் வந்தவழிக் கண்டுகொள்க.

இவ்வாறு பேரின்பப்பாடல்களின் புலனெறிவழக்கை நிரூபித்துத் தோஷபரிஹாரம்பண்ணி, இதனை ப்ராஜ்ஞர்களான புலவர்கள் தெரிந்து உண்மையுணரக்கடவர்கள் என்று முடிக்கிறது 'அவளிவ ளுவளென் றறிதல் - துவளறு காட்சிப் புலவரது கடனே' என்று.

இங்கு 'அவள்' என்றது ஆரியத்தமிழான பேரின்பப்பாடலில், தண்டமிழ்ப் புலவரால் 'துறைதோறுந் தொட்டாற்பகையுள' என்று குற்றங்கூறற் கிலக்காகக்கருதிய புத்திஸ்தையான தலைமகளை. இது சிறப்பியல்பு புலப்படாத ஐயநிலைக்களமாய் நின்றது.

'இவள்' என்றது 'அவன் மகள்' என்று தொடங்கிச் சிறுவரைப் பயந்தனள் என்னுமளவும் சிறப்பியல்பு புலப்படநின்ற ஒருதலையுணர் வுக்கிலக்காகிய பேரின்பப்பாடற் றலைமகளை. 'என்று' என்னும் இடைச்சொல்லை ஈண்டும் கூட்டி அவள் இவளென்று அறிதல் என்க. ஈண்டு அறிதலாவது அறிந்து சாதுவெனக்கொள்ளுதல்.

'உவள்' என்றது அவ்வையநிலைக்களத்தின் மறுதலையுணர்வுக் கிலக்காகிய தண்டமிழ்ப்பாடற் றலைமகளை. அவள் உவளென்று அறிதல் எனக்கூட்டுக. அறிதல் - உண்மையான் ஒருதலைதுணிதல். அதாவது : இவள் என்றறிந்து தகும் எனக்கொள்ளுதல், உவள் என்றறிந்து தகாதெனக்கொள்ளுதல் ஆகிய இவ்விரண்டனுள் உண்மையான் ஒருதலை துணிதல் என்றபடி.

'துவளறு காட்சிப் புலவரது கடனே' என்றது ஐயந்திரிவறக்கற்ற நல்லறிவுடைய புலவரது கடமை என்றவாறு. காட்சி-அறிவு. அதற்குத் துவட்சியாவது வலியின்மை; அது ஐயமும் திரிவும் ஆம். கடன்— தாந்தாமே தமக்காகச் செய்து தீர்க்கக்கடவது.

"இனி அவளிவளுவள்" என்பதனுள் அவள் என்றது 'அவன் மகள்' என்று தொடங்கிப் 'பயந்தனள்' என்னுமளவும் சொல்லப்பட்ட இலக்கணங்களமைந்தவள் என்றும், இவள் என்றது ஸ்வபக்ஷத்துக்குரிய பேரின்பப்பாடற் றலைமகள் என்றும், உவள் என்றது இப்பேரின்பத் தலைமகளின் வேறாய்ப் பரபக்ஷத்துக்குரிய சிற்றின்பத் தலைமகள் என்றும் கொண்டு பொருள்கூறினும் அமையும்.

இனி இப்பாட்டின் நிகமனப்பொருள் வருமாறு:- ஜகத்காரண பூதனான ஸர்வேசுவரன் தன் கருணையாலே சேதனர்களைச் சிருஷ்டித்து அவர்களுக்கு அந்தராத்மாவாயிருந்து நிர்ஹேதுகமாகவே உபய விபூத்யைசுவரியங்களையும் வேண்டுவோர் வேண்டியவாறே தானே

அளிக்கும் பரமோதாரனாய் நின்று, அவரவர் அதிகாராநுகுணமாக ஸ்வரூபதர்மமாய் அனுஷ்டிக்கும்படி சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்ம ஜ்ஞான பக்திகளை அவலம்பித்து அவற்றிற்கு அநுகுணமான ஐசுவர்ய கைவல்ய பகவத்ப்ராப்திரூப பலங்களை அளிக்குமவற்றுள், பகவத்ப்ராப்திரூபபலமே சிறந்ததாயுள்ளது; அதனை அனுபவித்தற்கும் அடைதற்கும் அத்யந்த ப்ரீதிகாரித கைங்கர்யரூபமாயும் போகமாயும் உள்ள பக்தியோகாநுஷ்டானம் செய்யவேண்டுகையாலே, போகரூபமா யுள்ள அத்யந்தப்ரீதி நிரூபணம் பண்ணுகைக்கு இவ்வுலகில் நாயக நாயகி சம்பந்தம்போலே, சிறிதளவேனும் பிறிதொன்றும் காணப் படாமையாலே அதனை ஆஸ்தானம்பண்ணியனுபவிக்கும் பகவதனுபவ மானது ப்ராக்ருத நாயக நாயகிகளின் லௌகிகானுபவம் போலன்றி நிர்த்தோஷமாயும் விலக்ஷணமாயும் இருக்குமாகையால் அது அநிந்தித மாகுமென்று ப்ராஜ்ஞர்கள் அறிந்துகொள்ளவேண்டுமென்றதாயிற்று.

இவ்வாறு இதன் உரை எளியேன் அறிந்த அளவில் எழுதப்பட்டது. இதன்மேலும் தக்காரும் மிக்காருமாகிய பெரியார் ஆராய்ந்து கூறப்புகுவாராயின் ஆரியத் தமிழ்வழக்கில் அறியவேண்டிய பொரு ளெல்லாம் இதன்கண்ணே அமையுமாறு மிகவும் விரித்துரைத்தற்கு இடனுடைத்தாயிருக்குமென்றெண்ணுகிறேன்.

இதன்கண்ணுள்ள "குற்றங்களைந்து குறைபெய்து வாசித்தல், கற்றறிந்தமாந்தர் கடன்".

இனி, இப்பாட்டில் அமைந்திருப்பனவாகச் சொல்லப்பட்ட நூன் மரபுகளுள் **நாற்பொருட்பயன் வருமாறு** :-

'மூவழிமுப்பழமுறைமுறைதருதலின்' என்பதன்கண் கர்மயோக நிஷ்டர்களுக்கு ஐசுவர்யபுருஷார்த்தம் சொல்லப்பட்டமையால், கர்மயோக

அநுஷ்டானத்தால் **அறமும்**, ஐசுவரியத்தால் **பொருளும் இன்பமும்** சொல்லப்பட்டன. ஜ்ஞானயோக பக்தியயோக நிஷ்டர்களுக்குக் கைவல்ய பகவத் ப்ராப்திகளாகிய புருஷார்த்தம் சொல்லப்பட்டமையால் **வீடுபேறு** கூறப்பட்டது. ஆக நாற்பொருட்பயனும் கூறப்பட்டமை காண்க.

**இனி எழுவகைமதமும் அமைந்திருக்குமாறு :-**

(1) இப்பேரின்பப்பாடல்களை அகப்பொருட்டுறை வாய்பாட்டால் இறைவனையும் உயிரையும் தலைமகனும் தலைமகளுமாக நாட்டிக் கூறுதல் அகப்பொருள் வழக்கிற்கு **உடன்படல்** என்னும் மதம்.

(2) பெண்மடல் கூறல் ஆகும் என்பது தோன்ற, இரட்டுற மொழிதலால் 'அவனே தலையிலி' என்றதும், 'எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்' என்றதும் குறிப்பால், பெண்மடல் கூறலாகாதென்பாரை மறுத்தலால் **மறுத்தல்** என்னும் மதமாயிற்று.

(3) பாட்டுடைத்தலைவன் கிளவித்தலைமகனில் உயர்ந்தவனா யிருக்கவேண்டுமென்பது பிறர்தம்மதம்; அதனை மேற்கொண்டு, மானிடம்பாடாத பேரின்பப்பாடலில் அத்தகைய தலைவன் பிற னொருவனில்லாமையால் அது கூடாதாயிற்று என்பது தோன்ற 'அவனே தலையிலி' என்று களைந்தமையால் இது **பிறர்தம்மதம் மேற்கொண்டுகளைதல்** என்னும் மதமாயிற்று.

(4) ஆணும் பெண்ணுமாகாத இறையையும், உயிரையும் முறையே ஆணும் பெண்ணுமாமாறு 'அவன்' என்றும் 'மகள்' என்றும் கூறி நாட்டியது **தாஅனாட்டித் தனாதுநிறுப்பு** என்னும் மதமாயிற்று.

(5) கைவல்யம், பகவத்ப்ராப்தி என்னும் மோக்ஷபலம் இரண்டனுள் 'ஒன்றுண்டொண்சுவை தருவது' என்று பகவத்ப்ராப்தியைத் துணிந்தது **இருவர்மாறுகோளொருதலைதுணிதல்** என்னும் மதமாயிற்று.

(6) அறம் பொரு ளின்ப நூல்களுக்குரிய ஐசுவர்யபலத்தை 'அறுகாற்குறவன் நீரறவிளைக்கும் நிரைபொழிற்குப்பை தருகட்டு' என்றதனால் அது காலபரிச்சேதமாய் அநித்யமாய் அஜ்ஞானஜனகமாய்ப் பிறப்புக்கு ஏதுவாமென்று கூறினமையாற் **பிறநூற்குற்றங்காட்டல்** என்னும் மதமாயிற்று.

(7) பொருப்பன் சேர்ப்பன் என்னாது 'நாடன்' என்ற குறிப்பால், முல்லைநிலத்துக்குரிய திருமாலே தலைவன் என்பது தோன்றக் கூறியது **பிறிதொடுபடாஅன் றன்மதங்கொளல்** என்னும் மதமாயிற்று.

**இனிப் பத்தழகும் வருமாறு:—**

சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகும் இப்பாட்டு முழுதும் காணலாம். 'மூவழி முப்பழ முறை முறை தருதலின்' என்ற இவ்வோரடி யுள்ளும் காணலாம்.

(1) இது **சுருங்கச்சொல்லல்** என்பதனை இதன் உரைவிரிவு நோக்கி யுணர்க.

(2) 'நாடன்', 'அவன்' என்பவற்றால் 'ஒருமை' 'பெருமா' என்பவையும், ஒருவன் பெருமான் என விளங்கக் கூறினமையால் **விளங்கவைத்தலா**யிற்று.

(3) பாட்டுமுழுதும் சொல்வகையாலும் பொருள்வகையாலும் சொற்சுவை பொருட்சுவைபெறத் தொடுத்திருத்தலால் **நவின்றோர்க் கினிமை**யுடையதாயிற்று. (செவிக்கினிய செஞ்சொல்லாற்றொடுத் தமையால், சொற்சுவையுடையதாயிற்று. வியப்பு முதலிய சுவைகள் தோன்றலாற் பொருட்சுவையுடையதாயிற்று).

(4) இலக்கணவழுவில்லாத மொழிகள் புணர்க்கப்பட்டமையால் **நன்மொழிபுணர்த்த**லாயிற்று.

(5) அடிதொடையோசைவழுவாமையால் **ஓசையுடையதாயிற்று.**

(6) குறிப்பிற் பொருள்தோன்ற நிற்றலால் **ஆழமுடையதாயிற்று.**

(7) **முறையின்வைப்பு** இப்பாட்டுரையின் அவதாரிகைகளை நோக்கி யுணரத்தக்கது.

(8) வைதிகசமயத்தின் மாறுபடாத சான்றோர் வழக்கொடு பொருந்துதலால் **உலகமலையாமையாயிற்று.**

(9) ஆரியத்தமிழ்வழக்குக் குற்றமற்றதென்று காட்டினமையால் **விழுமியதுபயத்தலாயிற்று.**

(10) 'நித்திலத்தன்ன' என உயிரையும் 'கல்லிலெழுந்து கடலிலழுந்தி' எனச் செல்வத்தின் ஏற்றிழிவையும் 'வித்தறுகொட்டை' யெனக் கைவல்யத்தையும், 'கட்டு' எனப் பொருளின்பத்தையும் உதாரணவாய்பாட்டாற் காட்டினமையால் **விளங்குதாரணத்ததாயிற்று.**

**இனி உத்திகள் வருமாறு:–**

(1) **ஒத்துமுறை வைப்பு:–** பாட்டு முழுவதும்; அதிகார முறைமை கூறியவாற்றான் அறியத்தக்கது.

(2) **தொகுத்துச் சுட்டல்:–** 'மூவழி முப்பழ முறை முறை தருதலின்' என உபாயங்களையும் பலன்களையும் மூன்றென்னு மெண்ணாற் றொகுத்துக்கூறல்.

(3) **வகுத்துக் காட்டல்:–** 'முப்பழம்' என்ற தொகையை 'ஒன்றுண்டொண்சுவை தருவது' என்றும், 'மற்றது . . . கட்டு' என்றும், 'ஒன்று வித்தறுகொட்டு' என்றும் வகுத்துரைத்தல்.

(4) **முடிவிடங்கூறல்:–** 'முறைமுறை தருதலின்' என்றதில் முறையிற் சொல்லியமுறை என அம்முறைக்கு வேதத்தை முடிவிடமாகக் கூறல்.

(5) **தானெடுத்து மொழிதல்:–** 'ஈருயிர்' என்று ஸ்தூலப்ரக்ருதியைச் சொல்லியதும் 'மணல்' என்று உயிர்களைச்சுட்டியதும் மரபின்வழிவாராது தானே எடுத்துமொழிந்தமையால் தானெடுத்து மொழிதலாயிற்று.

(6) **பிறன்கோட் கூறல்:–** 'தானுமீனாள் ஈனவும் படாள்' என்றது சாங்க்யநூலுட் கூறியவாறு கூறினமையாற் பிறன்கோட் கூறலாயிற்று

(7) **சொற்பொருள் விரித்தல்:–** 'நாடன்' என்றதில் நாட்டையுடையோன் நாடன் எனச் சொற்பொருள் விரித்து, நாட்டையுடையோனான பாட்டுடைத்தலைமகன் எனக் கொள்ளப் புணர்த்தமையாற் சொற்பொருள்விரித்தாலாயிற்று.

(8) **தொடர்ச்சொற்புணர்த்தல்:–** "அண்டகோளத்தாரணுவாகி, ஆருயிர்தொகுத்து, வெண்மணற்பரப்பில் தானே நிற்கும் தன்னிலையறியாத்தொன்மிகு பெருமாவாய்த் தருதலின்" என, பலதொடராகற்பாலவாய தொடர்ச்சொற்களை ஒருதொடராகப் புணர்த்தலாற் றொடர்ச்சொற் புணர்த்தலாயிற்று.

(9) **இரட்டுறமொழிதல்:–** 'பூத்த', 'நாடன்', 'மகள்' என்றற்றொடக்கத்தன இருபொருளுணர்த்த மொழிந்தமையால் இரட்டுற மொழிதலாயிற்று.

(10) **ஏதுவின் முடித்தல்:–** 'ஒன்றுண் டொண்சுவை தருவது' என்றதற்கு ஐசுவரியம் காலபரிச்சேதமுடையதாய்ப் பிறப்பிற்கேதுவாயிருத்தலும், கைவல்யம் சுவையற்றதாயிருத்தலும் ஏதுவாமாறு காட்டினமையால் ஏதுவின் முடித்தலாயிற்று. 'தலையிலி' என்றதும் அது.

(11) **ஒப்பின் முடித்தல்:–** 'ஒன்று வித்தறுகொட்டு' என்று கைவல்யத்தைப் பிறவாமையுடைமை யொப்புமையால் ஈண்டு உடன் கூறியது ஒப்பின் முடித்தலாயிற்று.

(12) **மாட்டெறிந்தொழுகல்:–** 'அவன், 'மகள்' என்று தலைமகனும் தலைமகளுமாக அகப்பொருட் புலனெறி வழக்கினை வேண்டுமளவு மாட்டேற்றிச் சென்றது மாட்டெறிந்தொழுகலாயிற்று.

(13) **எதிரது போற்றல்:–** 'மூவழி' என்றது பின்வரக்கடவதாய் நின்ற 'முறை' என்பதைப் போற்றிக்கொண்டதனால் இது எதிரது போற்றலாயிற்று.

(14) **முன்மொழிந்து கோடல்:–** 'மூவழி முப்பழம்' என்று முன்மொழிந்துகொண்டு பின்பு ஒன்றுண் டொண்சுவை தருவது', மற்றது கட்டு', 'ஒன்று கொட்டு' என அப்பழத்தையே கொள்ளுதலால் முன்மொழிந்துகோட லாயிற்று.

(15) **பின்னது நிறுத்தல்:–** 'மூவழி' என்பதற்கு முன்னமே அவ்வழி இவை எனச்சொல்லாது பின்கூறியது, பின்னதுநிறுத்தலென்னும் உத்தியாயிற்று. 'முப்பழம்' என்பதற்கும் இஃதொக்கும்.

(16) **ஒருதலை துணிதல்:–** மோக்ஷபலம் இரண்டனுள், 'ஒன்றுண் டொண்சுவை தருவது' எனத் தமக்கிஷ்டமுள்ளதாக ஒன்றைத் துணிந்தது ஒருதலைதுணித லாயிற்று.

(17) **எடுத்துக்காட்டல்:–** 'கல்லிலெழுந்து கடலிலழுந்தி' என்று ஐசுவர்யத்தின் ஏற்றம் தாழ்வுகளுக்கு உதாரணங்காட்டினமையான் எடுத்துக்காட்டலாயிற்று.

(18) **விகற்பத்தின் முடித்தல்:–** 'அவன்மகள் முலையிலி' என்று தொடங்கிப் 'பயந்தனள்' என்னுமளவும், கூற்றால் பேரின்பத்

தலைமகளியல்பும், குறிப்பாற் சிற்றின்பத் தலைமகளியல்பும் கொள்ளக்கூறி 'இவள்' 'உவள்' என்று சுட்டினமையால் விகற்பத்தின் முடித்தலாயிற்று.

(19) **முடிந்தது முடித்தல்:—** கூற்றானும் குறிப்பானும் கூறி முடிந்த அத்தலைமகள் இருவரையும் 'இவள்' 'உவள்' என்று சுட்டியது முடிந்தது முடித்தலாயிற்று.

(20) **உய்த்துணரவைத்தல் :—** பெரும்பாலும் பாட்டு முழுதும் உள்ளது. 'ஆருயிர்' என்றதனால் 'போகம்' என்பதும், 'தொகுத்து' என்றதனால் தனுகரணபுவனங்களுடன் என்பதும் உய்த்துணர்ந்து கூட்டிமுடிக்குமாறு புணர்த்தமையால் இவை உய்த்துணரவைத்தல் என்னும் உத்தியாயிற்று.

**இனி, கவிமரபுவகை வருமாறு:-**

(1) **தந்த்ரோக்தி:—** 'அறுகாற் குறவன்' என்றதனால் தோன்றிய வன்கண்மையைப் புகழ்பொருளின் இகழ்ச்சிக்கும் புகழ்ச்சிக்கும் உரியதாமாறு புணர்த்தது. இஃதிரட்டுறமொழிதலின் வேறாதலை அதனுரையிற் காண்க.

(2) **ரஸோக்தி:—** சுவையணி தோன்றக்கூறுவது. 'அவனே தலையிலி' 'அவன் மகள் முலையிலி' 'தானும் ஈனாள்' 'ஈனவும் படாள் (வியப்பு) என்பன காண்க.

(3) **சித்ரோக்தி:—** 'அறுகாற் குறவன்' என்று (அற்றகாலையுடைய குறவன் எனத் தோன்றுமாறு) கூறியது.

(4) **கூடோக்தி:—** 'எழுவர் மூவர் சிறுவர்' எனக் கருதியபொருளை மறைத்துப் பேசியது.

(5) **வக்ரோக்தி:–** பத்தென நேரே கூறாது ஏழும் மூன்றும் பத்தென்று கொள்ளுமாறு சுற்றுவழியாற் கொள்ளக்கூறுதல்.

(6) **விஷமோக்தி:–** 'கல்லிலெழுந்து கடலிலழுந்தி' (அதாவது: அப்பழம் கல்லிலெறிந்தாற் பந்துபோல் எழுந்துசெல்லும், கடலிற் கற்போல் அழுந்தும்) என விபரீதப்படக்கூறியது.

(7) **லோகோக்தி:–** பயனடைதல் உண்டோ? இல்லையோ? என்பதற்குப் பழமோ? காயோ? என்பது லோகோக்தி. அது இங்கு 'மூவழி முப்பழம்' எனப்பட்டது. 'ஈருயிர்' (கெர்ப்பிணி) என்பதும், அது.

இன்னும் இவ்வாறே பிற தொனிகளையும் அணிகளையும் ஸ்வாபதேசப்பொருள், அந்நியாபதேசப்பொருள் முதலியவற்றையும், பிறவற்றையும் ஆங்காங்குள்ளவாறு உய்த்துணர்ந்துகொள்க. அவையெல்லாம் ஈண்டு விரிக்கிற் பெருகும்.

# ஓரையம்.

நம்மாழ்வார் காலத்தையாராயும்போது, நேரும் நெருக்கடியான சந்தர்ப்பங்களில் குருபரம்பரையாதிகளில்வரும் அவரைப்பற்றிய சங்க நிகழ்ச்சி சந்தர்ப்பமுமொன்றாகும். அதாவது, ஆழ்வார் பரமபதம் அடைந்ததன்பின்னர் அவரது நற்பெருஞ்சீடராகிய மதுரகவியார் அவர்பொருட்டு விருதுமுதலிய பிடித்துப்பெருமையுடன் சென்றாராகவும், சங்கத்தார் ஆழ்வார்தம் பாடலாகிய திருவாய்மொழி சங்கமேறிய நூலொன்றன்றாகலின், அங்ஙனம் செல்லல்கூடாது என்று தடுத்ததாகவும், பின்னர் ஆழ்வார் மதுரகவியார்க்கு, "கண்ணன்கழலிணை ...."★ என்ற பாசுரம் எடுத்துக்கொடுத்தருளினாராகவும், அவர் அதனைச் சங்கப்பலகையில் இட, ஆண்டுக்குழுமியிருந்த புலவர்களெல்லாம் பொற்றாமரைக்குளத்தில் விழுந்தனராகவும், அப்பலகை அப்பாசுர மொன்றினையே ஏந்திநின்றதாகவும், அதுகண்ட சங்கப்புலவரெல்லாம் ஆழ்வாரைப் புகழ்ந்து அவரது திருவாய்மொழியை நனிவியந்து பாராட்டுப் பாடல் பல பாடினராகவும் என்பது●. நடுவுநிலைமை பிறழாத எமது ஆராய்ச்சிக்கு இது இடந்தரவில்லை. இவ்வரலாறு இடைச்செருகல் என்று சில வித்வாம்ஸர் ஓதுக்குகின்றனர். திரு. M.**சீனிவாச அய்யங்கார்** அவர்கள் இதனைக்கொள்ளவில்லை; திரு. டாக்டர். **S.கிருஷ்ணசாமி அய்யங்கார்** அவர்களும் இதனை ஆதரிக்கவில்லை; பண்டிதர். **மு. இராகவையங்கார்** அவர்களும் இதனைப்போற்றவில்லையென்று தெரிகிறது. பந்தர்க்கர் இதனைச் சிறிதேனும் ஒப்பவில்லை.

இது சம்பந்தமான ஆராய்ச்சி எமக்கு நிகழும்போது சில வைணவப்புலவர்களை யாம் கலக்கநேரிட்டது. அன்னோர் தமது பழைய

★ திருவாய்மொழி: 10.5.1.

● இதனை அரிசமயதீபநூலாசிரியர் கொள்ளவில்லை. பன்னீராயிரப்படி மணிப்ரவாள குருபரம்பராப்ரபாவமும் செய்யுட் குருபரம்பரையும், குருபரம்பரைப் புராணமும் கூறுகின்றன.

வைதீகப்பிடிவாதக் கொள்கையைமட்டில எடுத்துக்கூறுகிறார்களேயன்றி ஆராய்ச்சிமுறையிற் கூறவில்லை. ஆனால், அவர்களுள் ஒருவர் கீழ்க்கண்ட அகவற்பாவை எம்மிடம் படித்துக்காட்டி அதற்குப்பொருள் யாதாயிருக்கலாமென்று கேட்டனர். இதன்பொருள் உண்மையில் எமக்குவிளங்கவில்லை; அவர் தமக்கும் விளங்கவில்லையென்றார். இவ்வகவற்பா தோன்றிய வரலாறென்னையென்று யான் கேட்க, அவர் சங்கத்தார் தமது விழாவைத் தடுத்தலைக்கண்டு அன்னோர்க்குத் தன்பெருமையை அறிவுறுத்தல்வேண்டி நம்மாழ்வார், மதுரகவியார்க்கு அவரதுயோகநிலையில் இதனை அறிவித்தருள, அவரும் இதனைச் சங்கத்தார்க்குத் தெரிவித்தனர் என்று திருக்குருகூரில் பழைய நாள்தொட்டுவந்த வைணவவித்வபரம்பரையிலொருவர் வைணவப் புலவரொருவர்க்குச் ★ சொன்னார் என்றார். இது எத்துணை மெய்யோ அது எமதுசிற்றறிவிற்கு எட்டவில்லை. இதன் நடை மட்டில் பெரும்பாலும் பழைய சங்கச்செய்யுணடையை ஒட்டியுளது. இதைப்பார்த்தவுடன் எமக்குப் பெருத்த சந்தேகம் உண்டாய்விட்டது. அதனால் எமது நம்மாழ்வார் வரலாற்றின் காலவாராய்ச்சி மேற்செல்லாமல் தடைபடுகின்றது.

ஆதலாலே, இவ்வாசிரியப்பாவின் வரலாறு, இது எந்தநூலில் உள்ளது, இதனைப்பற்றிய விஷயம், இதனை ஆழ்வார் செய்துகொடுத்தாரென்பது மெய்யா பொய்யா, இதன்பொருள் ஆகியவற்றைப் பத்திரிகாசிரியரேனும், அல்லது பிறசெந்தமிழ் ஆராய்ச்சிப் புலவர்களேனும் தயவுசெய்து ஆராய்ந்து எமக்குக் கடிதமூலமேனும் இப்பத்திரிகை மூலமேனும் தெரிவித்து எமதையத்தைக்களைய வேண்டுமாய்ப் பெரிதும் வணங்கிக் கேட்டுக்கொள்கிறோம்:-

★ புவனகிரி : பிரபன்னவித்வான - ஸ்ரீமான் அழகியமணவாள இராமாநுஜ ஏகாங்கி ஸ்வாமிகள்.

ஸ்ரீ:

"அண்ட கோளத் தாரணு வாகிப்
பிண்டம் பூத்த பேரெழி லொருமை
ஈருயிர் மருங்கி னாரியர் தொகுத்து
நித்திலத் தன்ன வெண்மணல் பரப்பி
வேரும் வித்து மின்றித் தானே
தன்னிலை யறியாத் தொன்மிகு பெருமரப்
மூவழி முப்பழம் முறைமுறை தருதலின்
ஒன்றுண் டொண்சுவை தருவது; மற்றது
கல்லி லெழுந்து கடலி லழுந்தி
அறுகாற் குரவ னீரற விளைக்கு
நிரைபொழிற் குப்பை தறுகட் பொன்றுவித்
தறுகோட் டாமா விளைக்கு நாடன்;
அவனே தலையிலி அவன்மகள் முலையில
தானு மீனா ளீனவும் படாஅள்;
எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்;
அவளிவ ளுவளென் றறித
றுவளறு காட்சிப் புலவரது கடனே!"
(இது நம்மாழ்வார் சங்கத்தார்க்கு அருளிச்

இராமகிருஷ்ணசடகே

# ஸ்ரீதேசிக ப்ரபந்தம்*

ஸ்ரீ :

ஆழ்வார் எம்பெருமானார் திருவடிகளே சரணம்

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகாய நம:

மஹநீயரான ஸபாநாயகருக்கும் வித்வதக்ரகண்யர்களான ஸ்வாமிகளுக்கும் ஸபையோருக்கும் ப்ரணாம பூர்வக விஜ்ஞாபநம். இந்த தேசிக பக்த ஸபையின் ஸம்வத்ஸர மஹோத்ஸவத்தில் அடியேனையும் ஒரு பொருட்படுத்தி, **தேசிக ப்ரபந்தம்** என்னும் விஷயமாக கிஞ்சித் வாசிக கைங்கர்யம் செய்யவேண்டுமென்று நியமித்தார்கள். அப்படி நியமித்த 'ஸ்வாமிகளின் அத்யந்த ப்ரீதி பரவசனாய் அடியேனுக்குள்ள அஜ்ஞதையையும் அசக்தியையும் எண்ணாமலே 'குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத் தாம் புரண்டிட்டோடித் தரங்கநீ ரடைக்கலுற்ற சலமிலா அணிலம் போலும்' என்கிற கணக்காகவே ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்டி எம்பெருமானை அடைவதற்காக வேத வேதாந்த பர்வத ராசிகளால் ஸ்வாமிகள் கட்டும் திருவணையாகிய ப்ரவசநங்களினிடையே அடியேன் புன்சொற்களாகிய மணலை இட்டு நிரப்பப்புகுவதை க்ருபையோடு திருவுள்ளம்பற்றவேணுமென்று ப்ரார்த்திக்கிறேன். அன்றியும் மக்ஷி கோச்சிஷ்டதுஷ்டமென்று மதுவைப் பரித்யஜிக்காமல் வஸ்து ஸ்வபாவ பரிசுத்தியாலே பரிக்ரஹிப்பது போலே அஜ்ஞாந தோஷ தூஷிதமான அடியேனுடைய சொற்களையும் **தேசிக ப்ரபந்தம்** என்னும் விஷய வைலக்ஷண்யத்தைக் கொண்டு திருவுள்ளம்பற்றவேணுமென்றும், இப்போது பூர்வபாவியாயும் நிரர்த்தகமாயும் இருக்கும் அடியேன்

* இந்த வ்யாஸம் மதுரை ஸ்ரீ வேதாந்ததேசிகபக்த ஸபை மூன்றாவது வார்ஷிகமஹோத்ஸவத்தில் செய்யப்பட்ட உபந்யாஸம்.

சொல்லும் சொற்களையெல்லாம் ஸ்வாமிகளின் ப்ரவசநங்களாகிற இந்த மஹோத்ஸவ வைபவத்துக்கு பூர்வ பாவியாயிருந்து புறப்பாடுஸேவிக்கும் பேரீபடஹத்வநிரூபமாகத் திருவுள்ளம்பற்றவேண்டுமென்றும் ப்ரார்த்தித்துக் கொண்டு யதாமதி விஜ்ஞாபிக்கிறேன்.

அடியேன் சொல்லப்புகுவது **தேசிகப்ரபந்தம்** என்னும் விஷயம். தத்ப்ரபந்தகர்த்தாவான ஸ்ரீ நிகமாந்த மஹா தேசிகனுடைய ப்ரபாவங்களும் அவர் செய்தருளிய க்ரந்த ஸமூஹங்களின் வைபவங்களும் ஜகத் ப்ரஸித்தமாயுள்ளன. அப்படி இருந்தும் ஒருசிலர் ஸ்வாமிக்குத் தமிழ்வருமோ என்றும், வேறு சிலர் ஸ்வாமி தமிழிலும் ப்ரபந்தம் ஸாதித்திருக்கிறரோ என்றும், மற்றும் சிலர் தேசிகப்ரபந்தம் ஸ்வாமிசெய்ததுதானோ என்றும் சங்கிக்கிறார்களாம். அவர்களெல்லாரும் ஸ்வாமி ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர் என்றதற்கான ப்ரபாவங்களையெல்லாம் விசதமாய் அறிந்திருப்பார்களானால் அப்படி சங்கிக்கவேமாட்டார்கள். இது நிற்க.

ஆழ்வார்களருளிச் செய்த திவ்யப்பரந்தங்களிருக்கும் போது அவற்றிலுள்ளவற்றையே சொல்வதானாலும், இல்லாதவற்றைச் சொல்வதானாலும் ஸ்வாமி தேசிக ப்ரபந்தம் ஸாதித்தது நிஷ்ப்ரயோஜநமாகுமாகையால் க்ரந்தாரம்பஸாமர்த்யமில்லை என்ற சங்கை உண்டாகலாம். இந்த சங்கை ஸமாதானத்தால் ஸித்தாந்தத்தை த்ருடீகரிக்கச் செய்வதால் அநுகூலமானதே.

ஆதியில் வேதராசிகளே உள்ளன. காலக்ரமத்தில் சேதநர்களுக்கு ஜ்ஞாநபௌஷ்கல்யம் குறைந்து கொண்டே வந்தமையால் அவ் வேதார்த்தங்களை விசதீகரிக்கவேண்டிய வேதோபப்ரும்மணங்களான ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களை மஹர்ஷிகள் வெளியிட்டருளினார்கள். ஒவ்வொரு உத்க்ரந்தங்களும் தோன்றும் காலங்களில் வ்யாக்யானாபேக்ஷையில்லாமலே அவற்றை அதிகரித்துவந்திருக்கிறார்கள். அந்த

க்ரமத்திலே ஆழ்வார் ஸாதித்தருளிய திருவாய்மொழியின் பாசுரார்த்தங்களையெல்லாம் மதுரகவிகள் முதலான ஆழ்வார்களெல்லோரும் தங்களுக்குள்ள ஜ்ஞானப்பெருக்காலே வ்யாக்யாநாபேக்ஷையன்றிக்கே விசதமாய் அறிந்துவந்தார்கள். பின்பு காலக்ரமத்தில் திருவாய்மொழியின் அர்த்தங்களை ஜ்ஞாநக்குறைவால் சேதநர்கள் தெரிந்துகொள்வது அரிதாய்விடுமென்பதுதெரிந்து அத்திருவாய்மொழி விஷயங்களை எளிதிலறிந்துகொள்ளும்படி மற்றையாழ்வார்களும் திவ்யப்ரபந்தங்களைச் செய்தருளினார்கள். இதனை

*'மாறன் பணித்த தமிழ்மறைக்கு மங்கையர் கோன்*
*ஆறங்கம் கூற அவதரித்த(ான்)'*

என்பதனால் அறியலாம்.

இந்த ப்ரபந்தங்கள் எல்லாம் சேரவே காலக்ரமத்தில் துஷ்டராஜாக்களாயிருந்த ஜைந புத்தாத்யந்யமதஸ்தர்களுடைய துராக்ரஹத்தாலே லுப்தமாய்ப்போக, பின்பு ஸ்ரீமந் நாதமுனிகள் அவதரித்து புநருத்தாரணம் பண்ணியருளினார். அப்போது நாதமுனிகள் முதலான பூர்வாசார்யர்கள் எல்லோரும் வ்யாக்யாநாபேக்ஷையில்லாமலே திவ்யப்ரபந்தார்த்தங்களையெல்லாம் விசதமாய் உபதேசித்துவந்தார்கள். அவ்வர்த்தங்களைப் பின்புள்ளார்களும் அறிகைக்கு உடையவர் நியமனப்படி திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவாய்மொழிக்குமட்டும் ஆறாயிரப்படி வ்யாக்யானம் ஸாதித்தருளினார். இப்பால் மற்றுமுள்ள ஆசார்யர்களால் ஒன்பதினாயிரப்படி பன்னீராயிரப்படி முதலான வ்யாக்யானங்களும் ஸாதிக்கப்பட்டன. இந்த க்ரமத்தில் திவ்யப்ரபந்த விஷயங்களைப் பின்புள்ளார்களும் அறிந்துகொள்ளுவதற்கநுகூலமாக இந்த தேசிகப்ரபந்தத்தை ஸ்வாமி ஸாதித்தருளினார். இதற்கு ஜ்ஞாபகமாகவே இந்த ப்ரபந்தத்தின் முடிவில் சிரோபூஷணமாக **ப்ரபந்தஸாரம்** என்னும் ப்ரபந்தம் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. அத்தால் திவ்யப்ரபந்தாத்யயநத்திற்கு இந்த ப்ரபந்தம் பூர்வபாவியாய்

அதிகரிக்கத்தக்கதென்று தோன்றுகிறது. **ப்ரபந்த ஸாரம்** என்னும் பெயரே இதற்கு ப்ரமாணமாகும். திவ்ய ப்ரபந்தங்களின் புறவுரையாகச் சொல்லத்தக்க வக்த்ரு வைலக்ஷண்யம் முதலான ஸாராம்சமான பொருள்களைச் சொல்லுகையாலே இதற்கு **ப்ரபந்த ஸாரம்** என்று பெயரிடப்பட்டிருக்கிறது. இதனால் திவ்யப்ரபந்தங்கள் ஸாரதரமும், ததர்த்தங்கள் ஸாரதமமுமாகையாலே அஸார வ்யாவ்ருத்தி வேண்டா தாயிற்று. இந்த ப்ரபந்தம் திவ்யப்ரபந்தங்களை அடியொற்றி யிருக்கிறதென்பதை இன்னும் பலவகையாலும் அறியலாம். எங்ஙனே என்னில் :-

**ஸ்ரீவைஷ்ணவதினசரி**யிலுள்ள பாசுரங்களெல்லாம் முதல் திருவாய்மொழியின் சந்தத்தோடொத்து ஸர்வ லகுவாயிருக்கும்படி செய்யப்பட்டுள்ளன. அவை சப்த சித்ரமுடையவாய்க்கொண்டு ஸ்வாமியின் கவிதாஸாமர்த்யத்தைக் காட்டவல்லன. **ஆஹார நியமம்** முதலான சில ப்ரபந்தங்களை லளிதமாயும் **நவரத்னமாலை** முதலான சில ப்ரபந்தங்களை ப்ரௌடமாயும் ஸாதித்திருப்பது காவ்ய பாக பேதங்களால் வ்யுத்பித்ஸுக்களுக்கு அதிகாராநுகுணமாகவும் ருச்யநுகுணமாகவும், அதிகரிக்கைக்கென்று தோன்றுகிறது. இப்படியே தொண்டரடிப் பொடியாழ்வார் ஸாதித்தருளிய திருமாலையும் திருப்பள்ளியெழுச்சியும் உள்ளன. இது திருமாலையில் 'குட திசை முடியை வைத்து' என்னும் பாசுரத்தையும், திருப்பள்ளியெழுச்சியுள் 'மேட்டிள மேதிகள்' என்னும் பாசுரத்தையும் தனித்தனி ஸேவித்துப்பார்க்கத் தெரியும். இந்த ப்ரபந்தத்திலுள்ள பத்ய பேத பாஹுள்யமானது ஸ்வாமிக்குத் தமிழிலுள்ள சந்தச் சாஸ்த்ர ப்ரவீணதையைக் காட்டுகிறது. அவையும் திவ்ய ப்ரபந்தங்களைப் பின்பற்றினவையே. **திருமந்திரச்சுருக்கு, த்வயச்சுருக்கு, சரமச்லோகச்சுருக்கு, கீதார்த்தஸங்க்ரஹப்பாட்டு, அர்த்தபஞ்சகம்** என்னும் ப்ரபந்தங்கள் திவ்யப்ரபந்தங்களிலுள்ள ரஹஸ்யார்த்த விசேஷங்களை எல்லாரும் ஸுக்ரஹமாய்த் தெரிந்து கொள்வதற்குறுப்பா யுள்ளன. **பரமதபங்கம்** என்னும் ப்ரபந்தமும் திவ்யப்ரபந்தார்த்தங் களையே விவரிக்கிறது. திவ்ய ப்ரபந்தங்களில் -

*தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ் சடையோன்*
*சொற்கற்ற சோம்பரும் சூநிய வாதரும் நான்மறையும்*
*நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர்'*

என்றும்,

*'புலையறமாகி நின்ற புத்தொடு சமணமெல்லாம்*
*கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தாம்'*

என்றும்,

*'இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்*
*மலிந்து வாதுசெய்வீர்களும் மற்றும் நுந்தெய்வமுமாகி நின்றான்'*

என்றும் பரஸமயங்கள் நிரஸிக்கப்பட்டுள்ளன. பரஸமயங்களின் ப்ரமேயங்களையும் அறிந்துகொள்ளவேண்டுமென்பதற்கு, திருமழிசை யாழ்வார் ஸாதித்தருளிய

*'சாக்கியம் கற்றோம் சமண்கற்றோம் சங்கரனார்*
*ஆக்கிய வாகமங்க ளாராய்ந்தோம்'*

என்ற பாசுரம் ஞாபகமாயிருக்கிறது.

**பன்னிரு நாமப்பாட்டு** ஆழ்வார் பாசுரங்களை அடியொற்றிக் கொண்டு கிஞ்சித் விசேஷம் காட்டியிருக்கிறது. இது ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அநத்யயநகாலத்திலும் திருமண்காப்பிடுங்கால் அனுஸந்திப்பதற்கு உபயோகமாயிருக்கவேணுமென்பது ஸ்வாமியின் திருவுள்ளம் போலும்.

இனி இந்த ப்ரபந்தத்தில் **ஆஹாரநியமம்** என்கிற ப்ரபந்தம் ஒன்றுண்டு. அது முன்னுள்ள ப்ரபந்தங்கள் போலே பகவத் விஷயமாயில்லாமலும் ரஹஸ்யார்த்த ப்ரதிபாதகமாயில்லாமலும் ஸ்ம்ருத்யாதி தர்மசாஸ்திரங்கள் போலே ஆசாரவிசேஷத்தை ப்ரதிபாதிப்பதால் அதற்கு திவ்யப்ரபந்தங்களோடு சேர்த்தி எப்படி?

என்கிற சங்கை உண்டாகலாம். திவ்யப்ரபந்தங்களுக்கெல்லாம் பகவதாராதன கைங்கர்யத்திலே நோக்காகையாலும், இந்த ப்ரபந்தத்துக்குப் பகவந் நிவேதநோபயோகியான பதார்த்தங்கள் இவை என்று தெரிந்து அத்தாலே பகவதாராதநம் பண்ணி ப்ரஸாதத்தை ஸ்வீகரிக்க வேண்டுமென்பதில் நோக்காகையாலும் திவ்யப்ரபந்தங்களோடு அந்வயமுள்ளதாம்.

இந்த விஷயத்தை ஸ்வாமியே திருவுள்ளம்பற்றி இந்த ப்ரபந்தத்தின் ஆரம்பத்திலேயே வேதாதி சாஸ்த்ரப்ரமாணங்களைக் கொண்டே **ஆஹார நியமம்** என்ற விஷயம் நிரூபிக்கப்படுகிறதென்று ஸாதித்தருளியிருக்கிறார். அப்பாசுரமாவது:

*'ஆகாரத் திருவகையாம் நன்றுந் தீதும்*
*அருமறைகொண் டெதிராச ரிவைமொழிந்தார்*
*ஆகாத வழிவிலக்கி யாக்குங் கண்ணன்*
*அனைத்துலகும் வாழவிது சாற்றிவைத்தான்*
*போகாது போக்குவிக்கும் முனிவர் சொன்ன*
*பொய்யாத மொழிகளையும் பொருந்தக் கேண்மின்*
*ஆகாதென்றிவை தவிர்ந்தா மதுவே கொண்ட*
*அசகரனு மாகங்காத் தருள்பெற்றானே'*

என்பதாம். **அருமறையகத்தே**, அந்நஸூக்தத்தில் 'அந்நத்தை ம்ருத்யுவாகவும் உயிரைக் கொடுப்பதாகவும் சொன்னார்கள்' என்றர்த்தமுள்ள வாக்யத்தைப்பற்றி **'நன்றும் தீதும்'** என்று இங்கு வ்யுத்க்ரமமாக* ஸாதித்திருப்பதாகத் தெரிகிறது. அந்த வாக்யத்தாலே அந்நத்தை ஸாமாந்ய விதயா ஆத்மநாசகரத்வாத் 'மருத்யு' என்றும் விசேஷவிதயா ஆத்மோஜ்ஜீவந ஹேதுத்வாத் 'ஜீவாது' என்றும் சொன்னார்களென்று

* இப்படி வ்யுத்க்ரமமாக ஸாதிப்பதை 'தேவதைகளுக்குக் கண்ணாவான், மனிதர்களுக்குக் கண்ணாவான்' என்றர்த்தமுள்ள ஸ்ருதி வாக்யத்தை 'கண்ணாவான் மண்ணோர் விண்ணோர்க்கு' என்று நிரூபித்திருப்பதைப் போல என்று கொள்க.

சொல்லப்படுகிறது. ம்ருத்யுத்வ ஜீவாதுத்வங்களாகிற பரஸ்பர விருத்த தர்மங்களுக்கு ஏகத்ர ஸமாவேசம் கூடாதாகையாலே இங்கே ஸாமாந்ய விசேஷ விபாகம் ஏற்படுகிறது. ஆகையால் அந்த ஸாமாந்யம் ம்ருத்யு என்றும், அந்த விசேஷம் ஜீவாது என்றும் சொன்னார்கள் என்றவாறாயிற்று. 'சொன்னார்கள்' என்ற பஹுவசந க்ரியாபதத்தால் சொன்னவர்கள் ப்ராமாணிகர்கள் பலர் என்பதாயிற்று. அவர்கள் கீதாசார்யனும் ரிஷிகளும். அவருள் 'ஆகாத வழி விலக்கி யாக்குங் கண்ணன் அனைத்துலகும் வாழவிது சாற்றி வைத்தான்' என்றது இந்த ச்ருதியின் உபப்ருும்மணமான கீதையில்

> 'யக்ஞசிஷ்டா[1]சிநஸ்ஸந்தோ[1] முச்யந்தே[1] ஸர்வகி[1]ல்பி[3]ஷை: |
> தே[1]த்[1]வக[4]ம் பு[4]ஞ்சதே[1] பா[1]பா[1]: யே ப[1]ச[1]ந்த்[1]யாத்[1]மகா[1]ரணாத்[1] ||

என்று அவ்வந்நத்தை விசேஷண விசிஷ்ட வேஷத்தாலே விபாகம் பண்ணி பல பேதம் சொல்லியிருப்பதைப்பற்ற என்று தோன்றுகிறது. இதனால் யஜ்ஞசிஷ்டாந்ந போஜநம் பாபநாசநம் செய்து ஆத்மோஜ் ஜீவநத்துக்கு ஹேதுவாகிறது என்றும், ததிதராந்நபோஜநம் பாபரூபமாய்க் கொண்டு ஜ்ஞாநவிரோதியாய் ஆத்மநாசத்தைப் பண்ணுகிறதென்றும் சொல்லப்பட்டன. இவ்வர்த்தத்தையே, 'போகாது போக்குவிக்கும் **முனிவர்**' என்று சொல்லப்பட்டவருள் ஒருவரான விஷ்ணுசித்தர், 'பிண்டத் திரளையும்' என்ற பாசுரமான அந்யாபதேசப் பேச்சாலே காக்கைக்கு உபதேசிப்பதுபோல் ★**மந்திரப் பாடலால்** ஸம்ஸாரி சேதநர்களுக்கு உபதேசிக்கிறார். அப்பாசுரம் வருமாறு -

> *'பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட நீர்ச் சோறும்*
> *உண்டற்கு வேண்டி நீ ஓடித் திரியாதே*

---

★ 'நிறைமொழிமாந்த ராணையிற் கிளந்த-மறைமொழிதானே மந்திரமென்ப' என்பது த்ராவிட பாஷா சாஸ்த்ரமாகையாலே திவ்யப்ரபந்தங்கள் அருளிக்கூறிய மந்திரப்பாடல்களாயின; அத்தாலே அருளிச்செயலென்றும், அவர்கள் மந்த்ரத்ருஷ்டாக் களாகையாலே முனிவரென்றும் சொல்லலாயிற்று.

அண்டத்தமரர் பெருமானழகமர்
வண்டொத்திருண்டகுழல் வாராய் அக்காக்காய்
மாயவன்றன் குழல் வாராய் அக்காக்காய்'

இப்பாசுரத்துக்கு அந்யாபதேசபரமாயும் ஸ்வாப
இரண்டர்த்தம் உண்டு. அவற்றுள் அந்யாபதேசபரமான அ
சொல்லப்படுகிறது.

ஆழ்வார், பகவத்விஷயத்திலே அத்யந்த ப்ரீத்யதிசய
ரக்ஷக பாவம் தலைதடுமாறிநிற்கும்நிலையிலே யசோதை
அவஸ்தையை அடைந்து கண்ணனை அநுபவிக்கிறா
யசோதைப் பிராட்டிபேச்சாக இப்பாசுரம் அவதரித்தது.

லோகத்தில் தாய்மார்கள் குழந்தைகளை அத்யந்
உபலாளனை பண்ணுவதுண்டு. அந்த க்ரமத்திலே கஎ
திருமுத்து விளக்கி, திருமஞ்சனம் செய்து, திருவொத்த
திருப்பரிவட்டம் தரிப்பித்து, திருமண்காப்பிட்டு, திருக்குழல்

தாய்மாராவார் குழந்தைகளுக்குத் தலைவாரும்போ
அசைக்காமல் இருப்பதற்காகக் குழந்தைகளின் மனதை
வேண்டி 'குருவீ கொண்டைக்குப் பூக்கொண்டு வா' எ
குழந்தைகளின் மனது ஸமாஹிதமாம்படியான வார்
சொல்வதுண்டு. அந்த க்ரமத்திலே யசோதைப்பிராட்டி 'காக்
என்றாள்; கண்ணன் 'அது எங்கேபோயிற்று' என்ற
சோறுண்ணப் போயிற்று' என்றாள்; கண்ணன் 'அ
போகச்சொன்னாய்' என்றான்; 'நான் போகச்சொன்னேனி
தானே போயிற்று' என்றாள்; கண்ணன் 'நீ போகவேண்
சொல்வதற்கென்' என்றான்; 'அது சொல்லத்தான் அவ
என்றாள்; 'அழை' என்றான். இவ்வாறான ஸம்பா
அடிப்படையாகவைத்துக்கொண்டு இப்பாசுரம் அவதரித்திருக்

இப்பாசுரத்தில் 'பிண்டத்திரளை' என்றது ச்ராத்தங்களிலிடும் வாயஸபிண்டத்தைச் சொல்லுகிறது. 'பேய்க்கிட்ட நீர்ச்சோறா'வது ஸ்மசாந வாஸிகளான பூதங்களுக்கிடும் பலிரூபமான சோறு. இவை நிஷித்தாந்நங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். இவற்றை உண்டற்கு வேண்டி நீ ஓடித் திரியாதே என்று வாயஸத்துக்கு வைதமாய் வைக்கப்படும் வாயஸபலி முதலானவற்றை உண்ணுதலையும் நிஷேதிக்கவே அது காமசாரமாயுண்ணுகிற அஸப்யமான அசுத்த பதார்த்தங்களெல்லாம் நிஷேதிக்கப்பட்டன. ஆகவே அவற்றின் தேஹதாரணத்துக்கு என் செய்யக்கடவது என்னும் சங்கையுண்டாக அதனைப் பரிஹரிக்கிறாள் 'வண்டொத்து' என்று. அதாவது:- உன்னைப் போலும் பறவையாகிய வண்டுகள் நிர்தோஷமான தேனையுண்டு தேஹதாரணம் பண்ணுவதுபோலே நீயும் நிர்த்தோஷமான வநஸ்பதி★ என்னும் புண்ணிய வ்ருக்ஷங்களிலுள்ள பலங்களையுண்டு தேஹதாரணம் பண்ணிக்கொண்டு, அத்தாலே பரிசுத்த காயமுடையையாய்க் கண்ணன்குழல்வாரவருவாய் என்றபடி. இங்கு யசோதைப் பிராட்டி பேச்சாலே கண்ணனை 'அண்டத்தமரர்பெருமான், மாயவன்' என்று சொல்லியது, குழந்தையிடத்தன்புடைய தாய் அக்குழந்தையை 'என் குல தெய்வம்' என்று கொண்டாடுவதுபோல் உவப்பாலே சொல்லியது. அன்றிக்கே 'வையமேழும் கண்டாள் பிள்ளை வாயுளே' என்கிறபடியாலே இப்பிள்ளை வாயுளே வையமேழுங் கண்டவளாகையாலும் அங்ஙனம் சொல்லக் குறையில்லை.

இனி ஸ்வாபதேசபரமான அர்த்தம்:-

இவ்வர்த்தம், ஸம்ஸாரி சேதனரை நோக்கிப் பெரியாழ்வார் உபதேசிப்பதாகக் கொள்ளத்தக்கது.

---

★ வநஸ்பதிவ்ருக்ஷங்கள் - ஆல், அத்தி, இச்சி, அரசு, பலா, முதலிய பூவாதேகாய்க்கும் மரங்கள். இவை சொல்லாதே உபகரிக்கும் உத்தமோதாரர்களுக்கு உபமானமாகச் சொல்லப்படும்.

சோறு கிடைக்குமிடங்களிலெல்லாம் கூடியுண்ணுவதும், ஒன்று செத்தவிடத்து எல்லாம் கூடிக்கத்துவதுமான ஸாதர்ம்யத்தாலே ஸம்ஸாரி சேதனர்கள் இங்கு காக்கையாக வ்யபதேசிக்கப்பட்டு உபதேசிக்கப் பெறுகிறார்கள்.

இங்கு 'பிண்டத்திரளை' என்றது ச்ராத்தாந்நத்தைக் குறிக்கிறது. அது வாயஸ பிண்டமாகவும் பரிணமிக்கையாலே லக்ஷணையாகப் 'பிண்டத் திரளை' என்னப்பட்டது. 'பேய்க்கிட்ட நீர்ச்சோறு' என்றது ஏகோத்திஷ்ட ரூபமாகச் செய்யும் ச்ராத்தங்களில் உதக பூர்வகமாக தத்தம்பண்ணப்படும் சோற்றை. ச்ரௌத ஸ்மார்த்த விஹிதமாய் வேதமந்த்ர ஜபாதிகளால் ஸம்ஸ்கரிக்கப்பட்ட பெருமையுடைய இவ்விரண்டந்நங்களும் இவற்றின் கீழ்க்கடையாயுள்ள ஜாத்யாச்ரய நிமித்த துஷ்டாந்நங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். இவற்றை 'உண்டற்கு' என்றது இவற்றில் போக்யபுத்திபண்ணி உண்டு தேஹதாரணம்பண்ணுகைக்கு என்றபடி. 'வேண்டி' என்றது நீங்களே மேல்விழுந்து என்றபடி. 'ஓடித்திரியாதே' என்றது யார் முந்திக்கொள்ளுகிறார்களோ என்று பரபரப்புடையராய் ப்ரவர்த்திக்க வேண்டா என்றபடி. இவையெல்லாம் ஸ்வபாவ விசேஷணம். இவ்வர்த்தத்துக்கு 'திரியாதீர்' என்றிருக்க வேண்டியது ஆர்ஷத்வாத்வசந விபர்யயமாயிற்று. 'வாராய்' என்பதற்கும் இதுவே லக்ஷணம். இது வீடுமின் முற்றத் திருவாய்மொழியில் 'புல்கு பற்றற்றே' என்பது போலும். அர்த்தார்த்திகளுக்கு இத்தாலே உபலக்ஷணதயா அசுத்தாந்ந போஜனமெல்லாம் நிஷேதிக்கப்பட்டதாயிற்று. ஆகவே இது கேட்ட அர்த்தார்த்திகள்,

'அப்1யக்1ருத்1ய சத1ம் க்1ருத்1வா கு1டு1ம்ப3ப4ரணம் கு1ரு'

என்று குடும்பிகளாகிய எங்களுக்கு வழிவிட்டிருக்கச்செய்தே இத்தையொழிந்தால் குடும்பபரணத்துக்கு என்செய்யக்கடவோம் என்ன,

'வண்டொத்து அண்டத்தமரர்பெருமான் குழல்வாராய்' என்கிறார். இங்கு அர்த்தார்த்திகளுக்கு அகாந்நபோஜனம்பண்ணாதே வண்டுபோலே ஜாத்யாச்ரய நிமித்தாதுஷ்டாந்நபோஜநரூபமான ஆஹாரநியம முடையீராய்க்கொண்டு பகவதுபாஸனைபண்ணுவீராகில் அண்டாதிபத்ய மளவான ஸமஸ்தைச்வர்யங்களையும் அடைவீர் என்று கூறப்பட்டதாம். இங்கு குழல்வாருதல் என்பது உபலக்ஷணவிதயா பகவதாராதந ஸூசகமாயிற்று. ஜிஜ்ஞாஸுக்களுக்கு 'வண்டொத்து உண்டற்கு ஓடித்திரிந்து மாயவன்றன் குழல்வாராய்' என்றது மதுகரவ்ருத்தியைக் கொண்டுஸம்பாதித்த த்ரவ்யத்தாலே பகவதாராதநரூபகைங்கர்யத்தைப் பண்ணிக்கொண்டு ப்ரஸாதஸ்வீகாரம் பண்ணி திவ்யதேசஸஞ்சாரம் செய்து வர்த்தியுங்கோள் என்றபடி. இங்கு 'அண்டத்தமரர்பெருமான்' என்றது ஸர்வசேஷியானவன் பக்கலிலே சேஷவ்ருத்தி ஸ்வரூப ப்ராப்தம் என்றபடி. சேஷவ்ருத்தி துக்கரூபமாகவன்றோ நாட்டிற்காண்கின்றதென அகலவேண்டா, அது போக ரூபமாகவே இருக்கும் என்பதை 'அழகமர் குழல்' என்பது த்யோதிப்பிக்கிறது. 'வண்டொத்து' என்பதற்கு கர்ணச்ராவ்யமான பகவத்விஷய கீதங்களைப் பாடிக்கொண்டு என்னவுமாம். 'மாயவன்' என்றது அண்டத்தமரர் பெருமானாகையாலே கிட்டுதற்கரியன என்றகலவேண்டா,

'ஸம்ப⁴வாம் யாத்¹ம மாயயா'

என்பதனால் அர்ச்சாவதார முதலான அவதார விசேஷங்களால் ஸர்வ ஸுலபனாயிருப்பன் என்பதைக் குறிப்பிடுகிறது.

இப்பாசுரத்தாலே ஜாத்யாச்ரய நிமித்தாதுஷ்டாந்நத்தாலே பகவதாராதநம்பண்ணி தத் ப்ரஸாதத்தை ஸ்வீகரித்துக் கொண்டு வர்த்திக்கவேணும் என்பது பலிதமாயிற்று.

'காக்காய்! நீ பிண்டத்திரளையும் பேய்க் கிட்ட நீர்ச்சோறும் உண்டற்கு வேண்டி ஓடித் திரி(ந்தொழி)யாதே, வண்டொத்து

(உண்டற்கு வேண்டி ஓடித்திரிந்து) அண்டத்தமரர் பெருமானழகமர்(ந்து) இருண்ட குழல் வாராய்' என்று அந்வயம். 'அழகமர்' என்பதில் அமர் என்னும் தாது 'மனைக மலமற மலர்மிசை யெழுதரும்' என்பதில் 'மலர்' என்பது போல வ்யபர்த்தகமாய் இருண்ட என்பதனோடு பிரிந்தியைந்தது. 'அண்டத்தமரர்பெருமான்' லுப்த விபக்திகம். இது திருவாய்மொழி முதற்பாசுரத்தின் ப்ரத்தியேக பந்தாந்வய யோஜனையில் 'அவன் என்னும் முதல் மூன்றுபதங்கள் போல்வது.

இந்தப்ரகாரம் ஆர்த்தமாகச் சொல்லப்பட்ட ஆஹாரநியம விஷயமானது ஸ்ம்ருதிகளில் விசதமாகச் சொல்லப்பட்டிருந்தபோதிலும் அவற்றையெல்லாம் எல்லாரும் அறிந்து அனுஷ்டிப்பது அஸாத்யமா யிருக்கையாலே அவற்றை எல்லாரும் விசதமாயறிந்துகொள்ளும்படி தமிழில் எளியநடையில் இந்த ஆஹாரநியமப்ரபந்தம் ஸாதிக்கப் பட்டிருக்கிறது.

அலங்காரத்துடன் கூடிய வாக்யங்களால் ப்ரமாண க்ரந்தங்கள் செய்யப்படுவதில்லை. செய்தால் உத்ப்ரேக்ஷை, உல்லேகம், அதிசயோக்தி, அபஹ்நுதி, ச்லேஷை, ரஸோக்திகள் முதலியவற்றால் ப்ராமாண்யம் கெடுமாகையாலே ஸ்ம்ருதி முதலிய ப்ரமாணக்ரந்தங்கள் ஒன்றும் ஸாலங்கார வாக்யங்களால் பேசுவதில்லை. அப்படியே இந்த தேசிக ப்ரபந்தமும் ப்ரமாண க்ரந்தமாகையாலே ஸ்வாமி தம்முடைய கவித்வாதி ஸாமர்த்யாதிசயங்களையெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டே இந்த ஆஹாரநியமப்ரபந்தம் செய்தருளினார் என்று தோன்றுகிறது. அப்படியிருந்தாலும் ப்ராமாண்யத்துக்கு பாதகமில்லாத அளவில் கவித்வ ஸாமர்த்தியம் மற்ற ப்ரபந்தங்களில் தோன்றாதிருக்கவில்லை.

அதிகார ஸங்க்ரஹத்தில் எம்பெருமானுடைய திருவடி ப்ரபாவங்களை ப்ரதிபாதிக்கும் பாசுரம் கம்பீரமான வண்ணச் சந்தத்தில் இருப்பதைப் பார்த்தாலே ஸ்வாமிக்குத் தமிழிலும் கவித்வ சக்தி ஸம்பூர்ணமாயுண்டென்று அறியலாம். அது வருமாறு:-

'உறுசகடமுடையவொரு காலுற்றுணர்ந்தன
உடன்மருத முடைய ஒரு போதிற்றவழ்ந்தன
உறிதடவு மளவிலுர லூடுற்றுநின்றன
உறுநெறியோர் தருமன்விடு தூதுக்குகந்தன
மறநெறியர் முறியபிரு தானத்துவந்தன
மலர்மகள்கை வருடமலர் போதிற்சிவந்தன
மறுபிறவி யறுமுனிவர் மாலுக்கிசைந்தன
மநுமுறையில் வருவதோர் விமானத்துறைந்தன
அறமுடைய விசயனமர் தேரிற்றிகழ்ந்தன
அடலுரக படமடிய வாடிக்கடிந்தன
அறுசமய மறிவரிய தானத்தமர்ந்தன
அணிகுருகை நகர்முனிவர் நாவுக்கமைந்தன
வெறியுடைய துளவமலர் வீறுக்கணிந்தன
விழுகரியோர் குமரனென மேவிச்சிறந்தன
விறலசுரர் படையடைய வீயத் துரந்தன
விடலரிய பெரிய பெருமாள் மெய்ப்பதங்களே'

இப்பாசுரம் பாஞ்சால ரீதியில் ப்ரஸாத குணமுடையதாக அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. தமிழில் வ்யுத்பந்நர்களுக்கு ஸுலபமாய் அர்த்தம் அறியும்படி உள்ளது.

'முத்திக் கருள்சூட மூன்றைத் தெளிமுன்னம்
இத்திக்கா லேற்கு மிதம்'

'மூன்றி லொருமூன்று மூவிரண்டு முந்நான்கும்
தோன்றத் தொலையும் துயர்'

என்ற பாசுரங்கள் சப்தார்த்தம் தெரிந்தாலும் தாத்பர்யார்த்தம் ஸாமாந்யர்களுக்குத் தெரியாதிருக்கும்படி மறைத்துச் சொல்லப்பட்ட கௌடரீதியில் ப்ரஸாத குணமுடையவாயுள்ளன. இவற்றுள் முன்னது தத்வத்ரய ஸூசகமாயும், இரண்டாம் பாசுரம் ஒவ்வொரு பதமும் சீர் தோறும் அநுப்ராஸமுடையனவாயும், மூன்றென்னும் ஸங்க்யா வாசகம் த்விகுணிதோத்தர க்ரமமுடையதாய்க்கொண்டு திருமந்திரமும் த்வயமும்

சரமச்லோகமுமாகிய ரஹஸ்ய த்ரயங்களிலுமுள்ள பதங்களை ஸூசிப்பனவாயும் இருக்கும்படி ஸாதித்திருப்பது அதிசயிக்கத்தக்கது.

அடைக்கலப்பத்தில்

*'உமதடிக ளடைகின்றே னென்றொருகா லுரைத்தவரை*
*அமையுமினி யென்பவர்போல் அஞ்சலெனக் கரம்வைத்துத்*
*தமதனைத்து மவர்தமக்கும் வழங்கியுந் தாமிகவிளங்கும்*
*அமைவுடைய அருளாளர் அடியிணையை அடைந்தேனே'*

என்ற பாசுரம் வைதர்ப்ப ரீதியில் ப்ரஸாதகுணமுடையதாய்க் காய்ச்சீரே கொண்டு கடையடி முற்று மோனையுடையதாய் அருளிச்செய்யப் பட்டிருக்கிறது. இதன் பாவத்தால் அர்ச்சா வதாரத்திலேயே சரணாகதரிடத்தில் எம்பெருமான் திருவுள்ளத்திலுள்ள உவப்பும் த்ருப்தியும் முதலான குணகணங்களை ப்ரகாசிப்பித்துக் கொண்டு பரபரப்புடன் ஒருக்காலுரைத்ததே போதும் போதும் என்று சொல்லும் அவஸரத்தைப் புலப்படுத்தியிருப்பது ஸதா அநுபாவ்யமாய் ரஸிக்கத்தக்கது.

இந்தப் பாட்டு 'தமதனைத்தும் . . . வழங்கியும் அவரினும் தாம் மிக விளங்கும்' என்ற முரணும், 'அமைவுடைய அருளாளர் அடியிணையை அடைந்தேனே' என்ற முற்றுமோனையும் பெற்று விளங்குகின்றது.

இன்னும் இந்த ப்ரபந்தத்துக்கு ப்ரபாவங்கள் பல உண்டென்பதை நாம் அறிந்து கொள்ளும்படி இந்த ப்ரபந்தத்தின் தனியன் வெளியிட்டிருக்கிறது. அத்தால் இந்த ப்ரபந்தத்தின் ப்ரபாவமெல்லாம் சொல்லப்பட்டுள்ளன. அத்தனியனும் அதன் பொருளும் வருமாறு -

*'சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள் - ஓரொன்று*

*தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு*

*வானேறப் போமளவும் வாழ்வு'*

இதிலுள்ள சீராவது சிறப்பும் புகழுமாம். சிறப்பாவது ஸ்வாஸாதாரண கௌரவம். அதாவது இங்கு ஜ்ஞாநாநுஷ்டாநங்களால் உண்டாவதோர் உயர்த்தி. புகழாவது உலகத்தாரால் கொண்டாடப்படுகை. அது ப்ராயச: வித்யையாலும் வீரத்தாலும் தாநத்தாலும் வருவது. அது இங்கு வித்யையால் வந்திருப்பதை 'ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர்' என்னும் திருநாமத்தால் அறியலாம். வீரத்தால் வந்திருப்பதாவது:-

'கா1வ்யேஷு கோ1மளதி4யோ வயமேவ நாந்யே

த1ர்கே1ஷு க1ர்க1சதி4யோ வயமேவ நாந்யே'

என்று தாமே சொல்லும்படியாயுள்ள பரபக்ஷ நிரஸந ஸாமர்த்யரூப மான வித்யா சூரத்வத்தால் வந்துள்ளது. தாநத்தாலுள்ளது. ஜ்ஞாந ப்ரதாநத்தாலேயுள்ளது. ஆக இவை போன்ற குணகணங்களெல்லாம் 'சீர்' என்னப்படும். இது மற்றுமுள்ள கல்யாணகுணங்கள் எல்லாவற்றுக்கும் உபலக்ஷணம்.

'ஒன்று' என்றது அந்தக் குணங்களெல்லாம் தாமே வந்து பொருந்துதலையுடைய என்றவாறு. அதாவது ஸ்வாமி அக்குணங்களை யடைந்து பெருமைபெறவிரும்பாதிருக்கச்செய்தே அக்குணங்கள் தாமேவந்து ஸ்வாமியை அடைந்தன என்பதாயிற்று. இத்தால் அக்குணங்கள் ஸ்வாமிக்கு ஸ்வபாவ ஸித்தங்கள் என்பது பலிதம். இஃதன்றிக்கே லோகத்தில் தர்மங்களைப்பற்றியே தர்மி நிறம் பெறுவதாயிருக்கும், இங்கு தர்மியைப்பற்றி தர்மங்கள் நிறம் பெறுகின்றன என்பதும் ஒரு குறிப்பாயிற்று. அஃதென்போலவெனில், ஸஹோதர ஸ்த்ரீ புருஷர்களுடைய அபத்யங்களுக்கு பரஸ்பரவிவாஹம்

'த3க்ஷிணதே3ச சிஷ்டா1சார விஷயத்1வாத் நதோ3ஷ:'

என்று பரிக்ராஹ்யமானாப்போலே அக்குணங்கள் ஸ்வப்ரயோஜந பரரையும் ப்ரயோஜனாந்தர பரரையும் அடைதலால் யதாகதஞ்சித்ந்யூ நதையிருந்தாலும் ஸ்வாமியின் ஸம்பந்தத்தாலே அது தீர்ந்து நிறம் பெற்றன என்றபடி.

'தூப்புல் திருவேங்கடமுடையான்' என்றது திருப்பதித் திருவேங்கடமுடையானை வ்யாவ்ருத்தித்தபடி. அதாவது அவர் அர்ச்சாவதார ரூபி; இவர் விபவாவதார ரூபி என்பதாம். இத்தால் அவரிலும் இவர் பரமோத்தேச்யர் என்பதாம். இப்படியாக 'சீர் ஒன்று தூப்புல் திருவேங்கடமுடையான்' என்றதனாலே வக்த்ரு வைலக்ஷண்யம் சொல்லப்பட்டது.

இனி ப்ரபந்த வைலக்ஷண்யம் சொல்லப்படுகிறது – 'பாரொன்றச் சொன்ன பழமொழி' என்பதனால். இங்கு 'பார்' என்றது உலகம் என்பதன் பர்யாயமாய் (தமிழ்வழக்குப் பற்றி) உயர்ந்தோரைச் சொல்லுகிறது. 'உலகமென்பதுயர்ந்தோர் மேற்றே' என்பது நிர்வசனம். உயர்ந்தோராவார் வித்யா வ்ருத்த சீலங்களாலே மேம்பட்டவர்கள்.

'ஒன்ற' என்றது அவர்கள் கேட்டு ஸமீசீநமென்று த்ருப்தி யடையும்படியாக என்றவாறு. இத்தாலே ப்ரபந்த வைலக்ஷண்யத்துக் குறுப்பான சிஷ்டபரிக்ரஹம் சொல்லப்பட்டது.

'சொன்ன' என்றது ஆப்த வாக்யதயா ப்ராமாண்யம் சொல்லியபடி.

'பழமொழி' என்றது ஸ்வாமி ஸாதித்த இது புதுமொழியாயிருந்தாலும் பழமொழியாமென்கிறது. பழமொழியாவது நாமைகதேச க்ரஹணத்தாலே பழமையான மொழிகளாகிய திருவாய்மொழி, திருமொழிகளாய், ததர்த்த ப்ரதிபாதகமான ப்ரபந்தம் என்றபடி. 'பாரறியச் சொன்ன பழமொழி' என்ற இத்தாலேயும் ப்ரபந்த வைலக்ஷண்யம் சொல்லப்பட்டதாயிற்று.

இனி அதிகாரி நிர்ணயம் பண்ணுகிறது – 'தாரணியுள் வாழ்வார்க்கு' என்று. தாரணியுள் – பூ மண்டலத்தில், வாழ்வார்க்கு – பகவத் ப்ராப்தியாகிற நித்யவாழ்க்கையை அடையப்போகும் முமுக்ஷுக்களுக்கு. இதனால் முமுக்ஷுக்களெல்லாரும் இதற்கு அதிகாரிகள் என்பதாயிற்று.

இனி பலம் சொல்லுகிறது – 'வானேறப் போமளவும் வாழ்வு' என்று. வாழ்வு – வாழுகைக்கு. இங்கு சொல்லும் வாழ்வாவது பகவதநுபவம். லௌகிகமான வாழ்வு விஷயானுபவமாகையாலே அலௌகிகமான வாழ்வு பகவதநுபவமாயிற்று. எங்ஙனமெனில் லௌகிக வாழ்வை ஒருத்தி ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டாள் என்பர். பகவதநுபவத்தை 'வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொள்மின்' என்பர். 'வானேறப் போமளவும் வாழ்வு' என்று வானேறப் போதலை ஸித்தவத்காரம் பண்ணிச் சொல்லுகையாலே பகவத் ப்ராப்தி ஸித்தமாயுண்டென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'வானேறப் போமளவும்' என்கையாலே ப்ராரப்தாவஸாநத்தை ப்ரதீக்ஷிக்கும் சில காலத்துக்கென்றபடி.

இனி ஸாதந லாகவம் சொல்லுகிறது – 'ஓரொன்று தானே யமையாதோ' என்று. பழமொழியுள் ஒன்றென்றால் நிர்த்தாரணே ஸப்தமியாய் ஏதோ ஒன்று என்று மட்டும் பொருளாகும். அப்படியன்றிக்கே 'ஓரொன்று' என்ற வீப்ஸையால் ஒவ்வொன்றும் பகவதநுபவ ஸாதநம் என்பதாயிற்று. இத்தாலே பழமொழியுள் எந்தப் பாசுரமானாலும் ஒன்றே அமையும் என்பதாயிற்று. 'ஒன்று' என்பதை இன்னதென நிர்த்தேசிக்காமையாலே ஒரு ப்ரபந்தமேயாக ஒரு பாசுரமேயாக ஒரு வாக்யமேயாக ஒரு மொழியேயாக பர்யாப்தமாம் என்றவாறாயிற்று.

'அமையாதோ' என்ற ப்ரச்நத்தாலே ததநுஸந்தாநபரர்பேச்சாய் இதராநபேக்ஷமாய் நிரவதிகமாயிற்று என்றபடி. என்போலவெனில், ஒரு

கல்யாணவீட்டிலே ஸம்பந்திகளுக்கு முஹூர்த்தமாகுமளவும் பசியாற்றியிருக்கவேண்டி அவர்களை ஆப்யாயநம்பண்ணுவிக்கும்போது வர்க்காந்நங்களையும் பக்ஷ்ய வர்க்கங்களையும் பழ வர்க்கங்களையும் ஒன்றன்மேலொன்றாகப் பரிமாறுமளவிலே உண்பவர் த்ருப்தராய் இவற்றில் ஒன்றொன்றே போதாதோ, உண்ணப்போகுமிடையே இச்சிறு பொழுதிடைப்பாலைக்கு என்பர். அது போல வானேறப் போகும் இச்சிறுபொழுதைக்குப் பழமொழியுள் ஓரொன்றே அமையும் என்று கொள்ளக்கடவது. 'வாழ்வுக்கு' என்னும் தாதர்த்திய சதுர்த்தீ சாந்தஸத்வாத் லுப்தமாயிற்று.

தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு(க்கு) சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான் பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள் ஓரொன்றுதானே அமையாதோ (அமையும்) என்றந்வயம்.

இத்தாலே நிகமிப்பது இந்த தேசிக ப்ரபந்தம் பகவதம்சபூதராயும் ஸமஸ்த வித்யா பாரங்கதராயும் அத்யந்தம் ஆப்ததமராயும் ஆசார்யாக்ரேஸரராயுமுள்ள ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகனாலே ஸாதிக்கப்பட்டு திவ்ய ப்ரபந்தார்த்தங்களை விஷயமாகக்கொண்டதாய் சிஷ்டர்களால் பரிக்ரஹிக்கப்பட்டதாய் முமுக்ஷுக்கள் அதிகரிப்பதற்கு யோக்யமாய் அநுஸந்தாநம் பண்ணுவார்க்கு ஸித்தமாகவே மோக்ஷ ப்ரதாநம் பண்ணவல்லதாயிருப்பதுமன்றிக்கே, அவர்களுக்கு இங்குள்ள காலங்களிலும் பகவதநுபவஜநகமாய்க்கொண்டு காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் உறுப்பாயிருக்கும் என்பதாயிற்று.

ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகாய நம:

ஆழ்வார் எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# அமிர்தரஞ்ஜநி

(22ஆம் பாசுரவுரை)

ஸ்ரீமாந் வேங்க[1]ட[1] நாதர்[2]ர்ய: க[1]விதா[1]ர்கி[1]க[1] கே[1]ஸரீ ।

வேதா[3]ந்தா[1]சா[1]ர்யவர்யோமே ஸந்நித[4]த்[1]தா[1]ம் ஸ்தா[3]ஹ்ருதி[3] ॥

**கவிதார்க்கிககேஸரி** என்றும், ஸ்ரீவிசிஷ்டாத்வைதஸித்தாந்த ப்ரவர்த்தகரென்றும் கொண்டாடப்பெற்ற **ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிக**னாரால் அருளிச்செய்யப்பட்ட தமிழ்ப்பிரபந்தங்களுள் **அமிர்தரஞ்ஜநி**யும் ஒன்று. அது,

*'சீரொன்று தூப்புற் றிருவேங்கடமுடையான்*
*பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஒரொன்று*
*தானே அமையாதோ தாரணியுள் வாழ்வார்க்கு'*

என ஆன்றோராற் புகழ்ந்துரைக்கப்பெற்ற பெருமையுடைய தேசிக ப்ரபந்தத்தின் ஒருபகுதியாயுள்ளது.

இதனால், தாரணியுள்வாழ்வார்க்கு, அவர் **வாழ்க்கையாகிய** [1]காலக்ஷேபத்துக்கும் [2]போகத்துக்கும் [3]ஸ்வரூபப்ராப்திக்கும் இதில் உள்ள ஓரொரு [4]பாசுரமே அமையும் என்பது போதரும்.

இதற்கு [5]நிதர்சனமாகும்படி அவ்வமிர்தரஞ்ஜநியிலுள்ள ஒரு பாசுரத்தின் பொருள் இங்கு நிரூபிக்கப்பெறுகிறது.

1 காலக்ஷேபம் - மனம் தீயவழியிற்செல்லாது நல்லவழியிற் செல்லுமாறு பொழுதுபோக்குகை.

2 போகம் - 'செஞ்சொற்கவியின்ப' நுகர்ச்சி.

3 ஸ்வரூபப்ராப்தி - ஆன்மலாபம்.

4 பாசுரம் - பாட்டு.

5 நிதர்சனம் - எடுத்துக்காட்டு.

அப்பொருள், வடநூல்வழக்குப்பற்றிய சமயக்கோட்பாடான பரிபாஷைகளால் வழங்கப்படுதலால் தனித்தமிழ்நடையில் வரைதல் எல்லோர்க்கும் பயன்படாதென்பதுபற்றியும், வடமொழி வல்லார்க்கும் பயன்படவேண்டியும் வரன்முறையான மரபுபற்றி, வடமொழிவிரவிய தமிழ்நடையால் வரையப்பெறுகிறது.

அப்பாசுரம்,

*'செய்யேல் மறம்' என்று தேசிகன் தாதை அவன் உரைத்த*
*மெய்யே அருள் பொருள் சூடிய வெண்மதி காதலியாம்*
*பொய்யே பகைப்புலன் ஐயிரண்டொன்று பொருங்கருவி*
*கையேறு சக்கரக் காவலன் காவலடைந்தவர்க்கே.*

என்பது,

இதன் [1]அந்வயம் வருமாறு:-

இதில், **மெய்யே** என்பதில் உள்ள ஏகாரத்தை **அருள்** என்பதனோடும் கூட்டி, **'மெய்யே அருளே பொருள்'** என முடிக்க.

**'காதலியாம்'** என்பதில் உள்ள பயனிலைக்குறிப்பான **'ஆம்'** என்பதை, 'பொருள்', 'பகைப்புலன்', 'பொருங்கருவி' என்பவற்றோடும் கூட்டுக. இவை 'காவலன்காவலடைந்தவர்க்கு' என்னும் நான்கனுருபுக்குப் பயனிலையாயின.

**தேசிகன் தாதை அவன்:** என்னும் பெயரடுக்கைப் பிரித்து, உரைத்த என்பதனோடு தனித்தனிகூட்டித் **தேசிகனுரைத்த, தாதையுரைத்த, அவனுரைத்த:** என்று முடித்து, அந்த 'உரைத்த' என்னும் பெயரெச்சத்தை **மெய், அருள், வெண்மதி, பொய், ஐயிரண்டொன்று:** என்பவற்றோடு தனித்தனி கூட்டியுரைக்க.

இனி இப்பாசுரார்த்தம் வருமாறு:-

[1] அந்வயம் - சொன்முடிபு.

இப்பாசுரத்தால் [1]ப்ரபந்நாநுஷ்டாநம் ஒரு [2]யஜ்ஞரூபமாக வர்ணிக்கப்படுகிறது.

இதன் பிண்டப்பொருள், "எம்பெருமானே [3]ரக்ஷகனென்று அவனையே பற்றியிருக்கும் ப்ரபந்நரொருவரும் பாபம்செய்யலாகா தென்பதைத் திருவுள்ளம்பற்றி, அவருக்குப் பரமாசார்யனாயும் பரமபிதாவாயும் பரமரக்ஷகனாயும் உள்ள ஸர்வேசுவரன் சொல்லிய தத்வதர்சநம் சமதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம், அவர்செய்யும் ப்ரபந்நாநுஷ்டாநமாகிய [4]நிஷ்காம்யயஜ்ஞ விசேஷத்துக்கு யஜ்ஞ [5]உபகரணங்களாகிய பதார்த்தவிசேஷங்களாம்; பகவச் [6]சேஷத்வ[7]விசிஷ்ட பரிசுத்தாத்மதர்சநரூபமான ஜ்ஞாநவிசேஷம் யஜ்ஞகர்த்தாவின் [8]தர்மபத்நியாம்; பொய்யாகிய [9]அஜ்ஞாந [10]அந்யதாஜ்ஞாந [11]விபரீதஜ்ஞாநங்கள், ஆத்மஜ்ஞாநமாகிய இந்த யஜ்ஞபத்நியை மறைத்து ஒளித்து, அந்த யஜ்ஞோபகரணங்களாகிய ப்ரபந்நாநுஷ்டாநங்களைப் போக்கி, யஜ்ஞத்தைக் கெடுக்கவல்ல காமாதி [12]ஹேயகுணங்களாகிய விரோதிகளுக்கு இடங்கொடுக்கும் பகைப்புலமாம்;

1 ப்ரபந்நன் - இறைவனிடத்தில் 'தன்கடன் அடியேனையும் தாங்குதல், என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்றிருப்போன்; அநுஷ்டாநம் - ஒழுக்கம்.

2 யஜ்ஞரூபம் - வேள்விவடிவு.

3 ரக்ஷகன் - காப்போன்.

4 நிஷ்காம்யம் - பயன்கருதாதது.

5 உபகரணம் - சாதநம்.

6 சேஷத்வம் - உடையோனிடம் ஒன்றுமாகாது வேறுமாகாது ஒன்றாயும் வேறாயும் ஒருபுடையொற்றுமையுடனிருக்கை. அது உடைமை எனப்படும்.

7 விசிஷ்டம் - கூடியது.

8 தர்மபத்நி - அறக்கிழத்தி.

9 அஜ்ஞாநம் - அறியாமை.

10 அந்யதாஜ்ஞாநம் - ஒன்றைப் பிறிதொன்றாக அறிதல்.

11 விபரீதஜ்ஞாநம் - ஒன்றனை அதன் மறுதலைப்பொருளாக உணர்தல்.

12 ஹேயகுணம் - இழிகுணம்.

அப்பகை தோன்றிய இடத்தில் அப்பகையை அழித்தற்கு [1]ரஹஸ்யத்ரயா நுசந்தாநம் போர்ப்படையாம்" என்பது.

இனி இதன் விரிவுரை வருமாறு:-

**'கையேறுசக்கரக்காவலன்'** என்பது [2]ஆசிருதஸம்ரக்ஷணத்தில் ரக்ஷகனுக்குள்ள [3]ஜாகரூகத்வம் சொல்லியதாம்.

அன்றியும், 'சக்கரக்காவலன்' என்ற இதுவே சக்ரவர்த்தியான ஸார்வபௌமன் என்னுங் கருத்தால் ஸர்வேசுவரனைச் சொல்லிற்று என்னவுமாம். இது, [4]நியாமகத்வ த்யோதகம்.

'காவலன்' என்றது ரக்ஷணகர்த்தா என்றபடி. ரக்ஷண[5]க்ரியைக்கு உரிய விஷயம் இன்னதென்று சொல்லப்படாமையால் ஸர்வரக்ஷகன் என்பது பொருளாயிற்று.

'காவலன்' என்ற இதனால், இவன் மற்ற [6]ஸ்ருஷ்டி [7]ஸம்ஹாரங்களையும் உடையவனானாலும [8]அநிஷ்டமாயுள்ள அவற்றைப் பிறர் செய்யும்படிவிட்டு [9]ஸர்வாத்மாக்களுக்கும் [10]அத்யந்தம் [11]இஷ்டதமமான ரக்ஷணத்தை மட்டும் தானே [12]அத்வாரகமாகச் செய்து

1 ரஹஸ்யத்ரயாநுசந்தாநம் - மூன்றுமந்திரங்களையும் இடையறாது சிந்தித்தல். ரஹஸ்யம்-மந்திரம்; த்ரயம்-மூன்று; அவை திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் என்பன. அநுசந்தாநம் - இடையறாது வழங்குதல்.

2 ஆசிருதஸம்ரக்ஷணம் - அடைந்தோர்ப்புரத்தல். ஆசிருதர் - அடைந்தோர். ஸம்ரக்ஷணம் - காப்பு.

3 ஜாககரூகத்வம் - எதிர்நோக்கியிருத்தல்.

4 நியாமகத்வம் - கட்டளையிடுகை; த்யோதகம் - குறிப்பு.

5 க்ரியை - செயல்.

6 ஸ்ருஷ்டி - படைப்பு.

7 ஸம்ஹாரம் - அழிப்பு.

8 அநிஷ்டம் - விரும்பத்தகாதது.

9 ஸர்வாத்மாக்களுக்கும் - எல்லாவுயிர்க்கும்.

10 அத்யந்தம் - மிகவும்.

11 இஷ்டதமம் - விரும்பப்படுமவற்றுட்சிறந்தது.

12 அத்வாரகமாய் - வாயிலாலன்றி - தானேநேராய்.

போதருமவன் என்பது குறிப்பாயிற்று. இது அவனுக்குள்ள [1]ஸௌஹார்த்தத்தைக் காட்டுகிறது.

காவல்—ரக்ஷணம். அதாவது [2]ரக்ஷ்யவர்க்கங்களின் [3]**விரோதியைப் போக்குகையும் வாழ்வளிக்கையும்.**

**'சக்கரக்காவலன்'** என்றது ரக்ஷணகர்த்தாவான தானே ரக்ஷணத்தில் ஜாகரூகனாயிருக்கச்செய்தேயும் ஆசிருத**விரோதிகளை அழிக்கைக்குக்** கைக்கொண்டிருக்கும் [4]**'ஸுரத்விஷாம் ப்ராணவிநாச'** ஹேதுவான [5]ஸாதநமிருக்கும் இருப்புச் சொல்லியபடி.

இன்னும் இது தானே 'பாஸ்கரகோடிதுல்யம்' என்று சொல்லப் பட்டமையால் **வாழ்வளிக்கைக்குப்** புறவிருளைப்போக்கும் ஒரு பாஸ்கரனைப்போலன்றிப் பலகோடிபாஸ்கரர் உதித்தாற்போலுள்ள [6]திவ்யதேஜஸ்ஸைக்கொண்டு அகவிருளாகிய அஜ்ஞாநத்தையும் அழிக்கவல்லது என்பதும் ஆயிற்று. இவை பொருட்குறிப்பாற் கொள்ளப்பட்டன.

இவற்றால், புறப்பகை, அகப்பகை இரண்டையும் ஒழிக்கவல்ல படைக்கலம் என்பது குறிப்பாயிற்று.

**'கை'** என்றது இங்கே [7]அர்த்தசக்தியாலே [8]ஆர்த்தர்களுக்கு விரோதிகளைப்போக்கி வாழ்வளிக்கவல்ல வலந்திகழ்திருக்கை என்றவாறு. இதுவும் ரக்ஷகத்வ [9]சூசகமாயிற்று.

1 ஸௌஹார்த்தம் - நல்லெண்ணம்.

2 ரக்ஷ்யவர்க்கம் - பாதுகாக்கப்படுமவை.

3 விரோதி - பகை.

4 ஸுரத்விஷாம்ப்ராணவிநாசஹேதுவான - தேவவிரோதிகளான அசுரருயிரழிகைக்குக்காரணமான.

5 ஸாதநம் - கருவி.

6 திவ்யதேஜஸ் - தெய்வத்தன்மையுள்ள ஒளி.

7 அர்த்தசக்தி - பொருட்குறிப்பு.

8 ஆர்த்தர் - துன்புற்றோர்.

9 சூசகம் - குறிப்பு.

'கையேந்துசக்கரம்' என்னாது, '**கையேறுசக்கரம்**' என்றது ரக்ஷணத்தில் காவலனிலும் சாதநம் முற்பட்டிருக்கும் இருப்புச் சொல்லியபடி. இதனை, பாரதயுத்தத்தில் படையெடேனென்று சபதம்செய்து படையொழிந்துபோந்த அவன்கையில் அது தானே வந்தேறியதுகொண்டறியலாம்.

இவற்றால் அவனை அடைவர்க்கு ரக்ஷணம் ஒருவிதத்தாலும் தவறாது என்பதாம்.

'**காலவன்**' என்றதன் சப்தார்த்தசக்தியாலே ரக்ஷ்யகோடிகள் [1]அவிநாபாவசம்பந்தம்பெற்று அவனையடைந்திருக்கை சித்தமாம் என்பது தெரியச்செய்தே, பின்னும், '**காவலன்காவலடைந்தவர்க்கு**' என்றது [2]வ்யதிரேகலக்ஷணையாலே [3]**ஸ்வரக்ஷணத்தில்** [4]**ஸ்வப்ரவ்ருத்தி**யைவிட்டு [5]நிர்ப்பரராயிருக்கும் ப்ரபந்நர்க்கு என்றவாறாயிற்று. இதுவே [6]அநந்யகதித்வசூசகமுமாம்.

இதற்கு இவ்வாறாக அர்த்தங்கொள்ளாக்கால், **காவலன்காவல்** என்றது [7]உக்தார்த்தப்ரயோகமும, [8]ஆத்மாசிரயமுமாம்.

இங்கு, **காவலன்காவலடைதலாவது:** 'தன்காவலை விட்டிருக்கை' என்றபடி. இது ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தியையுமுடைய [9]சாதநாந்தரபரரை [10]வ்யாவர்த்திக்கிறது.

1 அவிநாபாவசம்பந்தம் - இன்றியமையாத் தொடர்பு.
2 வ்யதிரேகலக்ஷணை - மறுதலைக்குறிப்பு.
3 ஸ்வரக்ஷணம் - தற்காப்பு.
4 ஸ்வப்ரவ்ருத்தி - தன்முயற்சி.
5 நிர்ப்பரர் - பொறுப்பற்றவர்.
6 அநந்யகதித்வம் - புகல்வேறின்மை.
7 உக்தார்த்தப்ரயோகம் - கூறியதுகூறல்.
8 ஆத்மாசிரயம் - தன்னைப்பற்றுதல் என்னும் குற்றம்.
9 சாதநாந்தரபரர் - பிறிதோருபாயத்தைக் கைக்கொண்டவர்.
10 வ்யாவர்த்தித்தல் - விலக்குதல்.

ஸாதநாந்தரபரராவார்,

[1]ப்[1]ரயத்[1]நாத[3]யத[1]மாநஸ்து[1] ஞானஸம்சுத்[3]த[4]கில்பி[3]ஷ: |
அநேக[1] ஜன்மஸம்ஸித்[3]த[4]: த[1]தோ[1]யாதி[1] ப[1]ராம் க[3]தி[1]ம் ||

என்று சொல்லப்பட்டவர்.

இதனால் இங்கு [2]வக்தவ்யங்களாயுள்ள அர்த்தவிசேஷங்கள் சாதநாந்தரபரரைநோக்கிச் சொல்லியவையல்ல என்பதாம்.

'**செய்யேல் மறம் என்று தேசிகன் தாதை அவன் உரைத்த மெய்யே அருளே பொருளாம்**' என்றது 'ப்ரபந்நனாயுள்ளவனொருவனும் பாபம் செய்யலாகாது' என்னும் அர்த்தத்தையுட்கொண்டு, பரமாசார்யனும் பரமபிதாவும் ஸர்வரக்ஷகனுமான ஸர்வேசுவரன் சொல்லிய தத்வதர்சநமும் ஸமதர்சநமும் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம் ப்ரபந்நா நுஷ்டாநமான நிஷ்காம்யயஜ்ஞவிசேஷத்துக்கு யஜ்ஞோபகரணங்களான பதார்த்தவிசேஷங்களாம்: என்றவாறு.

[3]'த்[1]யக்[1]த்[1]வா புத்[1]ரான்ச[1] தா[3]ரான்ச[1] மித்[1]ராணிச[1] த[4]நாநிச[1]'

என்றும் [4]'ஸர்வத[4]ர்மான் ப[1]ரித்[1]யஜ்ய' என்றும் சொல்லுகிறபடியே

[5]ஸர்வஸங்கபரித்யாகம்பண்ணிவந்தடைந்த இவனுக்கு, உரியனவாகாத, யஜ்ஞத்துக்குரிய **காதலியும்**, **பொருளும்**, **பகைப்புலமும்**, அதனை ஒழித்தற்குரிய **போர்ப்படையும்** ஆகிய இவை உள்ளனவாகச்

1 இதன்பொருள். 'தன்முயற்சியால் (பரகதி) அடையவிரும்புமவன் ஜ்ஞாநத்தால் பாபங்களைப்போக்கிக்கொண்டு பல பிறப்புக்களால் ஆத்ம ஸாக்ஷாத்காரமாகிய தன்னிலையடைந்து அதனால் பரகதியையடைகிறான்' என்பது.

2 வக்தவ்யம் - சொல்லற்குரியது.

3 இ-ள், 'மக்களையும் மனைவியையும் நண்பினரையும் பொருளையும் கைவிட்டு' என்பது.

4 இதன் பொருள். 'எல்லாத் தர்மங்களையும்விட்டு' என்பது.

5 ஸர்வஸங்கபரித்யாகம் - உடம்போடுண்டாகிய தொடர்பெல்லாம் விடுகை.

சொல்லப்பட்டமையால் அவை யஜ்ஞுசூசகங்களாய் இவ்வநுஷ்டானம் யஜ்ஞ [1]ஸமாதியால் சொல்லப்பட்டதென்று தோற்றுவிக்கின்றன.

பாபகர்மம் வேதாதிசாஸ்த்ரங்களால், செய்யலாகாதென்று மறுக்கப்பட்டமையால் அது, மறம் (நிஷித்தகர்மம்) என்று சொல்லப்பட்டது. இது, மறம்செய்யேல் என மாறிநின்று [2]வசந வ்யத்யயத்தாலே பாபம் செய்யலாகாது என்னும் அளவாய் [3]ப்ரதிஷேதவிஷயமாயிற்று.

ஆனால் இவனுக்கு, [4]விஹிததர்மங்களும் பொன்விலங்கு போலே [5]பந்தநஹேதுவாகையாலே அதனையும் இங்குச் செய்யலாகாதென்று சொல்லாதது, ஸர்வதர்மபரித்யாகம்பண்ணிவந்தடைந்த இவனுக்கு அது பின்னும் சொல்லவேண்டாவென்பது பற்றியென்க.

ஆனால் இவன் பாபம் செய்யலாகாதென்னும் அபிப்ராயத்தை மட்டும் தேசிகனும், தாதையும் அவனுமாயிருப்பவன் உட்கொள்ளுதற்கு அடி என்னெனில், [6]'ஸர்வ பா¹பே¹ப்⁴யோ மோக்ஷயிஷ்யாமி' என்று தான் சொல்லியிருப்பதுபற்றி, இவனுக்கு [7]உத்தராகம் புகுதராமல் இவன் ஸ்வரூபத்தைக் காப்பதும் தன்கடனாம், என்று திருவுள்ளம்பற்றி அவ்வுத்தராகம் [8]ப்ரஸங்கிக்க இடந்தராதிருக்க விரும்புகை. இதனால் இவன் பாபம் **செய்யாதிருக்கை அவன் கார்யமாய்** அவனுக்கு

[1] ஸமாதி - ஒன்றன் தர்மத்தைப் பிறிதொன்றன்மே லேற்றிக்கூறுதல்.

[2] வசனவ்யத்யயம் - பால்மயக்கம்.

[3] ப்ரதிஷேதம் - மறுப்பு.

[4] விஹிதம் - விதிக்கப்பட்டது.

[5] பந்தநம் - கட்டு.

[6] இ-ள். 'எல்லாப் பாவங்களினின்றும் (உன்னை) விடுவிப்பேன் என்பது.

[7] உத்தராகம் - ப்ரபத்திபண்ணினபின் சேதநனுடைய சோர்வினால் வரக்கடவ பாபம்.

[8] ப்ரஸங்கிக்க - தொடர.

[1]இஷ்டபலமாயிற்று; இது [2]ஸித்திக்கைக்கு இவன் செய்துபோதரும் ப்ரபந்நாநுஷ்டாநம் ஸாதநமாயிற்று.

**'என்று'** என்னும் [3]அநுகாரத்யோதகம், "அஞ்சல் என்ற கரதலம்" என்பதிற்போல இங்கு அர்த்தபரமாய்ப் 'பாபம் செய்யலாகாது' என்ற அர்த்தத்தை உட்கொண்டு: என்னும் பொருளுணர்த்துகிறது. இதற்கு **'உரைத்த'** என்பதனோடு அந்வயம்.

இங்கு 'என்று' என்ற அநுகாரத்தாற் சொல்லியபொருள் **மறம்செய்யாமை**யும், உரைத்த பொருள் **தர்மரூபமான** மெய் அருள் முதலிய ப்ரபந்நாநுஷ்டாநங்களுமாக வேறுவேறாயிருத்தலால் இவ்வாறு (மறஞ்செய்யலாகாதென்னும் பொருளையுட்கொண்டு என்று) பொருள் கொள்ளப்பட்டது.

இதனால், அவனுக்குப் பலமாய், அவனால் உட்கொள்ளப்பட்டதான மறஞ்செய்யாமைக்கு உபாயமாக, அவனால் உரைக்கப்பட்டன பின் வரும் ப்ரபந்நாநுஷ்டாநங்கள்: என்பது பொருளாம்.

இங்கு எம்பெருமானைத் **தேசிகன்** என்றது, அவன் தானே பரமாசார்யனாய்நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டநிலையைச் சொல்லியபடி; அன்றியும், பெரியபிராட்டியார்வாயிலாக த்வயத்தை உபதேசித்திருக்குமிருப்பைச்சொல்லியதென்னவுமாம்; அன்றியும், கீதாசார்யனாய், [4]சரமோபாயத்தை வெளியிட்டநிலையைச் சொல்லிய தென்னவுமாம்.

---

[1] இஷ்டபலம் - விரும்பியபயன்.

[2] ஸித்திக்கை - பெறுகை.

[3] அநுகாரத்யோதகம் - கொண்டுகூற்றுக்குறிப்பு.

[4] சரமோபாயம் - முடிவான வீட்டுநெறி.

இதனால் அவனுக்கும் இவனுக்கும் உள்ள ஆசார்ய சிஷ்ய ஸம்பந்தம் சொல்லிற்றாயிற்று. இதனால், அவன் சொல்லியபடி இவன் செய்கை [1]ப்ரீதிகாரிதகைங்கர்யமென்பதாயிற்று.

'தாதை' என்றது [2]'அஹம் பீ³ஜப்¹ரத³: பி¹தா¹' என்றும் [3]'பி¹தா¹ஹம்ஸ்ய ஜக³த¹:' என்றும் அவன் தானே சொல்லியபடி ஸகலஜகத்துக்கும் பரமபிதாவாய்நிற்கும் நிலையைச் சொல்லிற்று.

இதனால் அவனுக்கும் இவனுக்குமுள்ள பிதாபுத்ரசம்பந்தம் சொல்லிற்றாயிற்று. இதுவும் ப்ரீதிகாரிதகைங்கர்ய த்யோதகம்.

'அவன்' என்றது [4]பூர்வபராமர்சத்யோதகமாய் 'கையேறு சக்கரக்காவலன்' என்று இப்பாசுரத்துட் சொல்லப்பட்ட ஸர்வரக்ஷகனான ஸர்வேசுவரனைச் சொல்லிற்று.

இதனால் இவனுக்கும் அவனுக்குமுள்ள [5]ரக்ஷ்யரக்ஷக ஸம்பந்தம் சொல்லியபடி. இதுவும் அவன் சொல்லியபடி இவன்செய்கை ப்ரீதிகார்யம் என்பதைக் காட்டுவதாயிற்று.

இந்த மூன்றுவகையான ஸம்பந்தமும் சொல்லியது அவனுக்குள்ள ஏற்றம் தோற்றும் [6]குணக்ருத தாஸ்யக்குறிப்பாயிற்று.

தேசிகன், தாதை, அவன்: என்னும் பெயரடுக்கு, [7]கர்த்ருக்ரியா ஸம்பந்தத்தால் உரைத்த என்னும் பெயரெச்சவினையோடு அந்வயமாய்,

1. ப்ரீதிகாரிதகைங்கர்யம் - ஆசைப்பட்டுச்செய்யும் அடிமைப்பணி.
2. இதன்பொருள். 'நான் உயிர்ப்பயிர்விளைப்பதற்கு விதைவிதைப் பவனாதலால் தந்தையாகிறேன்' என்பது.
3. இ - ள். 'இந்த உலகுக்கு நான் தந்தையாயிருக்கிறேன்' என்பது.
4. பூர்வபராமர்சம் - பண்டறிசுட்டு.
5. ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தம் - பாதுகாத்தற்குரியனும் பாதுகாப்பவனும் ஆகிய இயைபு.
6. குணக்ருத தாஸ்யம் - குணத்தால் ஏடுபட்ட குற்றேவல்.
7. கர்த்ரு க்ரியா ஸம்பந்தம் - செய்பவனும் செயலும் ஆகிய இயைபு.

அப்பெயரெச்சவினை, [1]க்ரியாகர்ம ஸம்பந்தத்தால் மெய், அருள், (சூடிய) வெண்மதி, பொய், ஐயிரண்டொன்று: எனப் பின்வரும் வாக்கியங்களிலுள்ள [2]உத்தேசியகோடியில் அந்வயிக்கிறது.

**'மெய்'** என்றது ஸத்யம். அது சப்தவிஷயமாகவும், அர்த்தவிஷயமாகவும், ஜ்ஞாநவிஷயமாகவும் வழங்கப்படுமாயினும், அவற்றுள் இங்கு ஜ்ஞாநவிஷயமாய்நின்று **மெய்யுணர்வு** என்னும் தத்வ தர்சநத்தைச் சொல்லுகிறது.

அவனுரைத்த **தத்வதர்சந**மாவது: ப்ரக்ருதி புருஷ ஈசுவரரூபமான தத்வத்ரயத்தை உள்ளபடி அறிகை.

அவற்றுள், **ப்ரக்ருதிதத்வமாவது:**

[3]'இத³ம்சரீரம் கௌ¹ந்தே¹ய க்ஷேத்¹ரமித்¹ய⁴பி⁴தீ⁴யதே¹'

என்று சொல்லப்பட்ட **சரீரரூபமாயுள்ளது.** இது, 'பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம்.........**பிரகிருதி** மான் ஆங்காரம் மனம்' என்று சொல்லப்பட்ட இருபத்துநான்கு வகையின் [4]ஸமூஹமாயுள்ளது.

[5]'பூ⁴மிராபோ¹ அனலோ வாயு: க²ம்மநோ பு³த்³தி⁴ரேவச¹ |
அஹம்கா¹ர இதீ¹யம்மே பி⁴ந்நா ப்¹ரகி¹ருதி அஷ்ட¹தா⁴||'

1 க்ரியா கர்மஸம்பந்தம் - செயலும் செயப்படுபொருளும் ஆகிய இயைபு.

2 உத்தேசியகோடி - எழுவாய்வரிசை.

3 இதன்பொருள். 'அர்ஜுனா! இந்த உடல் உயிர்ப்பயிரின் வினைப்பயன் விளைநிலம் என்று சொல்லப்படுகிறது' என்பது.

4 ஸமூஹம் - கூட்டம்.

5 இதன்பொருள்: 'பூதமைந்தும் மனமும் புத்தியும் அகங்காரமும் ஆகிய இவையெட்டும் என்னுடைய மூலப்பகுதியின் வேறுபாடுகளாம்' என்பது.

என்று, இது அவனாலே [1]ஸங்க்ரஹித்துச் சொல்லப்பட்டது. "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின் - வகைதெரிவான் கட்டே யுலகு" என்பதும் இதுபற்றி வந்தது. 'மஹா பூ4தா1ன்யஹங்கா1ர:' என்று தொடங்கி இவற்றோடு இன்னும் சில கூட்டி வேறுவகையாகவும் சொல்லப்படும்.

**புருஷதத்வமாவது:**

[2]'ஏத1த்3யோ வேத்1தி1த1ம் ப்1ராஹு: க்ஷேத்1ரக்ஞ இதி1 த1த்3வித3:' என்று அவனாற் சொல்லப்பட்டதாய் அநேகமாய் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாய் [3]ஜ்ஞாதாவாய் [4]வர்த்திக்கும் ஆத்மஸ்வரூபமாம்.

பின் ஸர்வக்ஷேத்ரவர்த்தியாக ஈசுவரதத்வம் சொல்லப்படுவதால், இங்குச் சொல்லிய ஜீவாத்மா [5]ஏகைகக்ஷேத்ரவர்த்தியாய்ப் [6]பஹுவாயிருக்குமென்பது பெறப்பட்டது.

**ஈசுவரதத்வமாவது:**

[7]'க்ஷேத்1ரக்ஞம்சா1பி1 மாம் வித்3தி4 ஸர்வக்ஷேத்1ரேஷு பா4ரத1'

1 ஸங்க்ரஹித்துச்சொல்லல் - சுருங்கக்கூறல், அதாவது, (பூதங்கள் ஐந்தும், அவற்றின் புலன்கள் ஐந்தும், அவற்றின் பொறிகள் ஐந்தும், கருமேந்திரியங்களைந்தும் பூதங்களில் அடங்கக்கூறி, மூலப்ரகிருதியையும் இவற்றின் மூலகாரணமாகவைத்து இவற்றுள் அடங்கக்கூறினமையாம்.

2 இதன்பொருள். '(அறிவில்லாத) இந்தச்சரீரத்தை அறிவது யாதோ அதை (அந்தப் புருஷதத்வத்தை) ஜ்ஞாநிகள், க்ஷேத்ரஜ்ஞனென்று சொல்லுகிறார்கள்' என்பது.

3 ஜ்ஞாதா - அறிபவன்.

4 வர்த்தித்தல் - இருத்தல்.

5 ஏகைகக்ஷேத்ரவர்த்தி - ஒவ்வொரு சரீரத்திலும் தனித்தனியிருப்பது.

6 பஹு - பல.

7 இதன்பொருள். 'அர்ஜுனா! என்னையும் எல்லாக்ஷேத்ரங்களிலும் இருக்கும் க்ஷேத்ரஜ்ஞனாகவும் அறிவாயாக' என்பது.

என்று அவனாற் சொல்லப்பட்டதாய், ஏகமாய் [1]ஸர்வஜ்ஞதையோடு கூடி ஸர்வசரீரத்திலும் வர்த்திக்கும் பரமாத்மஸ்வரூபமாம்.

இம்மூன்று தத்வங்களையும் உள்ளபடி அறிகையே தத்வத்ரய ஜ்ஞாநமாம். இது,

[2]'க்ஷேத்[1]ர க்ஷேத்[1]ரஜ்ஞயோர் ஜ்ஞானம் யத்[1]தத்[1] ஜ்ஞானம் மத[1]ம்மம'

என்று அவனுக்கு [3]அபிமதமான தத்வதர்சநமாகச் சொல்லப்பட்டது. இதுவும் அவனாற் சொல்லப்பட்டமையால் **தேசிகனும் தாதையுமான** அவன் உரைத்த **மெய்யுணர்வா**யிற்று.

அன்றியும்

[4]உப[1]தே[3]க்ஷ்யந்தி[1] தே[1] ஞானம் ஞானினஸ்ஸத்[1]வ த[3]ர்சின: |
யேந பூ[4]தா[1]ன்யசேஷேன த்[3]ரக்ஷ்யஸ்யாத்[1]மன்யதோ[4] மயி ||

என்பதால் தத்வதர்சிகளாற் சொல்லப்படும் ஜ்ஞாநத்தில் விஷய மாகும்படி 'பூதாநி' என்று **ப்ரக்ருதி**யையும், 'ஆத்மநி' என்று **புருஷ**னையும், 'மயி' என்று **ஈசுவர**னையும் அவன் தானே சொல்லியிருப்பதாலும் இந்தத் தத்வத்ரயதர்சநரூபமான ஜ்ஞாநமே மெய்யுணர்வாகக் கொள்ளத்தக்கதாயிற்று.

இது, அமாநித்வம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். (இதனைப் பின்பு நிரூபிக்கலாகும்.)

1 ஸர்வஜ்ஞதை - முற்றறிவு.

2 இதன்பொருள். 'க்ஷேத்ரங்களையும் க்ஷேத்ரஜ்ஞர்களையும் அறியும் அறிவு எதுவோ அதுவே எனக்கு உடன்பாடான ஞானமாம்' என்பது.

3 அபிமதம் - உடன்பாடு.

4 இதன்பொருள் 'அர்ஜுனா! எந்த ஜ்ஞாநத்தினால் பூதப்பொருள் (உண்மைப்பொருள்)களையெல்லாம் உன்னிடத்திலும் என்னிடத்திலும் காண்பாயோ அந்த ஜ்ஞாநத்தைத் தத்வதரிசிகளான ஜ்ஞாநிகள் உனக்கு உபதேசிப்பார்கள்' என்பது.

இப்படியுள்ள தத்வத்ரயத்தை உள்ளபடி அறிகையாகிய தத்வதர்சநத்தாலே, [1]அநாத்யவித்யாவாஸனையால் வந்துள்ள [2]தேஹாத்மப்ரமம், [3]ஸ்வஸ்வாதந்த்ர்யபுத்தி முதலான அஜ்ஞாநங்கள் நீங்குமாதலால், அவற்றினடியாக வரக்கடவ பாபங்கள் வாராது ஒழியமென்பது கருதி, இத்தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநா நுஷ்டாநங்களெல்லாம், இவன் பாபம் செய்யலாகாதென்பதற்கு உபாயமாகச் சொல்லப்பட்டன.

இதனால் இவன் பாபம் செய்யலாகாது என்னும் [4]இஷ்டசித்தி அவனுக்கு உண்டாகிறது.

ஆனால், இவன் பாபம் செய்யாமைக்கு, இவன் செய்யும் தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களெல்லாம் இவன் செய்யும் [5]ஸாதநாநுஷ்டாநமாகாதோ?வென்னில், ஆகாது; இவனுக்கு [6]இஷ்டா நிஷ்டங்களிரண்டும் இல்லாமையாலும், ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தியில்லாமையாலும் இவன் புத்தியாலே இஷ்டபலஸித்தி இல்லையாம். இஷ்டபலஸித்தி இல்லையாகவே இவனுக்கு ஸாத நாநுஷ்டாநமும் இல்லை என்பதாயிற்று.

இஃதென்போலவென்னில், பகவானுக்கிஷ்டமான பத்மாஸுர சரீரவியோகமுண்டாகவேண்டி, பகவான் அவனை ஆசமனம்பண்ணி

---

1 அநாத்யவித்யாவாசனையால்வந்த - அறியாமையடியாகத் தொன்று தொட்டு வந்த.

2 தேஹாத்மப்ரமம் - உடலை யானென மயங்கும் மயக்கம்.

3 ஸ்வஸ்வாதந்த்ர்யபுத்தி - தனக்குத் தானே உரியனென்றெண்ணுகை.

4 இஷ்டஸித்தி - விரும்பியதுபெறுகை.

5 ஸாதநாநுஷ்டாநம் - தனக்குப்பயன்கருதிய ஒழுக்கம்.

6 இஷ்டாநிஷ்டங்கள் - விருப்பு வெறுப்புக்களுக் கிலக்காமவை.

வரச்சொன்னதுபோலே, இவனிடத்தில் பாபம் புகுதராதொழியவேண்டித் தத்வதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநம் சொல்லியதென்க.

பத்மாஸுரன் செய்த ஆசமநம் அவனுக்கிஷ்டமான சத்ரு நாசத்துக்கு ஸாதநமாகாது, பகவானுக்கிஷ்டமான பத்மாஸுர சரீர வியோகத்துக்கு ஸாதநமானதுபோலே, இவன்செய்யும் அநுஷ்டாநங்கள் இவனுக்கு இஷ்டஸாதநமாகாது, அவனுக்கு இஷ்டமான இவனிடம் பாபம் புகுதராமைக்கு உபாயமாகுமத்தனை.

[1]பகவத்ப்ராப்தி இவனுக்கு இஷ்டமாகாதோவென்னில், 'நெறிவாயிற் றானேயாய் நின்றான்' என்கிறபடியே [2]உபாயோபேயங்களிரண்டும் அவனாகையாலே, அது இவனுக்கு [3]ஸித்தமாயிருக்கையாலே ஸித்தோபாயநிஷ்டனான இவன் அதற்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணக்கடவனில்லை.

ஆனால் இவனுக்கு [4]நித்திய [5]நைமித்திக முதலான [6]சுக்ருதங்கள் செய்யவேண்டாவோவென்னில், - வேண்டும். அவற்றைத் தனக்கெனச் செய்யாது, அவனுக்குச் செய்யும் [7]தாஸ்யவ்ருத்திக்கு [8]யோக்யதாபாதகமான [9]ஸ்வரூபதர்மமாகக் கொண்டு, கரும்பு தின்பாரைப்போலே [10]ராகப்ராப்தமாக ருசியோடே செய்துபோதரும்.

1 பகவத்ப்ராப்தி - எம்பெருமானையடைகை.

2 உபாயோபேயம் - உபாயமும் உபேயமும்; உபாயம் - அடைவிப்பது; உபேயம் - அடையப்படுவது.

3 ஸித்தம் - பெறப்பட்டது.

4 நித்யம் - நாள்தோறும் தப்பாமே செய்யத்தக்கது.

5 நைமித்திகம் - யாதேனும் ஒரு நிமித்தம்பற்றிச் செய்யத்தக்கது.

6 சுக்ருதம் - நல்லொழுக்கம்.

7 தாஸ்யவ்ருத்தி - அடிமைத்தொழில்.

8 யோக்யதாபாதகம் - உரிமையுண்டாக்குவது.

9 ஸ்வரூபதர்மம் - தன்னியல்பு.

10 ராகப்ராப்தம் - ஆசையால் அடையப்படுவது.

இவ்விஷயங்களுக்கு இப்பாசுரத்தில் ஏதேனும் [1]ஜ்ஞாபக முண்டோவென்னில், மூன்று ஜ்ஞாபகங்களுண்டு. அவை:- (1) **தேசிகன் உரைத்த மெய்யே அருள் பொருள், (2) தாதை உரைத்த மெய்யே அருள் பொருள், (3) அவன்** (-காவலன்) **உரைத்த மெய்யே அருள் பொருள்:** என்று விசேஷித்துச் சொல்லப்படுவனவாம்.

இவற்றால், ப்ரபந்நாநுஷ்டாநத்தில் ப்ரபந்நனுடைய நினை விருக்கும்படி சொல்லப்படுகிறது. அஃ தெங்ஙனேயிருக்குமென்னில், **(1)** பரமாசார்யனாற் சொல்லப்பட்டமையால் **அவனுக்காக** இவை [2]அநுஷ்டேயம், **எனக்காகவில்லை; (2) பரமபிதாவாற்** சொல்லப்பட்டமையால் **அவனுக்காக** இவை அநுஷ்டேயம், **எனக்காகவில்லை.** (3) காவலனாகிய **ஸர்வேசுவரனாற்** சொல்லப்பட்டமையால் **அவனுக்காக** இவை அநுஷ்டேயம், **எனக்காகவில்லை:** என்றிருக்கும்.

இந்நினைவோடு இவன் அநுஷ்டிக்கையாலே அவ்வநுஷ்டாநங்கள் இவனுக்கு [3]வைதமும் ஸாதநாநுஷ்டாநமுமாகாது, ராகப்ராப்தங்களாகவே அநுஷ்டிக்கப்படுவனவாம்.

இவற்றிற்குப் பூர்வவ்ருத்தாந்தங்களுண்டோவென்னில், உண்டு.

(1) ஆழ்வார், 'பாடியாடிப் பணிமி னவன்தாள்களே' என்று [4]விதிப்ரயுக்தமாய் அருளிச்செய்திருப்பதை, மதுரகவியாழ்வார் **தேவுமற்றறியேன் குருகூர்நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே** என்று ராகப்ராப்தமாய் அநுஷ்டித்துக்காட்டினார்.

1 ஜ்ஞாபகம் - அறிகுறி.

2 அநுஷ்டேயம் - ஒழுகற்பாலது.

3 வைதம் - விதிக்கப்பட்டது.

4 விதிப்ரயுக்தம் - கட்டளையுடன்கூடியது.

பெரியபெருமாள் [1]நியமநம் என்னும் இந்நினைவாலே, திருப்பா ணாழ்வார் முநிவாஹநரானார்.

பெருமாளுக்கு [2]ஸ்த்ரீஹத்தியாய் அநிஷ்டமாயுள்ள தாடகாவதமும் ஆசார்யவசநம் என்னும் இந்நினைவுகொண்டு இஷ்டமாயிற்று. இதனை மஹாகவியான கம்பநாடர்,

*'ஐயன், அங்கது கேட்டு அறனல்லவும்*
*எய்தினால் 'அதுசெய்க' என்றேவினால்*
*மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு*
*செய்கையன்றோ அறஞ் செய்யுமா றென்றான்.'*

என்று கூறியிருப்பதும் இங்கு நோக்கத்தகும்.

ஏகலவனுக்கு அநிஷ்டமாயுள்ள [3]அங்குஷ்டச்சேதநமும் ஆசார்ய வசநமென்னும் இந்நினைவால் இஷ்டமாயிற்று.

இந்த வ்ருத்தாந்தங்களைத் திருவுள்ளம் பற்றியே **"தேசிக னுரைத்த"** என்று விசேஷித்தபடி.

(2) பிதாவாயிருப்பவன் புத்திரனுக்கு அநிஷ்டமாயிருப்பதொன்றைச் செய்யச்சொன்னாலும், அதை அவன் இஷ்டமாகக் கொண்டு செய்வதே பித்ருத்ருப்திகரமாம். இந்நினைவுகொண்டு பரசுராமன் பித்ரு வாக்கியத்தால் தனக்கு அநிஷ்டமாயுள்ள [4]மாத்ருஹத்தியைச் செய்தான். அதனால் அந்த மாத்ருஹத்தியில் அவனுக்குக் [5]கர்த்ருத்வ [6]பலபோக்த்ருத்வங்களும் இல்லையாயின. இந்த வ்ருத்தாந்தந் தோன்றுமாறு **'தாதையுரைத்த'** என்று விசேஷிக்கப்பட்டது.

1 நியமனம் - கட்டளை.
2 ஸ்த்ரீஹத்தி - பெண்கொலை.
3 அங்குஷ்டச்சேதநம் - பெருவிரலைத்துண்டித்தல்.
4 மாத்ருஹத்தி - தாய்க்கொலை.
5 கர்த்ருத்வம் - செய்பவனாயிருக்குந்தன்மை.
6 பலபோக்த்ருத்வம் - பயன்நுகர்ச்சி.

(3) இனி, ரக்ஷகனான ஸர்வேசுவரன் சொல்வதை ரக்ஷ்ய கோடியிலுள்ளார் [1]க்ருத்யாக்ருத்யவிசாரமில்லாமலே செய்யக்கடவர். ஸர்வேசுவரனிட்ட கட்டளையாலே, அவனுக்காக ருத்ரன் ஸம்ஹாரகர்த்தாவாய் [2]ஜீவவதம் செய்துபோதரும்; அந்நினைவால் அவனுக்கு ஜீவவதத்தில் கர்த்ருத்வ பலபோக்த்ருத்வங்கள் இல்லையாயின. அவனே தனக்கெனச் செய்த ப்ருஹ்மசிரச்சேதத்தில் கர்த்ருத்வபலஸங்கங்கள் உண்டானவாறு கண்டுகொள்க. இவ்வர்த்தம் தோன்றுமாறு "**அவன் உரைத்த**" என்று விசேஷிக்கப்பட்டது.

இந்த வ்ருத்தாந்தங்களெல்லாம் குறிப்பாற்கொள்ளுமாறு சொல்லப்பட்டமையால் இவனுக்குள்ள ஏற்றம் தோற்றும் ஸ்வரூபக்ருத தாஸ்யமும் சொல்லியவாறாயிற்று.

இவ்வாறு தனக்கென்னாது அவனுக்கென்று செய்யும் ஸ்த்ரீஹத்தி மாத்ருஹத்தி [3]ஜீவஹத்திகளும் [4]ஸ்வரூபக்ருதமான தாஸ்யவ்ருத்திக்கு இலக்காய் இஷ்டமாம்போது, இஷ்டமான தத்வதர்சநம் முதலான ப்ரபந்நா நுஷ்டாநங்களெல்லாம், பழம் நழுவிப் பாலில்விழுந்ததுபோலேயும், பிணிக்கு மருந்தான தேவாமிருதமே [5]போக்யபுத்தியால் உண வானாற்போலேயும் இஷ்டதமமாகக்கொண்டு அத்யந்தப்ரீதியோடு ராகப்ராப்தமாக அநுஷ்டிக்கத் தட்டில்லை.

இவ்வர்த்தத்தை [6]ஸ்திரீகரிக்கவேண்டியே (1) **தேசிகனுரைத்த** (2) தாதையுரைத்த, (3) அவனுரைத்த என்று மும்முறைசொல்லி நிரூபிக்கலாயிற்று.

1 க்ருத்யாக்ருத்யவிசாரம்-இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்னும் ஆராய்ச்சி.
2 ஜீவவதம் - உயிர்க்கொலை.
3 ஜீவஹத்தி - உயிர்க்கொலை.
4 ஸ்வரூபக்ருததாஸ்யம் - இயல்பாற்செய்யும் குற்றேவல்.
5 போக்யபுத்தி - இன்பநுகர்தற்குரியதென்னும் நினைவு.
6 ஸ்திரீகரிக்க - நிலைநாட்ட.

ஆனால் இவ்வநுஷ்டாநங்களில் இவனுக்குப் [1]பரார்த்தகர்த்ருத்வ பலபோகங்களும் இல்லையோ வென்னில், இவன்புத்தியால் இல்லை. அதற்கு அடி என்னெனில், இவன் செய்யும் [2]ஸத்கர்மங்களெல்லாம்

[3]'ஸ்வசேஷபூ⁴தே¹ந மயா ஸ்வீயை: ஸர்வப¹ரிச்¹ச²தை³: ।
விதா⁴து¹ம் ப்¹ரீத¹மாத்¹மானம் தே³வ: ப்¹ரக்¹ரமதே¹ஸ்வயம்' ॥

என்று [4]பகவத்கர்த்ருகங்களாகவே இவனால் கருதப்பட்டமையாலும் இவனுக்கு அஹங்கார நிவ்ருத்திவந்தமையாலும் அவற்றில் **கர்த்ருத்வமில்லை.** தன்னை அவற்றிற்குக் [5]**கரணமாகச்** சொல்லியபடியால் [6]**பலபோகமும்** இவன்புத்தியால் இல்லையாயிற்று.

ஆகவே, இவன் செய்யும் ஸுக்ருதங்களெல்லாம் இவன் செய்தனவாகாமையால் "க¹ர்மண்யக¹ர்ம ய: ப¹ச்யேத்¹" என்கிறபடியே கர்மாநுஷ்டாநத்தில், [7]கர்மேதரமான **ஸ்வஸ்வரூபஜ்ஞானத்தைப்** பார்ப்பவனாகிறான் என்பதாயிற்று.

**'அருளே பொருளாம்'** என்றது அருள் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநங்களும் இவன்செய்யும் ப்ரபந்நாநுஷ்டாநமாகிற நிஷ்காம்ய யஜ்ஞவிசேஷத்துக்கு யஜ்ஞோபகரணங்களான பதார்த்தவிசேஷங்களாம் என்றவாறு.

1 பரார்த்தம் - பிறர்பொருட்டு.

2 ஸத்கர்மம் - நல்லொழுக்கம்.

3 இதன்பொருள்: 'ஸர்வேசுவரன், தன் அடியனான என்னாலே, தன்னுடைய எல்லா உபகரணங்களாலும் தன்னை உவப்புடையனாக்கவேண்டித் தானே இந்நற்கருமத்தைச் செய்யத்தொடங்குகிறான்' என்பது.

4 பகவத்கர்த்ருகம் - இறைவன்செயல்.

5 கரணம் - கருவி.

6 பலபோகம் - பயனுகர்வு.

7 கர்மேதரம் - கர்மத்தின் வேறானது.

அருளாவது: தத்வதர்சநம் அடியாகவரும் [1]பூததயையாகிய ஸமதர்சநம். இது,

[2]ஆத்[1]மௌப[1]ம்யேன ஸர்வத்[1]ரஸமம் ப[1]ச்யதி[1] யோஅர்ஜுன ।
ஸுக[2]ம்வா யதி[3]வா து[3]:க[2]ம் ஸ யோகீ[3] ப[1]ரமோ மத[1]: ॥

என்று அவனாற் சொல்லப்பட்ட ஸமதர்சநமாயிற்று. இதையே [3]பரஸம்ருத்தி என்பர்.

இது, இவன் எப்படி அவனுக்கு சரீரமோ அப்படியே ஸகல ஜீவர்களும் அவனுக்கு சரீரமாகையாலே, சரீரத்துக்குச் செய்யும் அநிஷ்டங்கள் [4]சரீரிக்கு [5]அஸஹ்யமாகும் என்றெண்ணிப் [6]பரபீடநாதி பாபங்களைச் செய்யாமைக்கு அடியாயிற்று. [7]அபக்ஷ்யபக்ஷணம் [8]அபேயபாநம் முதலிய [9]நிஷித்தகர்மங்களைச் செய்யாமைக்கு அடி என்னென்னில், அவனுக்கு சரீரமாயுள்ள தன்னைத் தான் அழுக்காக்கலாகாதென்னும் இந் நினைவாம் என்க. இதனால், இவன் ஸுக்ருதம் செய்கைக்கு [10]பலாபிஸந்தியும்; [11]துஷ்க்ருதநிவ்ருத்திக்கு பாப[12]பீதியும் காரணமில்லை என்பது பெறப்பட்டது.

[1] பூததயை - உயிர்களிடத்து இரக்கம்.
[2] இதன்பொருள்: 'யாவனொருவன் சுகதுக்கங்களைத் தன் ஒப்புமையுணர்வால் எல்லா உயிர்களிடத்தும் பார்க்கிறானோ அவன் பரமயோகியென்பது மேலானகொள்கை' என்பதாம்.
[3] பரஸம்ருத்தி - பிறர்க்குநலங்கருதல்.
[4] சரீரி - உடலுடையான்.
[5] அஸஹ்யம் - பொறுத்தற்கரிய துன்பம்.
[6] பரபீடநம் - பிறரைவருத்துதல்.
[7] அபக்ஷ்யபக்ஷணம் - உண்ணலாகாததை உண்ணல்.
[8] அபேயபாநம் - பருகலாகாததைப் பருகல்.
[9] நிஷித்தம் - மறுக்கப்பட்டது.
[10] பலாபிஸந்தி - பயன்கருதுகை.
[11] துஷ்க்ருதம் - தீயசெயல்.
[12] பீதி - அச்சம்.

இப்படியே மற்றுமுள்ள ப்ரபந்நாநுஷ்டாநங்களும் இவன் பாபம்செய்யாமைக்கு அடியாயிருப்பதை ஏற்றபெற்றி ஆராய்ந்து அறிந்து கொள்ளத்தகும்.

அவன் சொல்லிய [1]அமாநித்வம் முதலான ஜ்ஞாநா நுஷ்டாநங்களின் [2]அவஸாநத்திலுள்ள தத்வார்த்ததர்சநத்தை (-மெய்ப்பொருளுணர்வை) இதில் மெய்யென்று முதலிற் சொல்லி யிருப்பதால், அம்மெய்ப்பொருளுணர்வு, அதற்குமுன்பு சொல்லப்பட்டுள்ள அமாநித்வமாதியான ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கெல்லாம் [3]உபலக்ஷண மாயிற்று. அவை:-

> [4]அமானித்1வம் அத3ம்பி4த்1வம் அஹிம்ஸா க்ஷாந்தி1ரார்ஜவம் |
> ஆசா1ர்யோபா1ஸநம் சௌச1ம் ஸ்தை2ர்யமாத்1ம விநிக்3ரஹ: ||
>
> இந்தி3ரியார்தே2ஷு வைராக்3யம் அநஹங்கா1ர ஏவச1 |
> ஜன்ம மிருத்1யு ஜராவ்யாதி4 து3:க2 தோ3ஷாநு த3ர்சனம் ||
> அஸக்1தி1ரனபி4ஷ்வங்க3: புத்1ரதா3ரக்3ருஹாதி3ஷு |

---

1 அமாநித்வம் - தன்மதிப்பின்மை.

2 அவஸாநம் - முடிவு.

3 உபலக்ஷணம் - ஒருமொழி ஒழிந்த தன்னினப்பொருளையுங் கொள்ளற்குரியதாதல்.

4 இ-ள்: 'தன்மதிப்பின்மை, ஆடம்பரமின்மை, இன்னாசெய்யாமை, பொறுமை, நேர்மை, குருவழிபாடு, தூய்மை, ஒருநிலை, மனனடக்கம், புலனடக்கம், செருக்கின்மை, பிறப்பும் இறப்பும் மூப்பும் பிணியும் துன்பமுமாகிய ஸம்ஸாரதோஷங்களையறிதல், பற்றின்மை, சமநிலை, பகவத்பக்தி, ஒதுக்கிடத்திருப்பு, லௌகிகஜனக் கூட்டங்களிற் சேர்ந்திருக்க விருப்பின்மை, வேதாந்தசாஸ்த்ரவிசாரம், மெய்யுணர்வால் காரியப்பொருள்களை ஆராய்ந்துணர்தல்: என்னும் இவை ஜ்ஞாநமென்று சொல்லப்படும். இவற்றின் மறுதலையுணர்வு அஜ்ஞாநமென்று சொல்லப்படும்'. என்பது.

நித்1யம்ச1 ஸமசி1த்1த1த்1வம் இஷ்டா1நிஷ்டோ1ப1ப1த்தி1ஷு ||

மயிசா1நந்ய யோகே3ன ப4க்1திரவ்யபி4சாரிணீ |
விவிக்1த்1த1தேச ஸேவித்1வ மரதி1ர்ஜன ஸம்ஸதி3 ||

அத்4யாத்1ம ஞான நித்1யத்1வம் த1த்1வ ஞானார்த2த3ர்சனம் |
ஏத1த் ஞானமிதி1ப்1ரோக்1த்1த1ம் அஞ்ஞானம் யத3தோ1ந்யதா2 ||

என்று சொல்லப்பட்டனவாம்.

இவை ஜ்ஞாநகார்யங்களாயும், ஜ்ஞாநகாரணங்களாயும், ஜ்ஞாநாநுஷ்டாநங்களாயும், ஜ்ஞாநவிசேஷங்களாயும் இருப்பதால் ஜ்ஞாநம் என்றே சொல்லப்பட்டன.

இவற்றை அநுஷ்டித்துவரும் ப்ரபந்நனிடம் இவற்றின் மறுதலையான அஜ்ஞாநங்கள் ஒன்றும் தோன்றமாட்டாதாகையால் அஜ்ஞாநகார்யங்களாகிய பாபங்களும் புகுதரமாட்டாவென்பது பற்றி, **தேசிகனும் தாதையும் அவனுமான** மூன்று நிலையில் நின்று அவை ஸர்வேசுவரனால் உரைக்கப்பட்டன என்றார். மேல்வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

தர்மமாயுள்ள இவற்றை **அறமென்னாது, 'பொருள்'** -என்ற ஸமாதியால், இவனுக்கு இவை ஸாதநாநுஷ்டாநமான தர்மமில்லை; கேவலம் பதார்த்தரூபம் என்பதும், இன்னும், இவை பொருள் என்றதனால், வேறு புருஷார்த்தரூபமான பொருள் இருந்தாலும், "அடங்கெழில் சம்பத் தடங்கக் கண்டு ஈசனடங்கெழி லஃதென்று அடங்குக" என்கிறபடியே [1]பகவத்விபூதியாயெண்ணி, மமகார நிவ்ருத்தியோடு, அவனுகப்புக்கு இலக்காக்கியிருப்பவனாதலால், இவனுக்கு அதில் [2]அந்வயமில்லை என்பதும் பெறப்படும்.

1 பகவத்விபூதி - ஈசுவரஸம்பத்து.

2 அந்வயம் - தொடர்பு.

இவற்றால் இவனுக்குத் தர்மார்த்தங்களிரண்டிலும் அந்வயம் இல்லையென்று கழிக்கப்பட்டனவாம். இவை [1]ஆகிஞ்சந்யஸூசகம்.

இனி, காமபுருஷார்த்தமும் இல்லை என்பது காட்டப்படும், 'சூடியவெண்மதி **காதலியாம்**' என்று.

இது இந்த யஜ்ஞதம்பதியின் ஸ்வரூபரூபகுணாதிகளையும், யஜ்ஞக்ருத்யங்களையும் சொல்லுகிறது.

இதனுள், '**மதி**' என்றது புத்தியாய், அது [2]ஆத்மாவலோகந ரூபமான ஜ்ஞாநாநுஷ்டாநத்தையுணர்த்துகிறது.

தத்வதர்சநத்திலுள்ள ஆத்மஜ்ஞாநம் [3]சாஸ்த்ரஜந்யமாகையால் அது [4]சாப்தமாகவும், இது ஆத்மஸாக்ஷாத்காரரூபமான அநுபவமாகவும் வேறுபட்டிருப்பதால் [5]புநருக்தமாகாது.

**காதலி** என்றது, ப்ரபந்நாநுஷ்டாநரூபமான இந்த நிஷ்காம்ய யஜ்ஞவிசேஷத்தை இவனுடனிருந்துசெய்யும் [6]'யஜ்ஞஸம்யுக்தையான தர்மபத்நியாக புத்தியைச் சொல்லுகிறது.

மதி, காதலி என்னும் இவ்விருபொருளும் வெண்மையால் விசேஷிக்கப்பட்டன. வெண்மையாவது தூய்மை; தனிமையுமாம்.

1 ஆகிஞ்சந்யம் - வேறு ஓராதரவுமின்மை.

2 ஆத்மாவலோகநம் - தன்னைத்தானே நோக்குகை.

3 சாஸ்த்ரஜந்யம் - நூலாற்றோன்றுவது.

4 சாப்தம் - சொல்லாற்றோன்றும் உணர்வு.

5 புநருக்தம் - கூறியது கூறல்.

6 யஜ்ஞஸம்யுக்தை - வேள்விக்கு உடனிருப்பவள்.

மதி (புத்தி)க்குத் தூய்மை [1]ப்ராக்ருதவிஷயப்பற்றாகியதோஷமின்றி [2]ப்ரக்ருதிவிமுக்தபரிசுத்தாத்மஸ்வரூபத்தை [3]விஷயீகரித்திருக்கை.

காதலிக்கு (லௌகிகயஜ்ஞபத்நிக்கு)த் தூய்மையாவது [4]அஸ்ப்ருஸ்யஸ்பர்சநாதி தோஷரஹிதையாய்ப் பர்த்ருஸம்யுக்தையாயிருக்கை. இந்த [5]ஸாதர்ம்யம்கொண்டு வெண்மதி காதலி என்று சொல்லப்பட்டது.

இவ்வாறன்றி, தேஹாத்மப்ரமரூபமான அஜ்ஞாநம் **காரறிவு** என்று சொல்லப்படுதலால், அதற்கு [6]ப்ரதிகோடியான சுத்தாத்ம தத்வஜ்ஞாநம் **வெண்மதி** எனப்பட்டது என்னவுமாம்.

**காதலி** என்பதற்குக் காதலனாகிய [7]பர்த்தாவைக் காதலிப்பவள் என்றும், பர்த்தாவால் காதலிக்கப்படுபவள் என்றும் இருபொருளும் உண்மையால், லௌகிக [8]யஜ்ஞதம்பதிகள்போலே [9]ஆத்மபுத்திகளுக்கும் [10]அந்யோந்யம் [11]ப்ரியதமத்வம் சொல்லப்பட்டது.

இது, [12]'ஸுக2ம் ஆத்1யந்தி1க1ம் யத்1த1த்3 பு3த்3தி4க்3ராஹ்யம் அதீ1ந்த்3ரியம்' என்று **அவனால் சொல்லப்பட்ட** ஆத்மாவலோகநரூபமான

[1] ப்ராக்ருதம் - உலகியல்.

[2] ப்ரக்ருதிவிமுக்தம் - சரீரத்தின் வேறானது.

[3] விஷயீகரித்திருக்கை - அறிவுக்கிலக்காகக்கொண்டிருக்கை.

[4] அஸ்ப்ருஸ்யஸ்பர்சநம் - தீண்டத்தகாததைத் தீண்டல்.

[5] ஸாதர்ம்யம் - ஒப்புமை.

[6] ப்ரதிகோடி - மறுதலை.

[7] பர்த்தா - (பாதுகாக்கும்) பொறுப்புடையான் (-கணவன்).

[8] யஜ்ஞதம்பதிகள் - வேள்விக்கிழவனும் கிழத்தியும்.

[9] ஆத்ம புத்திகளுக்கு - உயிர்க்கும் உணர்வுக்கும்.

[10] அந்யோந்யம் - ஒன்றற்கொன்று.

[11] ப்ரியதமத்வம் - விருப்பமிகுதி.

[12] இ-ள்: 'இந்திரியங்களுக்கு விஷயமாகாததும், அளவின்மிக்கதுமான ஆத்மஸுகம் எதுவோ அது அறிவாலறியத்தக்கது' என்பது.

புத்தி (மதி), [1]ஆத்யந்திகஸுகக்ராஹகஸாதநமானமையால் இந்த ஸாதர்ம்யத்தாலும் [2]ஆத்யந்திகஸுகக்ராஹக ஸாதநபூதையான காதலியாகச் சொல்லப்பட்டதாயிற்று. [3]ஆசிரயாசிரயீபாவஸம்பந்த ஸாதர்ம்யத்தாலும் காதலியாம்.

இந்த ஆத்மாவலோகநரூபமான ஜ்ஞாநம்,

*'ஆன்மபதிக் கன்றே அறக்கிழத்தி யாவகத்துத்*
*தான் மருவு சீவமதித் தையலாள் - ஆன்மசுகம்*
*விட்டுலக போகம் விரும்பலருங் கற்புநிலை*
*கெட்டு மடம்பட்ட கிறுக்கு'*

என்று ஆத்மாநுபவபரரான பிறராலும் ஆத்மாவுக்குத் தர்மபத்நியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் இதனால், அது ஆத்மாநுபவத்தை விட்டு இந்த்ரியவிஷயபோகத்திலிழிவது [4]வ்யபிசார தோஷமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த ஆத்மாவலோகநம்,

[5]யத்¹ ரோப¹ரமதே¹ சி¹த்¹த¹ம் நிருத்³த⁴ம் யோக³ ஸேவயா ।
யத்¹ர சை¹வாத்¹ மனாத்¹மானம் ப¹ச்யன் ஆத்¹மனி து¹ஷ்யதி¹ ॥

1 ஆத்யந்திகஸுகக்ராஹகசாதநம் - மிக்கசுகத்தைக் கொள்ளற்குரிய கருவி.

2 ஆத்யந்திகஸுகக்ராஹகஸாதநபூதை - மிக்கசுகத்தைக் கொள்ளுதற் குரிய கருவியாயுள்ளவள்.

3 ஆசிரயாசிரயீபாவஸம்பந்தம் - பற்றுக்கோடும் பற்றியிருப்பதுமான இயைபு.

4 வ்யபிசாரம் - நிலைதவறல்.

5 இவற்றின் கருத்து, "இந்திரியவிடயங்களிற் சென்று வருந்தாது தடுக்கப்பட்ட மனம் ஆறுதலடையுமிடமாயும், ஆன்மாவை மனத்தால் நினைந்து அகமகிழ்தற்கு இடமாயும், இந்திரியங்களுக்கெட்டாது புத்தியால் மட்டும் கவர்தற்குரிய பேரின்பம் நிகழ்தற் கிடமாயும், ஆன்மா மயக்கநிலையின்றித் தன் உண்மையான நிலையில் நிற்பதற்கு இடமாயும், ஆன்மா தானடையும் பெரும்பேறு அதனிற் பிறிதொன்றில்லையென்று எண்ணத்தக்கதாயும், பெருந்துன்ப முற்றாலும் சிறிதும் மனம் சலியாதுநிற்றற்கு இடமாயும், துக்கத்தொடர்புகளை அறுக்கத்தக்கதாயுமுள்ள ஆத்மாநுபவரூபமான யோக நிலை முயன்றடையத்தக்கது" என்பதாம்.

ஸுக[1]மாத்[1]யந்தி[1]க[1]ம் யத்தத்[3] பு[3]த[3]தி[4]க்ராஹ்ய மதீ[1]ந்த்[3]ரியம் |
வேத்[1]தி யத்[1]ர நசை[1]வாயம் ஸ்தி[2]த[1]ச்சலதி[1] த[1]த்வத[1]: ||

யம் லப்[3]த்[4]வா ப[1]ரம் லாப[4]ம் மந்யதே[1]நாதி[4]க[1]ம் த[1]த[1]: |
யஸ்மின் ஸ்தி[2]தோ[1] நது[3]:கே[2]ந கு[3]ருணாபி[1] விசா[1]ல்யதே[1] ||

த[1]ம் வித்[3]யாத்[3]து[3]:க[2] ஸம்யோக[3] வியோக[3]ம் யோக[3] முத்[1]த[1]மம் |
ஸநிச்ச[1]யேந யோக்[1]த[1]வ்யோ யோகோ[3] அநிர்விண்ணசே[1]த[1]ஸா ||

என்று அவனாலே சொல்லப்பட்ட **கேவலாத்மஸாக்ஷாத்காரரூப** மாகையால் **அவனுரைத்த வெண்மதியெனப்பட்டது.**

இந்தக் கேவலாத்மாநுபவம் [1]ஆத்மப்ராப்திகாமனுக்குச் சேருமானாலும், [2]பகவத்ப்ராப்திகாமனான இவனுக்கு பகவத்ஸம்பந்த விசிஷ்டமாகாத ஆத்மாநுபவம் [3]ஸ்வரூபவிருத்தமாய், சேராதாகையாலே, அது [4]ஸ்வரூபப்ரயுக்தமாம்படி **சூடியவெண்மதி** யென்று விசேஷிக்கப்பட்டது. வெண்மை, கேவலம், சுத்தம் என்பன பரியாயம்.

பகவத்ஸம்பந்தவிசிஷ்டமான பரிசுத்தாத்மஜ்ஞாநத்தோடு கூடியே ப்ரபந்நாநுஷ்டாநம் நடைபெறுவதாகையால், இந்த ப்ரபந்நா நுஷ்டாநமாகிற நிஷ்காம்யயஜ்ஞவிசேஷத்துக்கு அந்த பகவத்ஸம்பந்த விசிஷ்டமான பரிசுத்தாத்மஜ்ஞாநம் [5]யஜ்ஞகர்த்தாவுடன் கூடியிருக்கும் தர்மபத்நியாகக் கொள்ளத்தக்கதாயிற்று.

இங்கு இவ்வாத்மஜ்ஞானம், [6]ஆத்மநிஷ்டமான [7]பகவத்தாஸ்ய

1 ஆத்மப்ராப்திகாமன் - தன்னையடையவிரும்புமவன்.
2 பகவத்ப்ராப்திகாமன் - ஈசுவரனையடையவிரும்புமவன்.
3 ஸ்வரூபவிருத்தம் - தன்னிலையழிவு.
4 ஸ்வரூபப்ரயுக்தம் - தன்னிலைக்குரியது.
5 யஜ்ஞகர்த்தா - வேள்வியியற்றுவோன்.
6 ஆத்மநிஷ்டம் - ஆன்மாவிலுள்ளது.
7 பகவத்தாஸ்யநிரூபகம் - இறைவனுக்கு அடிமையென்பதைக் குறிப்பது.

நிரூபகங்களாயுள்ள [1]அசேஷசேஷவ்ருத்திகளையும் [2]விஷயீகரிக்கும் என்பது போதர, **வெண்மதி** (-பரிசுத்தாத்மஜ்ஞாநம்) என்று சொல்லியதோடமையாது, **சூடிய**வெண்மதி என்று விசேஷிக்கப்பட்டது. **சூடிய** என்னும் இது ஆத்மநிஷ்டமான பகவச்சேஷத்வஸூசகமாய், கேவலாத்மஜ்ஞாநத்தை வ்யாவர்த்திக்கிறது.

**சூடிய** என்னும் [3]க்ரியாபதார்த்தஸாமர்த்யத்தால் சூடுதற்கு இடம் **தலை** என்பதும், அதற்குச் செயப்படுபொருள் **மலர்மாலை** என்பதும் 'சூடிக்கொடுத்தாள்' என்பதிற்போலே தானே பெறப்படும். [4]லௌகிகயஜ்ஞபத்நியிடம் இவையிரண்டும் [5]ப்ரஸித்தம்.

இதனால், சூடியவெண்மதி காதலியாம் என்பதற்கு மலர்மாலை தலைமீதுசூடியபுத்தி, மலர்மாலை தலைமீதுசூடிய காதலியாம் என்பது பொருளாயிற்று.

இப்பொருளின் உபலக்ஷணக்குறிப்பாலே, லௌகிகயஜ்ஞ தம்பதிகளிடமுள்ள [6]மால்யாநுலேபநாத்யலங்காரங்களும், யஜ்ஞ க்ருத்யங்களும் கொள்ளப்படும். அந்த ஸாதர்ம்யத்தாலே இந்த ப்ரபந்நா நுஷ்டாநயஜ்ஞதம்பதிகளிடம், திருமணித்தாழ்வடம்புனைதல் திருப் பவித்ரமாலையணிதல் த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணம் முதலான வேஷங்களும், ப்ரபந்நாநுஷ்டாநத்துக்குரிய கர்மாநுஷ்டாநங்களும், பகவதாராதந க்ருத்யங்களும் எல்லாம் கொள்ளத்தகும்.

---

1 அசேஷசேஷவ்ருத்தி - எல்லாப்பணிவிடையும் செய்கை.

2 விஷயீகரிக்கும் - புலப்படுக்கும்.

3 க்ரியாபதார்த்தஸாமர்த்யம் - வினைச்சொற்பொருளாற்றல்.

4 லௌகிகயஜ்ஞபத்நி - உலகியல்வேள்விக்குரியாள்.

5 ப்ரஸித்தம் - வெளிப்படை.

6 மால்யாநுலேபநம்: மால்யம் - மாலை. அநுலேபநம் - பூச்சு.

இவற்றால் இவன் பகவதாராதநபரனாய் பகவத்ப்ரஸாதஸ்வீகாரம் முதலான அசேஷசேஷவ்ருத்தியும்செய்துபோருகை சூடிய என்னும் விசேஷணத்தால் பெறப்படும்.

சூடிய என்னும் இவ்விசேஷணம் ஆத்மஜ்ஞாநமான காதலியிடம் எங்ஙனேகூடும்? என்னில், -இவன் செய்யும் ஆத்மாவலோகநம் இவனிடத்துள்ள பகவச்சேஷத்வ த்யோதகமான [1]விசிஷ்டவேஷத்தையும் விஷயீகரித்திருக்குமாகையால், இவனுக்கும் அவனுக்குமுள்ள [2]சேஷசேஷீபாவ சம்பந்தத்தால், அவனுக்குள்ள [3]அதிசயத்தை விளக்கவேண்டி, இவனுக்குள்ள [4]தாஸ்யவ்ருத்தியெல்லாம் தோன்றுமாறு, 'உடுத்துக் களைந்த நின் பீதகவாடை யுடுத்துக் கலத்ததுண்டு - தொடுத்த துழாய்மலர் **சூடிக்களைந்தன சூடுமித் தொண்டர்களோம்**' என்கிறபடியே இவன் தரித்திருக்கும் மால்யாநுலேபந வஸ்த்ர பூஷணாதிகளையும், பகவத் [5]பரிசர்யைகளையும், பகவத்ப்ரஸாதஸ்வீகார த்யோதகமான **துழாய்மாலை மலர்மாலை சூடியிருப்பதையும்** இவனை விஷயீகரிக்கும் **பரிசுத்தாத்மஜ்ஞாநமும்** கண்ணாடிபோலே தானும் தரித்துக்காட்டுமாகையாலே அது 'சூடிய வெண்மதி'யென்று சொல்லப் பட்டது [6]உபபந்நமாமென்க.

ஆனால், ஜ்ஞாநாநந்தமயமாய் [7]நிராகாரமான ஆத்மஸ்வரூபத்தை விஷயீகரிக்கும் ஆத்மஜ்ஞாநத்தில், [8]ஸாகாரமான இவன் சரீரமும் அதில்

[1] விசிஷ்டவேஷம் - ஆன்மா உடலுடன் கூடியநிலை.

[2] சேஷசேஷீபாவசம்பந்தம் - ஆண்டானடிமைத்திறம்.

[3] அதிசயம் - உயர்வு.

[4] தாஸ்யவ்ருத்தி - அடிமைத்தொழில்.

[5] பரிசர்யை - பணிவிடை.

[6] உபபந்நம் - பொருந்தியது.

[7] நிராகாரம் - வடிவில்லாதது.

[8] ஸாகாரம் - வடிவுடன்கூடியது.

தரித்திருக்கும் வேஷங்களும், அவற்றோடு செய்யும் [1]சேஷவ்ருத்திகளும் எங்ஙனம் தோன்றும் என்னில்,

“உப1தே3க்ஷ்யந்தி1 தே1 ஞானம் ஞானினஸ்த1த்1வத3ர்சின: |
யேந பூ4தா1ன்யசேஷேண த்3ரக்ஷ்யந் ஆத்1மன்யதோ2மயி” ||

என்பதனால், ‘எந்த ஆத்மதத்வஜ்ஞாநத்தாலே (ஸாகாரமாயுள்ள) **ஸமஸ்தமான பூதப்பொருள்களையும்** (நிராகாரமாயுள்ள) **ஆத்மாவினிடத்திலும், அப்படியே என்னிடத்திலும் பார்ப்பாயோ அந்த ஜ்ஞாநத்தை தத்வதர்சிகளான ஜ்ஞாநிகள் உனக்கு உபதேசிப்பார்கள்;** என்று அர்ஜுனனை நோக்கி அவனே சொல்லியிருப்பதால் தோன்றுமென்க.

அன்றியும்,

“ஸர்வ பூ4த1ஸ்த1மாத்1மானம் ஸர்வபூ4தா1நிசாத்1மநி
ஈக்ஷதே1 யோக3யுக்1தா1த்மா”

என்பதனால், ‘யோகநிஷ்டனாயுள்ள தான், தன்னை ஸமஸ்தமான பூதப்பொருள்களிலும் இருப்பவனாகவும், **ஸமஸ்தமான பூதப்பொருள்களும் ஆத்மாவாகிய தன்னிடத்திலிருப்பனவாகவும் பார்க்கிறான்’** என்று சொல்லியிருப்பதாலும், இவன் செய்யும் ஆத்மதர்சநத்தில் ஸாகாரமான இவன் விசிஷ்டரூபமும், பகவத்தாஸ்ய ஸூசகங்களான வேஷங்களும், இவன் [2]சேஷிபக்கல் செய்யும் அசேஷசேஷவ்ருத்திகளும் [3]ஸ்ம்ருதிவிஷயம்போலே இவன் [4]இச்சாதீநமாக, [5]விஷயமாமென்றே கொள்ளத்தகும்.

1 சேஷவ்ருத்தி - பணிவிடை.
2 சேஷி - ஆண்டான்.
3 ஸ்ம்ருதிவிஷயம் - நினைவிற்றோன்றுவது.
4 இச்சாதீநமாக - விருப்பம் அடியாக.
5 விஷயமாம் - புலப்படும்.

அன்றியும், 'ஸர்வத1: பா1ணிபா1த3ந்த1த் ஸர்வதோ1க்ஷி ஸிரோமுக1ம்' என்று தொடங்கி **ஆத்மஸ்வரூபமுழுதும், கையும் காலும் கண்ணும் தலையும் வாயும் பலசெயல்களும்** உண்டென்று அவனால் சொல்லப்பட்டிருப்பதால் இவன் [1]இச்சாநுகுணமான க்ரியைகளுடனே கூடிய [2]ஸாவயவசரீரரூபமாகவும் தோன்றத் தட்டில்லை. இதுகொண்டே, "வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து, அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை"யும் பொருந்துகிறது. இவன் தொழுகைக்கு அவனிடத்தும் **துயரறுசுடரடி**யும் தோன்றாநிற்கும்.

இவ்வாறே, இவன் செய்யும் ஆத்மாவலோகநம் பகவதநுபவ விசிஷ்டமாயிருக்கும் என்பது, (ஆத்மஸம்யமயோகாத்யாயாவஸாநத்தில்)

> [3]"யோகி3நாமபி1 ஸர்வேஷாம் மத்3க3தே1 நாந்த1ராத்1மனா ।
> ஸ்ரத்3தா4வாந் ப4ஜதே1யோ மாம் ஸமேயுக்1த1த1மோ மத1:" ॥

என்று அவன்தானே சொல்லியிருப்பதால் கொள்ளத்தக்கதாயிற்று.

இதனாலும், '**அவனுரைத்த சூடியவெண்மதி**' என்று ஆத்மாவலோகனம் விசேஷிக்கப்பட்டதென்றறியக்கிடக்கிறது.

1 இச்சாநுகுணம் - விருப்பத்தின்படி.

2 ஸாவயவம் - உறுப்புடன் கூடியது.

3 இதன் பொருள்:- 'ஆத்மதர்சநம்வல்ல யோகிகளுக்குள்ளே, சிரத்தையுடையவனாய் என்னைப்பற்றியிருக்கும் உள்நோக்குடைய மனத்தாலே, எவன் என்னை ஸேவிக்கிறனோ, அவன் யோகிகளிற் சிறந்தவனாயும் எனக்கு விருப்பமுள்ளவனாயும் இருக்கிறான்' என்பது. (இதில் உள்நோக்குள்ளமனம் என்றதனால், ஆத்மதர்சநத்தின் வாயிலாக பரமாத்மதர்சநம் செய்தற்குச் செல்லும் மனம் என்பதும், பஜநக்ரியையால், சேஷசேஷீபாவசம்பந்தம் கொண்டு என்னை ஆராதிப்பவன் என்பதும் சொல்லப்பட்டன.

இவனுக்கு, சூடிய வெண்மதியைக் காதலியாகச் சொன்னமையால் வேறு பத்நியிருந்தாலும் காதலுக்கு இலக்காக்கான் என்று [1]விஹிதவிஷய நிவ்ருத்தியும் சொல்லியதாயிற்று. ஆகவே இவனுக்குக் காம புருஷார்த்தமும் இல்லையென்பது கருத்து.

ஆனால் விஹிதவிஷயமான காமம் [2]"த$^{4}$ர்மாவிருத்$^{3}$தோ$^{4}$ பூ$^{4}$தே$^{1}$ஷு கா$^{1}$மோஸ்மி ப$^{4}$ரத$^{1}$ர்ஷப$^{4}$" என்று [3]உபாதேயமாம்படி சொல்லப் பட்டிருப்பதால், அதை நிவ்ருத்திக்கைக்கு அடி என்னென்னில், அது [4]ப்ரவ்ருத்திநிஷ்டனுக்கு உபாதேயமானாலும், [5]நிவ்ருத்திநிஷ்டனான இவனுக்கு, தேஹாத்மப்ரமமடியாகத் தோன்றி [6]ஸ்வார்த்தைக போகபுத்தியை யுண்டாக்கி [7]ஸ்வ்ரூபஹாநியைப் பிறப்பிக்கையாலும், **அவனுக்காக இவன் அது செய்யலாகாதாகையாலும்,** அது இவனுக்கு விரோதியென்று அவனாற் சொல்லப்பட்டிருக்கையாலும் [8]தியாஜ்ய மாயிற்று. அது இவனுக்கு விரோதியென்று அவனாலே சொல்லப் பட்டிருப்பதைப் பின்பு நிரூபிக்கலாகும்.

இதனளவும் இவனிடம் பாபம் புகுதராமைக்கு அவனுரைத்த மெய்யுணர்வு (-தத்வதர்சநம்) சொல்லி அம்மெய்யுணர்வடியாகத் தோன்றும் ஸமதர்சநம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநம்சொல்லி, அதனாலுண்டாகும் ஜ்ஞாநத்தால் ஸாக்ஷாத்கரிக்கப்படும் பகவத்ஸம்பந்த

[1] விஹிதவிஷய நிவ்ருத்தி - விதிக்கப்பட்ட கலவியையும் ஒழிதல்.

[2] இதன்பொருள். 'அர்ஜுநா! ப்ராணிகளிடத்தில் அறத்தொடுகூடிய காமமாயிருக்கிறேன்' என்பது.

[3] உபாதேயம் - கொள்ளத்தக்கது.

[4] ப்ரவ்ருத்திநிஷ்டன் - ஐசுவரியகாமன்.

[5] நிவ்ருத்திநிஷ்டன் - பகவத்ப்ராப்திகாமன்.

[6] ஸ்வார்த்தைக போகபுத்தி - தன்பொருட்டாகவே இன்பநுகரும் விருப்பம்.

[7] ஸ்வரூபஹாநி - தன்னியல்பழிதல்.

[8] த்யாஜ்யம் - தள்ளத்தக்கது.

விசிஷ்டமான பரிசுத்தாத்மஸ்வரூபம் சொல்லியவாறாயிற்று. இதுகொண்டே பகவத்பரிசர்யாரூபமான சேஷவ்ருத்திகளும் குறிப்பாற் சொல்லப்பட்டன. இவ்வநுஷ்டாநத்தால், அக[1]ர்மணிவ க[1]ர்மய: (ப[1]ஸ்யேத்[1]) என்று அவனாற் சொல்லப்பட்டபடியே கர்மேதரமான ஜ்ஞாநாநுஷ்டாநத்தில் பகவத்பரிசர்யாரூபமான கர்மாநுஷ்டாநங்களையும் அதற்கு அங்கமான நித்யகர்மாநுஷ்டாநங்களையும் பார்ப்பவனாகிறான் என்பதாயிற்று.

இனி அப்பரிசுத்தாத்மஸ்வரூப ஸாக்ஷாத்கார ஜ்ஞாநத்தை மறைத்து, யஜ்ஞோபகரணங்களாகச் சொல்லப்பட்டுள்ள அமாநித்வம் முதலான ஜ்ஞாநாநுஷ்டாநத்தை அழிக்கக்காத்திருக்கும் அகங்கார மமகாரங்களின் அடியாகத்தோன்றும் காமாதி ஹேயகுணங்களாகிய விரோதிகளை ஒழிக்கவேண்டி, அவ்விரோதிகள் இருக்கும் [1]தேசவிசேஷம் சொல்லுகிறது, '**பொய்யே பகைப்புலன்**' என்று.

**பொய்** என்றது கீழ் அவனுரைத்த **மெய்** என்னும் தத்வ ஜ்ஞாநாதிகளுக்கு [2]ப்ரதிகோடியான அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீத ஜ்ஞாநாதிகளை.

இவற்றுள், அஜ்ஞாநமாவது: மெய்யுணர்வை நிலைநிற்கச் செய்யாமல் ராஜஸதாமஸகுணங்களால் மறந்துவிடுகை.

அந்யதாஜ்ஞாநமாவது: பரிசுத்தாத்மாவாகிய தன்னைப் பரமாத்மா வென்று ப்ரமிக்கை.

விபரீதஜ்ஞாநமாவது: [3]அநாத்மாவான சரீரத்தில் [4]ஆத்மபுத்தி பண்ணுகை.

[1] தேசம் - இடம்

[2] ப்ரதிகோடி - மறுதலை.

[3] அநாத்மா - உயிர்ப்பொருளாகாதது.

[4] ஆத்மபுத்திபண்ணுகை - யானெனநினைக்கை.

இப்பொய்யுணர்வுகள் [1]ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநம் தோன்ற வொட்டாமல் ஆத்மஜ்ஞாநத்தை யொழித்து, இந்த யஜ்ஞத்தை யழிக்கக்காத்திருக்கும் அஹங்கார மமகாரமடியாகவரும் காமாதி ஹேயகுணங்களாகிய **விரோதிகளுக்கு** இடமாயிருத்தலால், **பகைப்புலன்** எனப்பட்டது.

பகைப்புலன் - பகையிருக்கும் இடம். புலம் என்னும் இடப்பெயர், ஈறுதிரிந்து, நலம் நலன் என்றானது போல் போலியாய்ப் புலன் என்றாயிற்று.

இப்பகைப்புலமாகிய பொய்யுணர்வு இவனால் அறிந்து ஒழித்தற்குரியதென்பது.

[2]"ஏத[1]த்[1] ஞானமிதி[1] ப்ரோக்[1]த[1]ம் அஞ்ஞானம் யத்[1]அதோ[1]ன்யதா[2]"
என்றும்,
[3]"அஞ்ஞானேனாவ்ருத[1]ம் ஞானம் தே[1]ந முஹ்யந்தி[1] ஜந்தவ:"
என்றும்,
[4]"ஞானேனது[1] த[1]த[3]ஞானம் ஏஷாம் நாசித[1]மாத்[1]மன: |
தே[1]ஷாமாதி[3]த்[1]யவத்[1] ஞானம் ப்[1]ரகா[1]சயதி[1] த[1]த்[1]ப[1]ரம்." ||
என்றும், அவனாற் சொல்லப்பட்டமையால் அறியத்தகும்.

'பொய்யே **பகை புலன்**' என்பது பாடமாயின் ஏகாரத்தைப் புலன் என்பதனோடும் கூட்டி, 'பொய்யே புலனே பகை' என்று அந்வயித்து, 'பொய்யும் புலனும் பகையாம்' என்று பொருள் கொள்க.

1 ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநம் - ஆன்மாவின் உண்மையுணர்வு.

2 இதன்பொருள்: 'அமாநித்வம் முதலாக முன்புசொல்லப்பட்ட ஜ்ஞாநாநுஷ்டாநங்களாகிய இவை ஜ்ஞாநமென்று சொல்லப்படும்; இவற்றொடு மாறுபட்டனவெல்லாம் அஜ்ஞாநமாம்' என்பது.

3 இ-ள்: 'அறிவு அறியாமையால் மறைக்கப்பெற்றிருத்தலால் உயிர்கள் மயங்குகின்றன' என்பது.

4 இ-ள்: 'யார்க்கு ஆத்மாவாகிய தன்னையறிதலால் தன்னையறியாமையாகிய தேஹாத்மப்ரமம் அழிந்ததோ அவர்க்குப் பின்பு சூர்யப்ரகாசம் போல் அறிவு ஒளிராநிற்கும்' என்பது.

பொய் என்பதற்கு முன்பு சொல்லியபடி அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களும், [1]புலன் என்பதற்கு அவையடியாக வரும் [2]விஷயஸங்கங்களும் பொருளாம்.

ஆகவே அவை காமாதிஹேயகுணங்களாகிய விரோதிகளுக்கு இருப்பிடமாகையால் இவையே பகையாம் என்பது போதரும்.

பரபந்நனாகிய இவனுக்குப் பகை யேதென்னில் ப்ராக்ருதசரீரமுள்ள அளவும் ப்ரக்ருதிஸம்பந்தம் இருப்பதால் [3]ப்ரக்ருதிநிஷ்டமான ரஜஸ் தமஸ்ஸுக்கள் தலையெடுக்கும்போது பூர்வவாசனையாலே தோன்றக் காத்திருக்கும் விஷயசங்கம் அடியாகக் காமாதிகள் தோன்றி ஆத்ம ஜ்ஞாநத்தைக் கெடுத்தழிக்கக்கூடுமாதலால் அவை விரோதியாமென்க. இதனை,

> [4]"த்[4]யாயதோ[1] விஷயாந் பு[1]ம்ஸ ஸங்க[3]ஸ்தே[1]ஷூப[1]ஜாயதே[1] |
> ஸங்கா[3]த்[1] ஸஞ்சா[1]யதே[1] கா[1]ம: கா[1]மாத்[1] க்[1]ரோதோ[4]பி[4]ஜாயதே[1] ||
> க்[1]ரோதா[4]த்[1] ப[4]வதி[1] ஸம்மோஹ: ஸம்மோஹாத்[1] ஸ்மிருதி[1] விப்[4]ரம: |
> ஸ்மிருதி[1] ப்[4]ரம்சாத்[1] பு[3]த[3]தி[4]நாச: பு[3]த்[3]தி[4]நாசாத்[1] ப்[1]ரணச்யதி[1]" ||
> என்றும்,

1 இங்கு, புலன் என்றது சப்தாதிவிஷயங்களுக்குப் பெயராய் அவற்றின் அநுபவத்துக்கு ஆயிற்று.

2 விஷயசங்கம் - விஷயசம்பந்தம்.

3 ப்ரக்ருதிநிஷ்டமான - அநாத்மதத்வகாரியமான சரீரத்தைப்பற்றியுள்ள.

4 இதன்பொருள்: 'சப்தாதி விஷயங்களின்நினைவால் அவற்றின் சம்பந்தம் உண்டாகிறது; அதனால் விஷயாநுபவ இச்சை உண்டாகிறது; விஷயாநுபவத்துக்குத் தடையுண்டாயவழி அதை ஒழிக்கக் கோபம் எழும்; கோபத்தால் அறிவழியும்; அதனால் நினைவுகெடும்; நினைவழிதலால் ஆராய்ச்சி (-தத்வவிசாரம்) அழியும்; ஆராய்ச்சியழிதலால் ஆன்மநாசமுண்டாம்' என்பது. (ஆன்மநாசமாவது - உயிர் உய்வின்றியொழிகை)

[1]"காம ஏஷ: க்[1]ரோத[4] ஏஷ: ரஜோகு[3]ண ஸமுத்[3]ப[4]வ: |
மஹாசனோ மஹாபா[1]ப்[1]மா வித்[3]த்[4]யேனம் இஹவைரிணம்" ||
என்றும்,

[2]"ஆவ்ருத[1]ம் ஞானமேதே[1]ன ஞாநிநோ நித்[1]யவைரிணா
கா[1]மரூபே[1]ண" என்றும்,

அவனுரைத்தவாற்றாலும், **அவனுரைத்த பொய்யே பகைப்புலம்** என்றார் என்று அறியலாம்.

அவ்விரோதிகளிருந்து ராஜ்யம் பண்ணுகைக்கு அஜ்ஞாநம் இடமாயிருப்பதால் 'பொய்யே பகைப்புலன்' என்று சொல்லப்பட்டது. காமாதிகள் யஜ்ஞவிரோதிகளாம் என்பதனை

*'தருவனத்துள் யானியற்றும் தவவேள்விக்*
*கிடையூறாய்த் தவஞ் செய்வோர்கள்*
*வெருவரச்சென் றடை**காம வெகுளி**யென*
***நிருதரிடை** விலக்கா வண்ணம்'*

என்று [3]யஜ்ஞவிக்நகரரான ராக்ஷஸர்களுக்குக் காமக்ரோதங்கள் உபமானமாக மஹாகவியாற் சொல்லப்பட்டமையாலும் அறியலாம்.

இப்பகையை வெல்லுகைக்கு உபாயம் உண்டோவென்னில் உண்டென்கிறது, **'ஐயிரண்டொன்று பொருங்கருவி'** என்று.

**"ஐயிரண்டொன்று பொருங்கருவி"** என்றது 'அதிசயிக்கத் தக்க அர்த்தவிசேஷங்களையுடைய ரஹஸ்யத்ரயாநுஸந்தாநமானது அவனுடைய

---

1 இ-ள்: 'விஷய இச்சை க்ரோதமாயும் ரஜோகுணத்தினின்றுண்டானதாயும் பேருணவுடையதாயும் பெரும் பாபரூபமாயும் இருப்பதால் இந்தக் **காமத்தை விரோதி**யாக நினை' என்பது.

2 இ-ள்: 'இந்தக் காமரூபமான **நித்யவிரோதியால்** ஜ்ஞாநிகளுடைய ஜ்ஞாநம் **மறைக்கப்படுகிறது**'. என்பது.

3 யஜ்ஞவிக்நகரர் - வேள்விக் கிடையூறுவிளைப்போர்.

சக்ரப்ரயோகம்போலே அஜ்ஞானமாகிய பகைப்புலனை அழித்தற்கு முக்கிய சாதநமாம்' என்றவாறு.

"ஐ வியப்பாகும்" என்னும் [1]நிருக்தியாலே இங்கு, 'ஐ' என்னும் உரிச்சொல், வியப்புக்குறிப்புணர்த்துகிறது.

இரண்டும் ஒன்றும்: என்னும் எண்ணும்மைகள் செய்யுள் விகாரத்தாற் றொகுதலால் "இரண்டொன்று" என்றாயிற்று. அதனால் அது **மூன்று** என்னும் தொகைக்குறிப்புப்பெயராய் ரஹஸ்ய**த்ரயம்** என்னும் மந்த்ரவிசேஷங்களையுணர்த்துகிறது.

[2]உபதேசப்ராப்தமாயுள்ள மந்த்ரவிசேஷங்களை வெளிப்படையாகச் சொல்லலாகாமையால் அவற்றை மறைத்துத் தொகைக் குறிப்பாற் சொல்லியதாயிற்று.

இதனை "மூன்றிலொரு மூன்றும் மூவிரண்டும் முந்நான்கும் - தோன்றத் தொலையும் துயர்" என இவர் தாமே முன்னும் உரைத்திருப்பதுகொண்டும் அறியலாம்.

இனி, இரண்டொன்று என்றது, இரண்டும் ஒன்றும் மூன்றாய் மூன்று அக்ஷரங்களையுடைய ப்ரணவத்தின் [3]அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

அன்றியும், ப்ரணவம் ஒன்றும் [4]ஸகண்டநமஸ் இரண்டும் ஆக இம்மூன்றின் அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

1 நிருக்தி - சொற்பொருள் வரையறுப்பு.

2 உபதேச ப்ராப்தம் - குருமொழியால் அடையப்பட்டது.

3 அர்த்தாநுசிந்தநம் - பொருளைச் சிந்தித்தல்.

4 ஸகண்டம் - பகுக்கப்பட்டது.

அன்றியும், ப்ரணவம் ஒன்றும் [1]அகண்டநமஸ் ஒன்றும், நாராயணபதம் ஒன்றும் ஆக இம்மூன்றினுடைய அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

அன்றியும், பெரிய திருமந்த்ரம் ஒன்றும், த்வய பூர்வோத்தர கண்டங்கள் இரண்டும் ஆக இம்மூன்றினுடைய அர்த்தாநுசிந்தந மென்னவுமாம்.

அன்றியும், [2]தந்த்ரோச்சாரணத்தாலே, ஐந்து என்னும் எண்ணுப்பெயர் செய்யுள்விகாரத்தாலேனும் அல்வழிச்சந்தியாலேனும் ஈற்றெழுத்தும் ஈற்றயலெழுத்தும் கெட்டு ஐ என்றாய் அது இரண்டு ஒன்று என்னும் எண்ணுடன்கூடி, [3]வ்யுத்க்ரமாக்ஷர ஸங்கியையாகிய எட்டு என்னும் தொகைக்குறிப்பால் எட்டுத் திருவெழுத்துக்களையுடைய பெரிய திருமந்த்ரம் என்னவுமாம்; அதன் அர்த்தாநுசிந்தநம் என்னவுமாம்.

இன்னும், தந்த்ரோச்சாரணத்தாலே, ஐயிரண்டு என்பது பத்தாய், பத்துத்திருவக்ஷரங்களையுடைய [4]த்வயோத்தரகண்டத்தைச் சொல்லுகிற தென்னவுமாம்.

இன்னும், தந்த்ரோச்சாரணத்தாலே, அவனால் சொல்லப்பட்ட ரஹஸ்யத்ரயம் என்னும் பொருளில், 'அ + இரண்டொன்று' என்னற்பாலது வரையறையின்மையால் யகரம்வர, அகர யகரங்கள் ஐகாரமாய், இடையே உடன்படுமெய்யான யகரம்பெற்று, 'ஐயிரண்டொன்று' என்று ஆயிற்று எனினும் அமையும். இங்கு அகரச்சுட்டு, அவனுரைத்த என்னும் விசேஷணத்தை [5]அதிகரித்து [6]உபஸம்ஹரித்துக் காட்டியதாயிற்று.

[1] அகண்டம் - பகுக்கப்படாதது.
[2] தந்த்ரோச்சாரணம் - இரட்டுறமொழிதல்.
[3] வ்யுத்க்ரமம் - எதிர்நிரல்.
[4] த்வயோத்தரகண்டம் - த்வயத்தின் பின்பகுதி.
[5] அதிகரித்து - தொடர்ந்துகூட்டி.
[6] உபஸம்ஹரித்து - முடித்து.

இன்னும் [1]யோகவிபாகத்தாலே 'ஒன்று பொருங்கருவி' என்றது, இவ்வர்த்தாநுசிந்தநங்களில் ஏதேனும் ஒன்றே, ஆத்மஸ்வரூப ப்ரகாசகமாகையாலே ஆத்மஜ்ஞாநவிரோதியான அஜ்ஞாநமடியாக வரும் அஹங்கார மமகாராதிகளாலுண்டாகிய காமாதி ஹேயகுணங்களான விரோதிபுகுதற்கு அவகாசமில்லாதிருக்கும்படி அவ்விரோதிகளை அவன்கையேறுசக்கரம் போல் ஒழிக்கவல்ல போர்ப்படையாம்: என்றவாறு.

இம் மந்த்ராநுசிந்தநங்களால், இந்த யஜ்ஞவிரோதிகளான காமாதிகளுக்கு இருப்பிடமான அஜ்ஞாந அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்கள் அழியுமாறெல்லாம் இங்கு விரித்துரைத்தல் இயலாதாதலால் அவற்றை இம் [2]மந்த்ரார்த்தநிஷ்டர்களான [3]ஆசார்யவர்யர்களிடமே கேட்டுணரத்தகும்.

இதுகாறும் கூறியவாற்றால், அஜ்ஞாநாதிகளால் அமாநித்வம் முதலான இந்த யஜ்ஞோபகரணங்கள் அழியாவண்ணம் அவனுக்காக ரஹஸ்யத்ரயார்த்தாநுசிந்தநம்செய்துகொண்டு இப்ரபந்நாநுஷ்டாந ரூபமான யஜ்ஞத்தைக் [4]கடைபோகச்செய்துபோருவர் 'காவலன் காவலடைந்தவர்' என்பது [5]இப்பாசுரார்த்த சேஷமாயிற்று.

ப்³ரஹ்மார்ப¹ணம் ப்³ரஹ்மஹவி; ப்³ரஹ்மாக்³நௌ ப்³ரஹ்மணாஹுத¹ம் |
ப்³ரஹ்மைவ தே¹ன க³ந்த¹வ்யம் ப்³ரஹ்மக¹ர்ம ஸமாதி⁴நா ||

ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகாய நம:

1 யோகவிபாகம் - கூடிப்பிரிதல்.
2 மந்த்ரார்த்தநிஷ்டர் - மந்திரத்தின்பொருளுணர்ந்தொழுகுமவர்.
3 ஆசார்யவர்யர் - குரவரிற் சிறந்தோர்.
4 கடைபோகச்செய்து - முற்றச் செய்து.
5 பாசுரார்த்தசேஷம் - செய்யுளின் பொருட்குறை.

# 'பொருத்தம் பொருந்தலும்' பாசுரப்பொருள்

ஸம்ஸார ஸாகரத்தில் நின்று கரையேற மாட்டாதே பரிதவிக்கும் சேதனர்களின் துர்க்கதியைக் கண்டிரங்கி அவர்களை உய்விக்கவேண்டி ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை அடியொற்றி ஸ்ரீ நிகமாந்த தேசிகன் அருளிச்செய்த தமிழ் ப்ரபந்தங்களில் "நவமணிமாலை" ஒன்றென்பது ஸுப்ரசித்தம். அதன் ஒன்பதாம் பாசுரம் அதற்குச் சிரோரத்னமாய் விளங்குகிறது. இப்பாசுரத்திலுள்ள சில குறிப்புக்களால் இது ஸ்வாமி நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்தின் முதற்பாசுரத்தின் வழிமொழியாய் இருக்குமென்று தோன்றுகிறது. திருவிருத்தப்பாசுரம் வருமாறு:

"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்
இந்நின்ற நீர்மை இனி யாமுறாமை உயிரளிப்பான்
எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா
மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே"

நவமணிமாலை ஒன்பதாம் பாசுரம் வருமாறு:

"பொருத்தம் பொருந்தலும் போகுந்தவற்றுடன் பொய்ம்மதிமேல்
விருத்தம் கலித்துறை மேவும் அழல்மதம் வேறினியென்?
திருந்தும் மனத்தினில் சேராயெமைத் தெய்வநாயக! நின்
வருத்தம் பொறாவருளால் மன்னடைக்கலம் கொண்டருளே."

விருத்தம் கலித்துறை மேவும் என்ற சாடூக்தி யாயுள்ள சொற்குறிப்பானது ஒவ்வொரு பாசுரமும் விருத்தம் என்றும், கலித்துறை என்றும் சொல்லும்படியாகப் பத்யத்வய லட்சணத்தோடு கூடிய திருவிருத்தத்தை ஸ்மரிப்பிக்கிறது. அப் ப்ரபந்தத்தின் அர்த்த சங்கிரகமாக

உள்ளது அதன் முதற்பாட்டு. அதில் "பொய்ந்நின்ற ஞானம்" என்றது இதில் "பொய்ம்மதி" என்றும் அதில் "பொல்லா ஒழுக்கு" என்றது இதில் பொருத்தம் பொருந்தலும் போகும் தவறு" என்றும் அதில் "அழுக்குடம்பு" என்றது இதில் சரீராத்ம பாவத்தால் "விருத்தம் கலித்துறை மேவும்யாம்" என்றும் அதில் "இந்நின்ற நீர்மை" என்றது "அழல் மதம்" என்றும் அதில் "இனியாமுறாமை" என்றதன் வாக்யார்த்த சேஷமான கைங்கர்யப் பிரார்த்தனை "அடைக்கலம் கொண்டருள்" என்றும், அதில் "யாம்" என்ற உளப்பாட்டுத்தன்மைப் பெயரே இதில் "எம்மை" என்றும் அதில் "இமையோர் தலைவர்" என்ற ஸம்புத்தியே இதில் தெய்வநாயக என்றும் சாப்தமாகவும் ஆர்த்தமாகவும் சொல்லப்பட்டமையால் இப்பாசுரம் அப்பாசுரத்தின் வழிமொழி என்று தோன்றுகிறது.

இது வழிமொழி என்பதனை ஸ்வாமியே "முந்தை மறைமொழிய வழிமொழி நீ யென்று முகுந்தனருள் தந்த பயன்பெற்றேன் நானே" என்று இதன் அடுத்த பாசுரத்தில் ஸாதித்திருப்பதால் அறியலாம். இங்கு முந்தை மறை என்றது "மூன்றிலொரு மூன்றும் மூவிரண்டும் முந்நான்கும்" என்று ப்ரபந்தார்த்த ஸங்கிரகமாகச் சொல்லப்பட்ட ரஹஸ்யத்ரயமும் ததுபப்ருஹ்மணங்களான தமிழ்மறைகளுமாம். "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மறைமொழிதானே மந்திரமென்ப" என்பது மந்திர லக்ஷணம். இதனால் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோம்" என்றவிடத்தும் தோன்றாதிருந்த ரஹஸ்யார்த்தங்களை அறிகின்றோம் என்றும் பொருள் கொள்ளற்கு இடம் ஆகிறது. மறை-ரஹஸ்யம்; நிலம் விஷய வாசகமாய் அர்த்தபரமாயிற்று. இதனாலும் ரஹஸ்யார்த்தப்பிரகாசங்கள் தமிழ்மறை என்பதும், அதன் வழிமொழியே இப்பிரபந்தம் என்பதும் பெறப்படும்.

இப்பாசுரத்தின் திணை-பாடாண். துறை-ஓம்படை வாழ்த்து. இப்பாசுர விருத்தி-கௌடப் பொருட்களாம். பொருள்கோள்-விற்பூட்டு,

சூத்திரயாப்பு. 'மேவும்' என்னும் பெயரெச்சம் இடைநிலை விளக்காய் நின்று "பொய்ம்மதி" எனபதனோடும், "அழல்மதம்" என்பதனோடும் கூடி "பொய்ம்மதி மேவும் எம்மை" எனவும் "அழல்மதம் மேவும் எம்மை" எனவும் அகப்பாட்டுத் தன்மைப் பன்மைப் பெயர்கொண்டு முடிய நின்றது. "திருத்தம் மனத்தினிற் சேரா" என்றது இடைநிலை எதிர்மறைப் பெயரெச்சம். "வருத்தம் பொறாவருளால்" - இடைநிலை. "எவன்" என்னும் வினாப்பெயர் "என்" என்றாய் ஈண்டு இன்மை குறித்து நின்றது. "மேலும்" என்னும் எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. "எம்மை" எனற்பாலது "எமை" என நின்றது. "அருள்க" என்னும் வியங்கோள் "அருள்" என ஈறுகெட்டு வேண்டிக் கோடற் பொருள் உணரநின்றது. "கொண்டருள்" என்பது ஒரு சொல். ஏகாரம் ஈற்றசை. "தவற்றுடன்" என்பது "கொண்டருள்" என்பதனோடும் "பொய் மதி" என்பதனோடும் முடிய நின்றது. இங்கு "அடைக்கலம்" இடைநிலை.

இதன் அந்வய்ம் வருமாறு:- "ஹே தெய்வநாயக! பொருத்தம் பொருந்தலும் போகுந்தவற்றுடன் எம்மை அடைக்கலம் கொண்டருள். பொய்மதி மேவும் எம்மை அடைக்கலம் கொண்டருள். விருத்தம் கலித்துறை மேவும் எம்மை அடைக்கலம் கொண்டருள். அழல்மதம் மேவும் எம்மை அடைக்கலம் கொண்டருள். திருத்தம் மனத்தினிற் சேரா எம்மை அடைக்கலம் கொண்டருள்; வேறு இனி என்; நின் வருத்தம் பொறாவருளால் எம்மை மன் அடைக்கலம் கொண்டருள்" என்டதாம். இது ப்ரத்யேகாந்வய வாக்யபந்தமாகக் கொள்ள நின்றது.

இனி இப்பாசுரப்பொருளின் முன்னுரை வருமாறு:- ஆக்கியோன் கூற்றாவதன்றி ஓம்படைத் துறையாங்கால் பொருள் பகவத் ஸ்ந்நிதியில் அஸ்மதாதிகள் அனுசந்திக்கவேண்டிய ஸ்வதோஷானுசந்தானக் கிரமத்தை ஆளவந்தார் "அபராத ஸஹஸ்ரபாஜனம்" என்னும் ச்லோகத்தாலே மாத்ருகையாக அனுஷ்டித்துக் காட்டியிருப்பதுபோல இவர் ஆசார்ய புருஷர்கள் தம் ஆச்ரித ஜனங்களோடே கூடிநின்று அனுஸந்திக்க

வேண்டிய ஸ்வதோஷாநுஸந்தானக் கிரமத்துக்கு மாத்ருகையாக ஜீவேச்வர ஸம்வாத கற்பனையால் உபர்யுபரி தோஷ பாஹுல்யாநுஸந்தானம் தோன்ற அநுபாஷித்துக் காட்டுகிறார். அதுவருமாறு:-

திருவஹீந்திரபுரத்து எம்பெருமான் ஸன்னிதியிலே ஒரு ஆசாரியபுருஷர் ஆச்ரித ஜனங்களோடு சென்று தெண்டனிட்டு எழுந்து கைகூப்பி நின்று ஸேவித்து நிற்கச் செய்தே ஸௌந்தர்யாதி விக்ரஹ குணங்களோடு ஔதார்ய வாத்ஸல்ய ஸௌசீல்ய ஸௌஹார்த்தங்கள் முதலான ஆத்ம குணங்களும் பிரகாசிப்பதுகண்டு அக்குணங்களுக்குத் தோற்று அடிமை செய்ய விரும்பி, பரத்வப்ரத்யபிஜ்ஞையோடே ஹே! தெய்வநாயக! என்று பெருமாளை சம்போதித்தனர். உடனே தெய்வநாயகன் அர்ச்சா சமாதிகலைந்து உமக்கு வேண்டியதைக்கேளும். கொடுப்போம் என்றான். "நாங்கள் கொள்ள வந்தோமில்லை கொடுக்க வநதோம்" என்றார் ஆசார்யர். அதற்குப் பெருமாள் அவாப்த ஸமஸ்த காமனாயுள்ள நமக்குக் கொள்ள வேண்டும் குறை ஒன்றும் இல்லையே. "குறைவொன்றுமில்லாத கோவிந்தா" என்றும் "கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என்வள்ளல்" என்றும் "குறையாதுமில்லாத கோவிந்தா" என்றும் அன்றோ ஆண்டாளும் ஆழ்வாரும் தேசிகனும் எம்மைக் கொண்டாடுவது! அப்படியிருக்க நீர் நான் கொள்ளும்படி சொல்லும் பொருள்தான் ஏது? என்று கேட்க, (எங்களை அடைக்கலம் கொண்டருள் என்னும் கருத்தால்) அடைக்கலம் கொண்டருள் என்றார் ஆசார்யன். (அடைக்கலம் = பாதுகாப்புக் கருதி அடைக்கப்பட்ட வஸ்து. ரக்ஷ்ய வஸ்து. இதன் கொள்கலம் ரக்ஷக வஸ்து.) இதுகேட்ட பெருமாள் நாம் ஸர்வ ஜகத் ரக்ஷண கர்த்தர்வன்றோ. நீங்கள் நம்முடைய ரக்ஷணத்தில் நின்றும் விலக்குண்டீர்களோ? (உமக்கும் நமக்குமுள்ள ரக்ஷ்யரக்ஷக சம்பந்தமும், தெய்வநாயகனாய் நாம் குற்றேவல் கொள்ளுதற்கேற்ற சேஷசேஷிபாவ சம்பந்தமும் ஸர்வ சேஷியான நமக்கு ஸித்தமாயுள்ளவையன்றோ) அப்படியிருக்கச்செய்தே இப்போது ரக்ஷகவரணம்பண்ணி வந்துநிற்பது ஏன் என்று கேட்க,

"ரக்ஷிதா ஸர்வ லோகானாம் ஸ்வஜனஸ்ய ச ரக்ஷிதா" என்கிறபடியே ஸாமான்ய ரக்ஷணம் ஒருபுறமிருக்கச்செய்தே ஸ்வஜன ரக்ஷணமான விசேஷ ரக்ஷணம் வேண்டி வந்தோம் என்னும் கருத்தால் "மன்னடைக்கலம் கொண்டருள் என்றான் ஆசார்யன். (மன்னுதல்- உடனுறைதல்.) அவனுக்கு ஸ்வஜனம் அடியார்களாகையாலே அடியார் குழாத்துள்வைத்து அணுக்கத்தொண்டு கொண்டருளவேணும் என்றதாயிற்று. அன்றிக்கே மன்னுதல் - நிலைபெறுதலாகையாலே, ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் செய்யக் கடவதான அசேஷசேஷவிருத்தியும் கொண்டு எங்களை ரக்ஷிக்கவேணும் என்பதாயிற்று. அதற்குப்பெருமாள் நம்முடைய ஸம்பந்தஜ்ஞானம் கொண்டு நீங்களே வந்து அடையலாமே என்ன, அந்த ஸம்பந்தஜ்ஞானம் ஒழியும்படியான மஹாபராதத்தைச் செய்துவிட்டோம். அந்த அபராதம் ப்ராயச்சித்தாதிகளால் போக்கத்தக்கதன்று. ஆகையால் ஸாபராதிகளாகவே எங்களை பரிக்ரஹிக்கவேணும் என்னும் கருத்தோடு இப்பாசுரம் தொடங்கப்படுகிறது. "பொருத்தம் பொருந்தலும் போகுந்தவற்றுடன்" என்று. இங்கு "உடன்" என்றது கொண்டருள் என்பதனோடு முடியும். அன்றிக்கே "பொய்மதி" என்பதனோடு முடிப்பினும் அமையும். இங்கு "எம்மை" என்றது தம்முடைய ஆச்ரித ஜனகோடியை அகப்படுத்திச் சொல்லியபடி. பொருத்தமாவது: வஸ்துக்கள் தம்முள் உள்ள தொடர்பு. பொருந்தி இருப்பதற்கேற்ற சம்பந்தம்: அது இங்கே (தெய்வநாயகன் ஸந்நிதியில் சேதனர்கள் பேசும் பேச்சு ஆகையாலே) ஜீவகோடிகளாகிய தமக்கும் தெய்வநாயகனுக்குமுள்ள ஜீவேசுவர ஸம்பந்தங்களாம். (அவை சரீரசரீரிபாவ ஸம்பந்தம் முதலாயின.) அவை பொருந்தலாவது: ஸம்யோக ஸம்பந்தம்போலே இடையே பொருத்துவிட்டுப்போகாமல், கடகபால சம்பந்தம் போலே ஒன்றாகவும் வேறாகவும் புத்தி பண்ணுதற்கேற்றதாய் நித்தியமாயிருக்கை. 'பொருந்தலும்' என்னும் உயர்வுசிறப்பும்மையால், ராஜசேவை செய்பவனும் ஏதேனும் ஒரு முக்கிய ஸம்பந்தங்கொண்டு அகம்படிமை செய்து போந்தாலும் அவனுக்கு

முகோல்லாச மில்லாதபோது அது ஒழிவதாயிருக்கும். அங்ஙனன்றிக்கே அனர்க்கமாயிருக்கும் பகவத் சம்பந்தம் நித்யமாய், 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்' என்று மேல்விழுந்து கொள்ளத்தக்க பெருமையுடையது என்னும் குறிப்புணர்த்தி நின்றது; ஒழிதற்குரியதன்று என்றபடி. அதாவது அவன் இவனை விடுவதில்லை, இவன் அவனை விலகியிருப்பதில்லை என்பதாம். "போகும்தவறு" என்றது ஒழிதற்கு உரியதல்லாத நித்ய ஸம்பந்தமும் ஒழியும்படியான தவறு என்பதாம். (தவறு, குற்றம், பிழைபாடு, அபசாரம் என்பன ஒருபொருட் சொற்கள்.) ஒரு நாளும் அழியாத நித்ய ஸம்பந்தத்துக்கு ஒழிகையாவது, இத்தலையில் ஸம்ஸாரி சேதனர்கள் ஸம்பந்தத்தை இசையாமையும், அதுகண்டு அத்தலையில் ஈச்வரன் அதனை உபேக்ஷித்து இருக்கையுமாம். அஃதெங்ஙனமென்னில்: அத்தலையில் உள்ள அநவதிக கருணையாலே இந்நித்ய சம்பந்தங்களைக் கொண்டு இவனைப் பரிக்கிரஹிக்கத் திருவுள்ளம்பற்றி "த்வம்மே"(நீ எனக்கு அடிமை) என்னுமளவில் "அஹம்மே" (நான் எனக்கே உரியவன்) என்றிருக்கும் இருப்பு. இங்கு "த்வம்மேஹம்மே" என்று தொடங்கிப் பட்டர் ஸாதித்தருளிய திவ்ய ஸூக்தியின் அர்த்தம் ஸ்மரிக்கத்தக்கது. இந்நிலை பகவத்சேஷத்வம் பாரதந்த்ர்யம் முதலான ஜீவஸ்ரூப தர்மங்களை அழித்துக் கொண்டு ஸ்வஸ்வாதந்த்ர்ய புத்தியைத் தோற்றுவிக்கையாலே ஆத்மாபஹார ரூபமான பரஸ்வத்வாபஹார சௌர்யம், ஸ்வாமித்ரோஹம் கிருதக்நதை முதலான உய்தியில் குற்றங்களுக்கெல்லாம் உடலாயிருக்கும். "உடன்" என்றது இப்பொழுதே என்றவாறாய். இப்படி மஹாபராதங்களை எங்களால் ஒழிக்க முடியாதாகையாலே, ப்ரம்மஹத்தியோடே வந்த கெண்டா கர்ணனைக் கொண்டாற் போலே எங்களையும் பாதகங்களோடே அடைக்கலம் கொண்டருளவேணும் என்றதாயிற்று. இது த்வரையாலே நின்ற நிலையே அதிகாரிகளாகும் நிலைமை கூறியபடி. இதுகேட்ட பெருமாள் "நகச்சிந்நாபராத்யதி" என்கிற நியாயத்தாலே "இவ்வுலகில் யார்தான்

அபராதம் செய்யவில்லை? எல்லோரும் அபராதிகளே; அவர்கள் எல்லோரும் ஸுலபமாகவே நம்ஸம்பந்தஜ்ஞான முடையராய் உஜ்ஜீவன மடையும்படி மந்த்ரங்களையும், மந்த்ரப்ரதானம் செய்யும் ஆசார்யர்களையும் ப்ரவர்த்திப்பித்திருக்கிறோம். அதுகொண்டு லகுவாக உஜ்ஜீவனம் அடையாலமே!" என்று சொல்ல, அநாத்யவித்யா வாசனையால் உள்ள அஜ்ஞானத்தாலே நாங்கள் செய்து போந்த பாபசமூஹங்கள் கழியாமையாலே தேஹாத்மபுத்திபண்ணிப்போந்த எங்களுக்குத் தத்வஜ்ஞானமுண்டாக மாட்டாதென்னுங் கருத்தால், "பொய்மதிமேவும் எம்மை அடைக்கலம் கொண்டருளவேணும்" என்கிறார் ஆசார்யர். (பொய்மதி என்றது அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞானங்களை. அவை அநாத்மாவான சரீரத்தில் ஆத்மபுத்தி பண்ணுகையும், அக்ருத்யங்களை க்ருத்யமாக எண்ணுகையும், பரதந்திரர்களான தம்மை ஸ்வதந்த்ரர்களாக எண்ணுகையும்.) இது கேட்ட பெருமாள் இப்படிப் பொய்மதி மேவுமவர்களைத் திருத்திப் பணி கொள்ள நினைத்தே பாபநாசகங்களான "ச்ருதி: ஸ்ம்ருதி: மமைவாஜ்ஞா" என்னும்படி வேதாதி சாஸ்த்ரங்களைப் பிரவர்த்திப்பித்திருக்கிறோம். அவற்றில் சொல்லுகிறபடி கர்மானுஷ்டானங்களைச் செய்துவந்தால் பாபநாசம் பிறக்கவே, பொய்மதியொழிய மெய்மதியில் உஜ்ஜீவனமடையலாம் என்ன.

ச்ருதி ஸ்ம்ருதி விஹிதாசாரங்களில் எங்களுக்குப் பரிச்சயமும் அதிகாரமும் இல்லாமையாலே, விருத்தம் கலித்துறை மேவும் எம்மை அடைக்கலம் கொள்ளவேண்டும் என்கிறார் ஆசார்யர். (விருத்தமாவது - ச்ருதி ஸ்ம்ருதிகளுக்கு மாறுபட்டுச் செய்யும் விருத்தாசாரங்கள். அவை கலித்துறைதலாவது - நாள்தோறும் ஒன்று பத்து நூறு ஆயிரம் கோடியாய் கலித்து நிலைபெற்றிருக்கை. இது 'தீவினையாரஞ்சார் விழுமியோர் அஞ்சுவர் தீவினை என்னும் செருக்கு' என்னும் படியாயிற்று.) இதுகேட்ட பெருமாள் "அப்யக்ருத்ய சதம் க்ருத்வா குடும்ப பரணம் குரு" என்கிறபடியே அர்த்தகாமபரரான ஸம்ஸாரி சேதனர்களுக்கு இடையிடையே தநார்ஜநாதிகளில் அக்ருத்ய

கரணங்களும் ஸம்பாவிதமாயிருக்கும். ஆனாலும் வாடினேன்வாடி வருந்தினேன் என்பது போலும் பச்சாத்தாப முண்டேல், துஷ்க்ருத்யங்களைச் சொல்லித்துக்கித்தால் (செய்யக்கூடாத பாபகர்மங்களைச் செய்து துர்க்கதியடைந்தேன் என்னும் பச்சாத்தாப முண்டானால்) பாபம் அத்தனையும் போமே என்ன, "தனமானமதாந்விதா" என்னும்படி அக்ருத்யகரணத்தாலுண்டான ஆசுரஸம்பத்தியாலும், துர்மானத்தாலும், துராசையாலும் மதாந்விதராய் உள்ள எங்களுக்குப் பரிதாபமுண்டாக மாட்டாது, என்னுங்கருத்தால் "அழல் மதம்" மேவும் எம்மை அடைக்கலம் கொள்ளவேணும் என்கிறார். அழல்மதம்- அழல்போலும் மதம். அதாவது அழல் ஆசிரயாசியாகையாலே, ஆசிரயமான பொருள்களை எல்லாம் குறைவற நசிப்பித்தல்லது தான் நசியாதவாறு போலே மதமும் தனக்கு ஆச்ரயமான சேதனரை நசிப்பித்தல்லது தான் நசியாதிருக்கை. இதனால் பாபாநலதாபமாற்றமாட்டாத த்வரை சூசிதமாயிற்று. இன்னும் "நாக்நிஸ்த்ருப்யதி காஷ்டாநாம்" என்கிறபடியே அழல் போலே அபிமதவிஷயங்களைப் பற்றுதலில் திருப்தியடையாத எம்மை என்னவுமாம். இதுகேட்ட பெருமாள் யாதேனும் ஒரு யாத்ருச்சிகாதி ஸுக்ருத விசேஷமுண்டானால் அதுகொண்டு உஜ்ஜீவிக்கலாமே என்ன, இப்படி மஹாபாபிகளான எங்களுக்கு யாத்ருச்சிக சுகிருதமும் உண்டாகமாட்டாது. ஒரு வேளை உண்டாகக் கூடுமானாலும் அது சுக்ருத விசேஷமாகையால் 'ஸ்வசேஷ பூதேன .... தேவ: ப்ரக்ரமதே ஸ்வயம்' என்கிறபடியே எங்களைக் காரணமாகக் கொண்டு தேவரீரே கர்த்தாவாயிருந்து செய்கையாலே அமிர்த கலசத்தின் அகப்பை போலே எங்களுக்கு அந்த சுகிருதபலபோகங்களில் அந்வயமில்லை. துஷ்க்ருதங்களைச் செய்ய வேண்டாமென்று நியமித்திருக்கச்செய்தே அத்தை அதிக்ரமித்து ஸ்வஸ்வாதந்த்ரிய புத்தியோடே செய்து போந்தமையால் பாபபலப்ப்ராப்தியில் மட்டும் எங்களுக்கு அந்வயமுள்ளது. ஆகையாலே ஆகிஞ்சன்ய அனந்ய கதித்வமுள்ள

எங்களைப் பரிக்ரஹிக்கவேணும் என்னும் கருத்தால் "வேறினியென்" என்கிறார் ஆசார்யர்.

"வேறினியென்" என்றதை இனி வேறு என் எனக்கூட்டுக. இதனுள் "இனி" என்றது இப்படி நாங்கள் மஹா பாபிகளான பிறகு என்பதாம். 'வேறுஎன்' என்றது தேவரீரைத் தவிர வேறுகதி யொன்றுமில்லை என்றபடி. இதுகேட்டபெருமாள் இப்படித் திருந்தாதார்களைத் திருத்திப் பணிகொள்ள நினைத்து நாம் பிரவர்த்திப்பித்த வேதாதி சாஸ்திரங்களாலும் திருந்தாதாரைத் திருத்திப் பணிகொள்ளவேண்டி ஸஜாதீயர்களாய் வந்து அவதரித்துத் திராவிட வேதாந்த சாஸ்திரங்களைப் பிரவர்த்திப்பித்திருக்கும் ஆழ்வார் ஆசார்யர்களுடைய திவ்ய ஸூக்திகளாலே திருந்தலாகாதோ வென்ன, அவற்றால் சொல்லப்படும் திருத்தங்கள் சாத்விகப் ப்ரகிருதியும் தெய்வ ஸம்பத்தியுமுடையார் மனத்திடைச்சேருமேயல்லது தாமஸப் ப்ரகிருதியும் ஆஸுரஸம் பத்தியுமுள்ள எங்கள் மனத்தில் சேரா என்னும் கருத்தால் "திருத்தம் மனத்தினிற் சேராவெம்மை அடைக்கலம் கொண்டருள்" என்கிறார் ஆசார்யர். அதுகேட்ட பெருமாளும் "நம்மையடைபவர்களைத் தடுப்பாரில்லாமையால் நீங்களே நேரில் வந்து அடையாலமே, அடைக்கலம் கொள்ளவேணும் என்று பிரார்த்திப்பானேன்" என்ன, "தெய்வநாயக" என்கிறார் ஆசார்யர். இதன் கருத்து: அயர்வறுமமரர்கள் அதிபதியாய், உயர்வற உயர்நலம் உடையவனாயிருக்கும் உன்னுடைய உச்சிராய நிலை எங்கே, "பதிதம் பீம பவார்ணவோதரே" என்னும்படி ஸம்ஸார சாகரத்தில் நிமக்நராயிக்கும் எங்கள் வீழ்ச்சி நிலை எங்கே? பாபபூமிஷ்டர்களான நாங்கள் ஸ்வஸ்வாதந்த்ரிய புத்தியோடே உன்னை வந்தடைவது திரிசங்கு என்னும் சண்டாளன் அச்சரீரத்தோடே தேவலோகம் புகவிரும்பினாற்போலும் அவத்யகரமாகும். அன்றியும் "ப்ரியோஹி ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸச மம ப்ரிய:" என்று தேவரீரே சொல்லியிருப்பதால் வேகிற வீட்டில் தீயை அவிப்பதற்கு வெட்டப்போகிற கிணறு போலே, எங்கள் த்வரைக்கு விளம்பிக்கும்

உபாயாந்தரானுஷ்டானம் ஸார்த்தமாகாதாகையாலே தேவரீரே அடைக்கலம் கொண்டருளவேணும் என்பதாம். அதுகேட்ட பெருமாள் உபாயாந்தர நிஷ்டர்களை விளம்பிக்கவைத்து ஸாபராதிகளைத் த்வரையாகப் பரிக்கிரஹிப்பதில் வைஷம்ய நைர்க்கிருண்யம் வாராமைப் பொருட்டு யாத்ருச்சிகாதி சுக்ருத விசேஷம் ஏதேனுமிருந்தால் அத்தை வ்யாஜீகரித்துப் பரிக்கிரஹிக்கப் பார்க்கிறோம்" என்ன, பின்னும் "தெய்வநாயக" என்கிறார் ஆசார்யர். இதன் கருத்து: இவ்வுலகத்தில் ஜனநாயகனான அரசன் தன் ஆஜ்ஞாதிலங்கனம் முதலான துஷ்க்ருத்யம் செய்த துஷ்டர்களைச் சிறைச்சாலையில் அடைத்துவைத்துத் தண்டித்தாலும் ஒருசமயம் அவர்களுடைய சிக்ஷாகால மத்தியிலே அந்த துஷ்டர்களைச் சிறையிலிருந்து விடுவிப்பதுண்டே! அது போல தெய்வநாயகனான நீ நாங்கள் செய்துபோந்த துஷ்க்ருத்யங்களுக்கு சிக்ஷையாக எங்களை இருள்தருமா ஞாலச் சிறையிலிட்டிருந்தாலும் இடையே உன்னுடைய நிரங்குச ஸ்வாதந்த்ரியத்தாலே சிறைவீடு செய்தால் உனக்கென்ன குறையுண்டாகும் என்ன, ஜனநாயகனான அரசனாகும் அவனுக்கு புத்திரஜனனம், சத்ருஹனனம், ஷஷ்டியப்தபூர்த்தி, சதாபிஷேகம் முதலிய சம்பிரமக் கொண்டாட்டங்களை வ்யாஜீகரித்தே சிறைவீடு செய்கிறான். அப்படி ஏதேனும் ஒருவ்யாஜம் தேடிப் பார்க்கிறோம் என்பானாய் (அருள் என்னும் குணம் தனக்குத் தெரியாமலே) 'வேறினியென்' என்றான். அது கேட்ட ஆசார்யர் "க்ருபயா கேவலம் ஆத்மசாத்குரு" என்று பெரிய முதலியார் சாதித்தருளியபடியே (மத்யம புருஷக்ரியா பதத்தாலே) "நின் வருத்தம் பொறாவருளால் மன்னடைக்கலங் கொண்டருள்" என்கிறார். இதன் கருத்து: தேவரீரிடத்தில் அவ்யாஜகருணை என்னும் உத்தம குணமிருக்கச் செய்தே அதை நீர் அறியாததுபோல் எங்களிடத்தில் ஏதேனும் வ்யாஜ முண்டா என்று தேடுகிறீர்; அப்படி வ்யாஜீகரிக்கத்தக்க யாத்ருச்சிகாதி சுக்ருத விசேஷம் ஏதேனும் இருக்குமானாலும் அதுசுகிர்தகோடியில் சேர்தலாலே "ஸ்வசேஷ பூதநேமயா தேவ:ப்ரக்ரமதேஸ்வயம்" என்கிறபடி சுகிர்தங்களுக்கெல்லாம் நீயே கர்த்தாவாய் இருந்துகொண்டு எங்களைக்

கரணமாகக் கொண்டு செய்கையாலே அமிர்தகலசத்திலகப்பை போலுள்ள எங்களுக்கு அதின் பலபோகங்களில் அந்வயமில்லாமையாலே எங்களிடத்தில் யாத்ருச்சிகாதி ஸுக்ருதவிசேஷம் ஒன்றும் இல்லையாயிற்று. ஆகவே இது உன்னிடத்திலுள்ள அவ்யாஜகருணை என்னும் உத்தம குணத்தை வ்யாஜீகரித்து அடைக்கலம் கொள்ளவேணும் என்பதாம்.

"வருத்தம் பொறாவருளால்" என்றது பிரஜைகளாகிற சேதனர் படும் வருத்தங்கண்டு ஆற்றமாட்டாத லோகமாதாவான பெரிய பிராட்டியாரை அதிதெய்வமாகவுடைய அருளால் என்பதாம். "நின்வருத்தம் பொறாவருளால்" என்றது நாங்கள்படுந்துயரங்கண்டு ஸஹிக்க மாட்டாதே அருள்வடிவான பெரிய பிராட்டியாரை வ்யாஜீகரித்து அடைக்கலம் கொண்டருள் என்பதாம். இன்னும் நிமித்தார்தக த்ருதீயையாய் எங்கள் வருத்தங் கண்டாற்றாத பெரிய பிராட்டியார் ஆற்றியிருக்க வேண்டுமென்பதை வ்யாஜீகரித்து எம்மை அடைக்கலங் கொண்டருள் என்பதுமாம். இன்னும் அது ஹேதுத்ருதீயையாய் பெரிய பிராட்டியார் புருஷகாரங் கொண்டு அடைக்கலங்கொண்டருள் என்பதுமாம். இவையெல்லம் கேட்ட பெருமாள் நான் தெய்வநாயகனாய் இருக்கும் என் பரத்வநிலை கொண்டு நீங்களே தாமேயாய் வந்து என்னை அடையமாட்டாமற் பரிதபிக்கும் கஷ்டம் தீரவேண்டியே இத்திருவஹீந்திரபுரத்தில் பக்தபராதீனனாய் அத்யந்தம் சௌலப்யமுள்ள அர்ச்சா மூர்த்தியாய் அவதரித்துக் கோயில் கொண்டிருப்பதாலே நீங்களெல்லோரும் ஸ்வேச்சையாகவே எம்மை அடைந்து யோக்யதானுகுணமான கைங்கர்யங்களைச் செய்துகொண்டு உஜ்ஜீவியுங் களென்று நியமித்து அர்ச்சா சமாதியடையக்கண்டு ஆசார்யரும் சிஷ்யர்களும் குற்றேவல் கொண்டு திருவீதி சீத்தல் முதலாகத் திருப்பல்லாண்டு சேவிப்பது அறுதியான பகவத்கைங்கரியங்களை அவரவர் யோக்யதானுகுணமாகச் செய்துபோந்தார்கள்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

|| ஸ்ரீமந் நாத[2]முனயே நம: ||

# நாத முனிகளும் பாஷைத் தமிழும்

ச்ரிய:பதியான ஸர்வேஸ்வரன் அவதாரங்களில் துஷ்டநிக்ரஹ சிஷ்ட பரிபாலனமும் சரணாகத ஸம்ரக்ஷணமான ஸ்வதர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு தர்ம ஸம்ஸ்தாபநம் பண்ணி ஸாது ஜனங்களெல்லாம் தன்னை அடைந்து உஜ்ஜீவிக்கச்செய்தருளுவன். அவ்வாறு அவனை அடையுமவர்கள் அவனுக்குச் செய்யக்கடவனவான சேஷவ்ருத்திகளை, ஸர்வசேஷியான தானே செய்து காட்டல் இயலாமையாலே அவற்றை அவர்கள் அறிந்துகொண்டு அனுஷ்டிக்கும் பொருட்டு, பகவதநவரத பரிசர்யாநிரதர்களான நித்யஸூரிகளை ஆழ்வார்களாகவும் ஆசார்யர்களாகவும் அவதரிப்பித்து அவர்கள் உபதேசத்தாலும் அனுஷ்டானத்தாலும் சேதநரைத் திருத்திப் பணிகொள்ளச் செய்தருளுவன்.

இவ்விஷயம் 'பொலிக பொலிக' என்னும் திருவாய்மொழியாலே (5-2) ப்ரஸித்தம். அந்த க்ரமத்திலே நித்யஸூரிகளில் தலைவரான ஸேனை முதலியாரை ப்ரபந்ந குலத் தலைவரான ஆழ்வாராக அவதரிப்பித்துத் திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களைச் செய்தருளச்செய்து அவற்றால் சேதனருக்குப் பகவச்சேஷ வ்ருத்தியில் ருசியுண்டாக்கி ப்ரவர்த்திப்பித்தான்.

அந்த ப்ரபந்தங்கள் கால க்ரமத்திலே லுப்தமாய் ஒரு சிறிதே அனுஸந்தானத்தில் இருந்தன. இந்த ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீமந் நாதமுனிகள் திருக்குடந்தையேற எழுந்தருளிக் குடந்தையில் கிடந்தானைச் சேவித்திருக்கச்செய்தே, அங்குள்ளோர் அத்திருப்பதி விஷயமான 'ஆராவமுதே' என்னும் திருவாய்மொழியை ஸேவிக்க, அதன் அர்த்த

விசேஷங்கண்டு அத்யாச்சர்யப்பட்டு அதன் சாத்துப் பாட்டையும் கேட்டருளினார். அதில் 'ஆயிரத்துள் இப்பத்து' என்ற சொற்றொடர் கேட்டவாறே இத்தகைய அர்த்த விசேஷங்களுள்ள பாட்டுக்கள் ஆயிரம் உண்டாயிருக்கவேண்டும் என்று திருவுள்ளம் பற்றி, அவற்றைத் தேடிக் கொள்ள விரும்பி, அவற்றின் அவதாரபூமியான ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளி, அங்குள்ளாரை விசாரிக்க, அவர்கள் அப்படிப்பட்ட க்ரந்தங்கள் இப்பொழுது இங்கு ஒன்றுமில்லை என்றும், 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்னும் திவ்ய ப்ரபந்தத்தை லக்ஷம் உரு ஜபித்து ஆழ்வாரை ப்ரார்த்தித்தால் அவர் அர்ச்சா ஸமாதி கடந்து திருவாய்மலர்ந்தருளுவர் என்றும் சொன்னார்கள். இவரும் அப்படியே செய்து தெண்டனிட்டு நிற்க, ஆழ்வார் திருத்திரைக்குள் எழுந்தருளியிருந்தே திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களை யெல்லாம் திருவாய்மலர்ந்தருள நாதமுனிகள் ஆசார்யோச் சாரணாநுச்சாரண ரூபமான உபதேசத்தால் அடைந்தார் என்பது ஐதிஹ்யம். இந்த ஐதிஹ்யத்தை,

*'நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே'*

என்னும் ஆழ்வார் வாழித்திருநாமமும்,

*'அண்டகோளத்தாரென்னும் ஆரியத் தமிழால் அன்று*
*தண்டமிழ்ச் சங்கம் வென்ற சடகோபர் தாமே சிற்பம்*
*கண்டதோர் வடிவாற் பேசத் திரைப்புறத்திருந்திக்காலத்*
*துண்டெனப் பதின்மர் பாடல் உத்தரித்தவர் தாள் போற்றி'*

என்று கூடற்புராணத்துள் நாத முனிகளுக்கு வணக்கம் கூறும் பாசுரமும் ஆதரித்துப் பேசுதலால் அறியலாம்.

யோக ப்ரபாவத்தாலே ஆயுஷ்ப்ரமாணம் கடந்து நீண்ட காலம் எழுந்தருளியிருந்து வேத வேதாந்தார்த்தங்களை யெல்லாம் விமர்சித்து

விசதீகரித்த நாத முனிகள் திருவுள்ளத்திலே தமிழ் வேத ஸாகரம் தேங்கி நிலைபெற்றது. அத்தாலே

'ஸஹஸ்ர சாகோ²ப¹நிஷத்¹ ஸமாக³மம்'

என்று சடகோப வாங்மயமான திருவாய்மொழி முதலிய திவ்ய ப்ரபந்தங்களை வேத துல்ய ப்ரமாணமாகத் திருவுள்ளம் பற்றி, வேத வியாஸ பகவான் கீர்வாண வேதங்களை ரிக் யஜுஸ் ஸாமங்களாகப் பகுத்து வகுத்தமைத்தாப் போலே இவரும் த்ராவிட வேதங்களை இது இது இன்னின்ன வேத ஸாரம் என்றறிந்து, திருவாய்மொழி திருமொழி பெரிய திருமொழி இயற்பா என்று திருநாமம் சாத்தி வகுத்தமைத்து, தொண்டர்க்கமுதுண்ணச் சொல்லிய சொன்மாலைகளான அத்தமிழ் வேதத்தை, அதன் ருசியறிந்த விப்ர குலத்தவர் வடமொழி வேதத்தோடொக்க ஆசார்ய முகமாக அத்யயநம் பண்ணிவரும்படி நியமித்தருளினார்.

இப்படி வேத துல்ய ப்ரமாணமாயிருந்தாலும் சிஷ்ட பரிக்ரஹம் உண்டோ என்கிற சங்கை உண்டாகாதபடி நாத முனிகள் பரிக்ரஹித்தபடி கொண்டு சிஷ்ட பரிக்ரஹமுண்டென்று காட்டத் திருவுள்ளம்பற்றி, ஆழ்வார் தாமே,

*'பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம்'*

என்று திருவாய்மொழியை விசேஷிக்கிறார்.

இங்கு பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் என்னும் விசேஷணதளங்கள் மூன்றாலும் நாத முனிகள் என்னும் விசேஷார்த்தம் ஸூசகமாயிற்று. இத்தாலே நாத முனிகள் 'பாலேய் தமிழர்' என்றும், அவர்க்கு ஆத்யந்தம் அபிமதமாய அவர் ருசியோடு அப்யஸித்துப் போந்த திவ்யப்ரபந்தங்கள் 'பாலேய் தமிழ்' என்றும் கூறியவாறாயிற்று.

திவ்ய ப்ரபந்தங்கள் பாலேய் தமிழாதல் எங்ஙனமென்னில் - திவ்ய ப்ரபந்தங்களாகிய திராவிட வேத ஸாகரம், க்ஷீர ஸாகரம் போலே எம்பெருமானுக்கு வாஸஸ்தானமாயும், உத்க்ருஷ்ட பதார்த்தஸம் ருத்தியுடையதாயும், மாதுர்யாதி குணங்களுடையதாயும் இருக்கையாலே அதனை 'பாலேய் தமிழ்' என்றார் என்க. அன்றிக்கே கர்ம ஜன்மாக்களுக்குப் பால் தராக போஷக போக்யமாயிருப்பது போலே ஞான ஜன்மாக்களுக்குத் திவ்ய ப்ரபந்தங்கள் தாரக போஷக போக்ய மாயிருக்கையாலே அவற்றைப் 'பாலேய் தமிழ்' என்றாரென்னவுமாம்.

இப்படிப் பாலேய் தமிழ் கொண்டு நாத முனிகளை விசேஷித்திருப்பது அவருக்குள்ள சிஷ்ட வைசிஷ்ட்யம் தோற்றுகைக்கு. இதனால் பாலேய் தமிழரே பாலேய் தமிழின் திறமறிந்து பரிக்ரஹிப்பதற்கு உரியர் என்பதாயிற்று.

இனி 'இசைகாரர்' என்றதும் அவரையே. இவர் கான கீத்யா பாரங்கதராய், தேவ கானமும் தெரிந்து திவ்ய ப்ரபந்தங்களுக்கு தாள ராகங்கள் வகுத்தமைத்து ஆழ்வார் நியமனப்படியே பாடியாடிப் பணியுமவராகையாலே 'இசைகாரர்' என்றாரென்பது. இங்கு இசை என்றது ஓசைக்கும் பெயராய்ப் பாட்டிசையையும் தாளவோசையையும் காட்டுகிறது. இவ்வர்த்தத்தை ஸ்ரீமத் வேதாந்த தேசிகர்

*'காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத்*
*தாளம் வழங்கித் தமிழ் மறை இன்னிசை தந்த வள்ளல்'*

என்று ஸாதித்திருப்பதாலும் அறியலாம். இதனால் திவ்யப்ரபந்தங்கள் தாள ராகங்களோடு கூடிய பாசுரங்களாலானமையால் அந்தந்த ஸ்வரங்களில் பாண்டியத்யமும் ஸ்ரவநுஷ்டானமும் கொண்டு நாதமுனிகளின் சிஷ்ட வைசிஷ்ட்யம் காட்டியவாறாயிற்று.

இன்னும், நாத முனிகள் பகவத் பக்தி நிஷ்டையுடையவ ராகையாலே அவரைப் 'பத்தர்' என்கிறார். அவர் பகவத் பக்தி நிஷ்டையுடையவர் என்பதை

*'நாதா$^{2}$ய முநயே அகா$^{3}$த$^{4}$ ப$^{4}$க$^{3}$வத்ப$^{4}$க்$^{1}$தி$^{1}$ ஸிந்த$^{4}$வே',*

என்று ஆளவந்தார் அருளிச் செய்தமையால் அறியலாம்.

அவருக்கு ஞானவைராக்யாதி குண கணங்கள் பலவும் இருந்தாலும் அத்யந்தம் அபிருசியாயுள்ள குணம் பகவத் பக்தியாகையாலே திருவாய் மொழியை 'பக்தாம்ருதம்' என்று நிரூபித்திருப்பதும் நோக்கத்தகும்.

பாலேய் தமிழர் இத்யாதியில் பகுவசன ப்ரயோகம் ஒருவன் புத்ரனானாலும் சிஷ்யனானாலும் பாகவதனாயிருந்தால் அவன் கௌரவிக்கத்தக்கவன் என்னும் ரஹஸ்யார்த்த த்யோதகமாயிற்று.

இனி 'பரவும் ஆயிரம்' என்றது பாலேய் தமிழரும் இசைகாரரும் பத்தருமாயுள்ள நாதமுனிகள் பரவும் ஆயிரம் பாசுரங்களுடைய திருவாய் மொழி என்பதாம். அவர் பரவியவாறு எங்ஙனேஎன்னில்:- திருவாய் மொழியின் தனியனில்

*'ஸஹஸ்ரசாகோ$^{2}$ப$^{1}$நிஷத்$^{1}$ஸமாக$^{3}$மம்*
*நமாம்யஹம் த்$^{3}$ராவிட$^{3}$ வேத$^{3}$ஸாக$^{3}$ரம்'*

என்று அவரே திருவாய்மலர்ந்தருளினமையால் அறியலாம்.

இன்னும் பகுவசனத்தைப் பகுர்வ த்யோதமாகவே கொண்டு மதுர கவியாழ்வாராலும் பரிக்ரஹிக்கப்பட்டதென்று சிஷ்ட பரிக்ரஹம் காட்டியிருப்பதாகக் கொள்வதும் உண்டு. மதுரகவியாழ்வாரைப் 'பாலேய் தமிழர்' என்பதற்கு **மதுரகவிகள்** என்னும் அவர் திருநாமமே நிரூபகமாகும். 'இசைகாரர்' என்பதற்கு 'குருகூர் நம்பி பாவின் **இன்னிசை பாடித் திரிவனே'** என்று அவர்தாமே ஸாதித்திருப்பது நிரூபகமாம். 'பத்தர்' என்பதற்கு **அன்பனாய்** மதுரகவி சொன்ன சொல்' என்ற அவருடைய

திவ்ய ஸூக்தியே நிரூபகமாம். அவர் பரவும் ஆயிரம் என்பதற்கு 'தேவு **மற்றறியேன்**' என்ற குறிப்பால் பரவக்கடவதான பரதெய்வத்தையும் பரவாமலே திருவாய்மொழியைப் பரவுவேன் என்ற பொருள் தோன்றக் கூறினமைகொண்டு கண்டு கொள்க.

இன்னும் பகுவசனத்தாலே பாலேய் தமிழராயும் இசைகாரராயும் பத்தராயுமுள்ள திருவரங்கப்பெருமாளரையர் போலும் சிஷ்டாக்ரகண்யர்களும் விவக்ஷிதராவர்.

இவ்வாறு ஆழ்வார் தாமே பாலேய் தமிழ்கொண்டு நாதமுனிகளையும் நாதமுனிகளைக்கொண்டு பாலேய் தமிழையும் தத்தத் ப்ரபாவாதிசயம் தோன்ற விசேஷிக்கச்செய்தே, நாம் அந்த ப்ரபாவங்களை அறிந்து சொல்லுதற்கு என்ன தகுதியுடையோமென்று நிர்வேதமடைவோமாக.

॥ ஸ்ரீமந் நாத²முனயே நம: ॥